श्रीं

# ॥ श्री ललितात्रिशती स्तोत्रम् ॥

# ஸ்ரீ லலிதா த்ரிசதி ஸ்தோத்திரம்

## (மூலமும்)

த்ரிசதீ நாமாக்களுக்கு ஸ்ரீ சங்கர பகவத்பாதாள்
அருளிச் செய்த வடமொழி பாஷ்யத்தைத் தழுவி

ஸ்ரீ பிரஹ்ம வித்யா விமர்சினீ ஸபையின்
அக்ராஸனரும் ஸ்தாபகருமாகிய
**பிரஹ்மஸ்ரீ அருட்கவி ந. சுப்ரமணிய அய்யர்**
அவர்களால் இயற்றப்பட்ட

## "சந்திரிகை"

என்னும்

## தமிழ் விருத்தியுரையும்

---

N. RAJAM & CO.,
Vepery, Madras.

 1938 [RE[illegible]



பிரஹ்மஶ்ரீ ந. சுப்ரமணிய அய்யர்

# முன்னுரை.

---

நூல் வரலாறு:—

ஸ்ரீலலிதா த்ரிசதீ நாம ஸ்தோத்ர மென்னும் இந்நூலானது ஸ்ரீ ப்ரஹ்மாண்ட புராணம், உத்தர கண்டத்தில் ஸ்ரீ ஹயக்ரீவருக்கும் அகஸ்தியருக்கும் நடந்த ஸம்வாத வடிவ லலிதோபாக்கியானத்தின் ஸ்தோத்ர கண்டத்திலுள்ள தாகும்.

லலிதோபாக்யானமானது சரித்ர கண்டம், மாஹாத்மிய கண்டம், ந்யாஸகண்டம், பூஜாகண்டம், புரஶ்சரண கண்டம், ஹோமகண்டம், ஸ்தோத்ரகண்டம், ரஹஸ்ய கண்ட மெனப் பலபிரிவுகளை யுடையதாகும்.

சரித்ரகண்டத்தில் ஸ்ரீ லலிதாதேவியின் ப்ராதுர்ப்பாவம், ஸ்ரீ நகர நிர்மாணம், காமேஶ்வர விவாஹம், பட்டாபிஷேகம், பண்டாஸுர வதம் முதலிய விஷயங்களும், மாஹாத்மிய கண்டத்தில், * ஸ்ரீ நகரத்தின் மஹிமை, ஸ்ரீ சக்ரப் ப்ரபாவம், † ஸ்ரீ வித்யா பஞ்சதஶாக்ஷரியின் சிறப்பு முதலியனவும், ந்யாஸகண்டத்தில், கணேஶ, க்ரஹ, நக்ஷத்ர,

---

* ஸ்ரீ ப்ரஹ்மவித்யா விமர்சினீ ஸபையாரால் வெளியிடப்பட்ட ஸ்ரீ நகரவிமர்சம் பார்க்கவும்.

† ஷை சபையாரால் வெளியிடப்பட்ட வரிவஸ்யாரஹஸ்யம் என்னும் நூலில் விஸ்தாரமாய் அறியலாம்.

# முன்னுரை.

நூல் வரலாறு :—

ஸ்ரீலலிதா த்ரிஶதீ நாம ஸ்தோத்திர மென்னும் இந்நூலானது ஸ்ரீ பிரஹ்மாண்ட புராணம், உத்தர கண்டத்தில் ஸ்ரீ ஹயக்ரீவருக்கும் அகஸ்தியருக்கும் நடந்த ஸம்வாத வடிவ லலிதோபாக்கியானத்தின் ஸ்தோத்திர கண்டத்திலுள்ள தாகும்.

லலிதோபாக்கியானமானது சரித்திரகண்டம், மாஹாத்மிய கண்டம், ந்யாஸகண்டம், பூஜாகண்டம், புரஶ்சரண கண்டம், ஹோமகண்டம், ஸ்தோத்திரகண்டம், ரஹஸ்ய கண்ட மெனப் பலபிரிவுகளை யுடையதாகும்.

சரித்திரகண்டத்தில் ஸ்ரீ லலிதாதேவியின் பிராதுர்ப்பாவம், ஸ்ரீ நகர நிர்மாணம், காமேஶ்வரவிவாஹம், பட்டாபிஷேகம், பண்டாஸுரவதம் முதலிய விஷயங்களும், மாஹாத்மிய கண்டத்தில், * ஸ்ரீ நகரத்தின் மஹிமை, ஸ்ரீ சக்கிரப் பிரபாவம், † ஸ்ரீ வித்யா பஞ்சதஶாக்ஷரியின் சிறப்பு முதலியனவும், ந்யாஸகண்டத்தில், கணேஶ, க்ரஹ, நக்ஷத்திர,

---

* ஸ்ரீ பிரஹ்மவித்யா விமர்சினீ ஸபையாரால் வெளியிடப்பட்ட ஸ்ரீ நகரவிமர்சம் பார்க்கவும்.

† ஷை சபையாரால் வெளியிடப்பட்ட வரிவஸ்யாரஹஸ்யம் என்னும் நூலில் விஸ்தாரமாய் அறியலாம்.

யோகினீ, ராசி, பீட மென்னும் ஷோடா ந்யாஸமும், பிர பஞ்சம், புவனம், மூர்த்தி, மந்த்ரம், தேவதை, மாத்ருகை என்று கூறப்படும் மஹாஷோடா ந்யாஸமும், இன்னும் இதர ந்யாஸங்களும், பூஜா கண்டத்தில், அந்தர்யாக பஹிர் யாகக் கிரமங்களும், பூஜைக்கு வேண்டிய மற்றும் இதரமான விஷயங்களும் புரஶ்சரண கண்டத்தில், ஜபலக்ஷணம், அவஸ் தாபஞ்சகம், சூன்யஷட்கம் விஷுவத்ஸப்தகம், சக்கிரநவகம் முதலியவற்றின் பாவனையும், ஜபத்தின், விதி, மந்த்ர ஸித்தி யின் ஸ்வரூபம், ஸித்தி ஸூசகங்கள் முதலியனவும், ரஹஸ்ய கண்டத்தில் ஸ்ரீசக்கிரம், ஸ்ரீ வித்யை, பரதேவதை, குருநா தர்,* ஸாதகனை உபாஸகன் இவர்களுக்குள்ள ஐக்கியம், தத்துவ விமர்சம், பிரகாச விமர்சரூப சிவஶக்திகளின் ஸாமரஸ்யம் முதலிய சிறந்த விஷயங்களும் கூறப்பட்டிருக் கின்றன. ஸ்தோத்திர கண்டத்தில் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமமும், இன்னும் இதர ஸ்தோத்திரங்களும், த்ரிஶதிநாம ஸ்தோத்திரமும் கூறப்பட்டுள்ளன.

மேற்கூறிய ஸ்ரீ லலிதோபாக்கியானத்தில் எல்லாக் கண்டங்களிலுமுள்ள எல்லாவிஷயங்களையும், ஸ்தோத்திர கண்டத்திலுள்ள ஸ்தோத்திரங்கள் எல்லாவற்றையும் ஸ்ரீ லோபாமுத்திரையின் பர்த்தாவாகும் அகஸ்தியர், ஸ்ரீ மஹா விஷ்ணு ஸ்வரூபரான ஹயக்ரீவர்பால் மிகச் சாவதானமாய்க் கேட்டும் அகஸ்தியருக்குச் சித்தசாந்தி யுண்டாகவில்லை. இத் திரிஶதீ நாம ஸ்தோத்திரத்தைச் சிரவணஞ்செய்த பின்னரே அவருக்குச் சித்த சாந்தி யுண்டாயிற்று ; எனின், இத் திரி

* ஸ்ரீ பிரஹ்மவித்யா விமர்சினீ சபையாரால் வெளியிடப் பட்ட ஸ்ரீ குருதத்துவ விமர்சம் என்னும் நூலைப் பார்க்கவும்.

ஶதீ ஸ்தோத்திரத்தின் மஹிமை என்னென்று கூறலாம். இந்த ஸ்தோத்திரம் ஸ்ரீ வித்யா காதிபஞ்சதசீயின் பதினைந்து வர்ணாத்மகமாய் விளங்கி ஒவ்வொரு வர்ணத்திற்கும் இருபது இருபது நாமங்கள் வீதம் முந்நூறாக அமைந்துள்ளது.

இம் முந்நூறு நாமாக்களும் ஸ்ரீ பஞ்சதஶாக்ஷரீ மஹா வித்யையின் நாமைகதேசார்த்த ஸ்வரூபமானவையாகும். இவ்விஷயம்,

कल्याण्येकाक्षर्याविशित्री चापि ललिता च ।
इत्थं नामत्रिशतीवाच्योऽर्थस्तत्तदक्षरस्यापि ॥

என்று வரிவஸ்யா ரஹஸ்யத்தில் கூறப்பட்டுள்ளது.

ஸ்ரீ வித்யையின் மஹிமை :—ஸ்ரீ வித்யையென்பது பிரஹ்மவித்யையேயாகும். உலகத்தில் யாவருக்கும் இஷ்டமான ஸுகஸாதனத்தில் பிரவர்த்தியும், அநிஷ்டமான துக்க ஸாதனத்தில் நிவர்த்தியும், இரண்டு மல்லாதவற்றில் உபேக்ஷையும் உண்டாகின்றன வென்பது மிகப் பிரஸித்தமாம். இஷ்டமான ஸுகஸாதனப் பிரவர்த்தியிலும், ஒரு வஸ்துவை விட மற்றொரு வஸ்துவில் அதிகப் பிரியமும், வேறொரு வஸ்துவில் மற்றதைவிட இன்னும் அதிகப் பிரியமும் ஏற்படுகின்றன. இங்ஙன முள்ள பிரிய வஸ்துக்கள் எல்லாவற்றிலும் பரமப் பிரியமான வஸ்து ஆத்மாவேயாகும். "आत्मनस्तु कामाय सर्वं प्रियं भवति" "आत्मलाभान्न परं विद्यते" என்பது ஶ்ருதி. தனது உண்மையான ஸ்வரூபத்தைச்சந்தேக விபரீதங்களற அறிதலே ஆத்மஞான மென்று பெயர்; "तरति शोकमात्मवित्" ஆத்மாவையறிந்தவனே ஜனன மரண ஸம்ஸாரவடிவ துக்கக் கடலைக்கடக்கின்றான் என்பது ஶ்ருதி.

ஆகவே சோகநிவர்த்தி வடிவமாகும் மோக்ஷத்திற்குக் காரணமான ஆத்மஞானமே பிரஹ்மவித்யை யென்று கூறப்படும். இந்த பிரஹ்மவித்யை பரம், அபரம் என்னும் பேதத்தால் இரண்டு வகைப்படும். இவற்றுள் அபரப் பிரஹ்ம வித்யையானது நான்குவேதங்கள், ஆறு அங்கங்கள், தர்மசாஸ்திரங்கள் முதலியனவாகும்; तत्रापरा ऋग्वेदो यजुर्वेदः सामवेदोऽथर्ववेदः शीक्षा कल्पो व्याकरणं निरुक्तं छन्दो ज्योतिषमिति ॥ என்பது ஶ்ருதி. பரப் பிரஹ்மவித்யையோ வெனின், "अथ परा यया तदक्षरमधिगम्यते, यत्तदद्रेश्यमग्राह्यमगोत्रमवर्णमचक्षुःश्रोत्रं तदपाणिपादं नित्यं विभुं सर्वगतं सुसूक्ष्मं" என்னும் முண்டக ஶ்ருதிப்படி நிர்க்குணமாயும், கண், காது, கால், கை, முதலிய அவயவங்களற்றதாயும், அசுத்த மனத்தால் கிரஹிக்க முடியாததாயும், ஸ்தூலக் கண்களால் காணமுடியாததாயும், வாக்கினல் நிர்த்தேசம் செய்ய முடியாததாயும், எங்கும் வியாபித்து நாசமின்றி விளங்குவதாயு முள்ள அக்ஷர ஸ்வரூபத்தை அறிவிப்பதாகும். ஆகவே கர்ம காண்டம் அபர வித்யை யென்றும், ஞானகாண்டம் பரவித்யையென்றும் கூறத்தகும்.

ஞானகாண்டமாகும் பரரூப பிரஹ்ம வித்யையும் ஸ்தூல ஸூக்ஷ்ம பேதத்தால் இரண்டு வகைப்படும். ஸ்தூல பரப் பிரஹ்மவித்யை உபநிஷத்துக்களேன்றும் ஸூக்ஷ்ம பரப் பிரஹ்ம வித்யை பிரணவ மேன்றும் ஶாஸ்திரங்கள் கூறுகின்றன. ஸ்தூலத்தைக் கௌணமென்றும் ஸூக்ஷ்மத்தை முக்கியமென்றும் பெரியோர் கூறுவர்.

परः परतरं ब्रह्म प्रज्ञानन्दादिलक्षणम् ।
प्रकर्षेण नवं यस्मात् परं ब्रह्म स्वरूपतः ।

अपरः प्रणवः साक्षाच्छब्दरूपः सुनिर्मलः ॥

प्रकर्षेण नवत्वस्य हेतुत्वात् प्रणवः स्मृतः ।
परमप्रणवप्राप्तिहेतुत्वात् प्रणवोऽथवा ॥

என்று ஸூத ஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ளதை யறியவும்.

ஸத்தாயும், ஏகமாயும், அத்விதீயமாயும், வியாபகமாயும், ஆநந்தகனமாயுமுள்ள ஆத்ம ஸ்வரூபமானது எப்பொழுதும் அதாவது அக்ஞான தசையிலும், ஞானதசையிலும் யாதொரு மாறுபாடுமின்றி ஒரே விதமாக விளங்குகின்றது. இங்ஙனம் நிர்விகார ஸ்வபாவ ஆத்மரூபப் பிரஹ்மத்தின் அநேகத்துவ, விகாரித்துவ, பரிச்சின்னத்துவாதிகளைக் கற்பிப்பது அக்ஞானமேயாகும். இதனால்தான் ஆநந்த வடிவ தன் ஸ்வபாவ நிலையை மறந்து, தான் ஜீவனென்றும், அதனால் சுபாசுப கர்மங்களுக்குக் கர்த்தாவென்றும், அதனால் ஸுகதுக்கங்களை யநுபவிக்கும் போக்தா வென்றும், அஸ்வதந்திரனென்றும் நினைத்துக்கொண்டு ஜனனமரண ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கி ஒவ்வொரு ஜீவனும் வருந்துகின்றான். இத்துன்பத்தினின்றும் நீங்குவதற்குப் பிரஹ்மாபின்ன ஆத்மஞானமே வேண்டும். மற்றெதுவும் ஸம்ஸார சோகத்தை நிவர்த்திசெய்யாது. ஆதலின் கூடஸ்தரூப ஆத்மாவே நிர்விகாரப் பிரஹ்மமென்று ஸந்தேஹ விபரீதங்களற நிச்சயிப்பதே முக்கிய-அல்லது ஸூக்ஷ்ம பரவித்யையாம். இது பிரணவவடிவம் என்று முன் கூறப்பட்டுள்ளது.

अनेन जीवेन आत्मनानुप्रविश्येत्यादिना, स एव जीवो भूत्वा, कोऽयमात्मेति वयमुपास्महे ? कतरस्स आत्मेत्यादि विचारतः तदात्मानमेवावेदहं ब्रह्मास्मीति तस्मात् तत्सर्वं अभवत्, इत्यादि श्रुत्युक्तरीत्या नित्यशुद्धबुद्धमुक्तसत्यपरमानन्दाद्वयब्रह्मैवाहमस्मीति स्वयमेव स्वात्मानं वेत्तीति

ब्रह्मविद्येति गद्यत इति ; तत्प्रतिपादकोपनिषदपि ब्रह्म वेदयतीति गौण्या वृत्त्या ब्रह्मविद्येत्युच्यते ॥ என்னும் த்ரிபுரோபநிஷத்தின்ராமாநந்தாளின் பாஷ்யப்படி, உபநிஷத்துக்கள் கௌணப் பிரஹ்ம வித்யை யென்று ஸித்திக்கின்றது.

முக்கிய பரவித்யையாகும் பிரணவமானது ஜீவப் பிரஹ்மைக்கிய வடிவ பிரதிபாத்ய ஸ்வரூபமாய் இருக்கின்றது. "ஸோஹம்" என்பது "அஹம் பிரஹ்மாஸ்மி" என்னும் மஹாவாக்கியத்தின் ஸாரமாகும். "ஸோ" என்னும் அக்ஷரம் ஸகார ஓகாரங்களின் சேர்க்கையாலும் "ஹம்" என்பது ஹகார அநுஸ்வாரங்களின் சேர்க்கையாலும் ஏற்பட்டவையாகும்.

ஸ: + அஹம் = ஸோஹம். இதற்கு "மிகப் பிரஸித்தமான ஜகத்காரண பரமாத்மாவே நானாக விருக்கின்றேன்" என்பது பொருளாகும். "ஸோ" என்னும் அக்ஷரத்திலுள்ள மெய்யெழுத்தாகிய ஸகாரத்தை விட்டு, ஓ வென்னும் உயிரெழுத்தையும், ஹம் என்பதிலுள்ள மெய்யெழுத்தாகிய ஹகாரத்தை விட்டு அநுஸ்வாரமாகிய பிந்துவையும் எடுத்துக் கொண்டு அவற்றை யொன்று சேர்க்கின் (ஓ + ം =) ஓம் என்று ஆகின்றது.

ஸ: என்னும் பதத்தின் வாச்சியமாகிய ஜகத்காரண பரமாத்மாவின் உபாதியாகும் மாயையை விட்டு விட்டு எஞ்சிய அதிஷ்டான சேதனத்திற்கும், அஹம் என்னும் பதத்தின் வாச்சியமாகிய ஜீவனது உபாதியாகிய அவித்யையை விட்டு விட்டு அதிஷ்டான சேதன கூடஸ்த ஆத்மாவிற்கும் ஐக்கியம் உண்டாகின்றது. இது விட்டு விடாத

जहदजहद् லக்ஷணையாகும். "பிரக்ஞானம் பிரஹ்ம, அஹம் பிரஹ்மாஸ்மி, தத்துவமஸி, அயமாத்மா பிரஹ்ம" என்னும் மஹா வாக்கியங்களைப் போலவே, பிரணவமும், ஜீவப் பிரஹ்மைக்கியத்தை யுணர்த்தும் பிரபாவமுடையதாதலின் அது முக்கிய பரவித்யையாயிருக்கின்றது. ஆதலின் பிரணவம் பிரஹ்ம வித்யாப் பிரதிபாத்யமாம்; பிரஹ்ம வித்யாப் பிரதிபாத்யமே பிரஹ்ம வித்யையென்பது பரம ஸித்தாந்தமாகும். ब्रह्मविद्यैव श्रीविद्येति प्रतिपादितं श्रीविद्यारत्नभाष्ये भगवत्पादैः ॥ श्रृ हिंसायामिति श्रृणाति हिनस्ति ब्रह्माहमस्मीति अखण्डाकारवृत्तिफलकारूढं सत्कार्यकारणात्मकं लोकप्रपञ्चं स्वतावन्मात्रतया प्रविलापयतीति "श्रीः" प्रत्यक्चितिः परमात्मा स एव विद्यादशायां विचारतः ब्रह्मात्मभावं वेत्ति। कः परमात्मा? को जीवः? किमिदं जगत्? कथं बन्धः? कथं मोक्षः इति विचारः—स एव जीवो भूत्वा ज्ञातब्रह्माभिन्नप्रत्यगात्मभावरूपं वेत्ति स्वयमेव नित्यशुद्धबुद्धस्वभावब्रह्मैवाहमस्मीति, कण्ठगतचामीकरवल्लभत इति, श्रीश्चासौ विद्या चेति श्रीविद्येत्युच्यते; तत्प्रतिपादिका विद्यापि, श्रियं प्रत्यक्चिन्मात्रं परमात्मानं वेदयति विचारं कारयति, ज्ञापयति, लालयतीति गौण्या वृत्त्या श्रीविद्येत्युच्यते ॥ अत्र श्रीविद्यायाः परब्रह्मत्वं विद्यात्वं युक्तं, सा ब्रह्मविद्या सैव देवता सा श्रीविद्येति वक्तुर्वेदस्यायमभिप्रायः ॥ த்ரிபுரோபநிஷத் ராமாநந்த பாஷ்யம்.

என்னும் பிரமாணங்களால் பிரஹ்மவித்யையே ஸ்ரீவித்யை யாகும் என்பது ஏற்பட்டது.

பிரணவத்திற்கு எங்ஙனம் பிரஹ்ம வித்யாத்துவம், ஶ்ருதி முதலிய பிரமாணங்களில் மிகப் பிரஸித்தமோ, அங்ஙனமே ஈங்காரத்திற்கும் பிரஹ்ம வித்யாத்துவம், ஶ்ருதி, ஸ்ம்ருதி, இதிஹாஸம், புராணம், ஆகமம், ஸூத்ரங்கள் முதலியவற்றில் மிகப் பிரஸித்தமாம்.

ஈங்காரமே ஸ்ரீவித்யை யென்பது பரம ஸித்தாந்தமாம். तां पद्मिनीमीं शरणमहं प्रपद्ये-यः प्राणाति य ईं॰श्रृणोति-यदीं॰श्रृणोत्यलकं॰श्रृणोति-य ईं चकार न सो अस्य वेद-स ईं-पाहि यजजी तरुवः ॥ என்னும் ஶ்ருதிப் பிரமாணங்களால் ஈங்காரமே ஸ்ரீவித்யை யாமென்று ஸித்திக்கின்றது. இந்த ஈங்காரம் மூன்று பிந்துக்களின் ஸமஷ்டி வடிவம். ஆதலின் இது காமகலை யென்று கூறப்படும். இதன் மஹிமை அபாரமானது. வேதத்தில் இந்த வித்தையை வெகு ரஹஸ்யமாயும் கூடமாயும் கூறப்பட்டுள்ளது.

महामन्त्रराजान्तबीजं पराख्यं स्वतो न्यस्तबिन्दु स्वयं न्यस्तहार्दम् ।
भवद्वक्त्रवक्षोजगुह्याभिधानं स्वरूपं सकृद्भावयेत्स त्वमेव ॥

என்று ஸ்ரீபகவத் பாதாள் தேவி புஜங்க ஸ்தோத்திரத்தில் கூறியுள்ளார். "कामो योनिः कमला वज्रपाणिः" என்றும், "यदीं॰श्रृणोत्यलकं॰श्रृणोति" என்றும் கூறப்பட்டிருப்பது அறியத்தக்கது.

மேலும், ஸர்வாநர்த்த நிவர்த்தி பரமாநந்த பிராப்திரூப மோக்ஷத்தைக் கோரும் ஒவ்வொரு முமுக்ஷுவும் தன் கோரிக்கை ஸபலமாகும் பொருட்டு ஸ்ரீவித்யையை உபாஸித்தல் அத்தியாவஶ்யமாகு மென்று ஸ்ரீதத்தாத்ரேய ஸம்ஹிதை, 4வது அத்தியாயம்,

एकेन जन्मना मुक्ति पुमानिच्छेद्यदि प्रिये ।
चिद्ब्रह्मविद्यादातारं परमाचार्यमाश्रयेत् ॥
अकृत्रिमार्थपदवी विद्येयं मम सुन्दरी ।
एकोच्चारणमात्रेण वाजिमेधस्य कोटयः ॥
भूप्रादक्षिण्यकोटिश्च सिद्धमेतद्भवेच्छिवे ।
चिद्विद्यया समा विद्या नास्ति ब्रह्माण्डगोलके ॥

मोक्षैकहेतुविद्या च श्रीविद्या नात्र संशयः ।

என்பனவற்றாலும், 62-வது அத்தியாயம்,

वाञ्छन्ति जन्म मानुष्यं भुवि देवाः सवासवाः ।
चिद्विद्यायाः परोपास्तौ यतो नान्योऽधिकारभाक् ॥
चिद्विद्यामखिलार्थानां प्रदात्रीमागमेश्वरीम् ।
विहाय प्रजपन्मन्त्रं परं किं न भवेत्पशुः ॥
जीवार्थपाशविच्छित्त्यै मन्त्रोऽयं हेतुरुच्यते ।
अतः साक्षात्पशुपतिः स्मरणादस्य जायते ॥
मानुष्यं जन्म लब्ध्वापि भुवि ब्रह्मादिदुर्लभम् ।
नोपास्ते श्रीश्रियो विद्यां यस्ततोऽन्यः क आत्महा ॥

என்பனவற்றாலும் ஏற்படுகின்றது.

இதன் பொருளாவது :—ஒரு ஜன்மத்திலேயே முக்தியையடைய விச்சிக்கும் புருஷன், சித் பிரஹ்மவித்யையை உபதேசிக்கும் பரமாசார்யனை ஆஸ்ரயித்து சித் வித்யையைக் கிரஹித்தல் வேண்டும். இது பரம புருஷார்த்தரூப மோக்ஷத்தைத் தரவல்லது. இதை யொருதரம் உச்சரித்த மாத்திரத்திலேயே கோடி அஸ்வமேதங்களும் கோடி பூப்பிரதக்ஷணங்களும் செய்த பலன் ஸித்திக்கின்றது. சித்வித்யைக்குச் சமமான வித்யை இந்த பிரஹ்மாண்டத்திலேயே கிடையாது. எல்லாவற்றையுந்தரும் சித்வித்யையை விட்டு இதர மந்த்ரங்களை யுபாஸிப்பவர்களைத்தவிற வேறு யார் பசுக்களாவார்கள்? பெறுதற்கரிய இந்த மநுஷ்ய ஜன்மத்தைப் பெற்றும் பரதேவதையை ஸ்ரீவித்யையால் எவன் உபாஸிக்கவில்லையோ அவனைவிட ஆத்மஹத்தி செய்தவன் வேறு யாரிருக்கின்றனர்? என்பதாகும். அன்றியும்,

अतः संसारनाशाय साक्षिणीमात्मरूपिणीम् ।
आराधयेत्परां शक्तिं प्रपञ्चोल्लासवर्जिताम् ॥
उपासते ये परमां सर्वलोकैकमातरम् ।
तेऽभीष्टं सकलं यान्ति विद्यां मुक्तिप्रदायिनीम् ॥

என்று ஸூத ஸம்ஹிதையிலும் கூறப் பட்டிருப்பது அறியத் தக்கது. இதனால் ஸ்ரீவித்யையே மோக்ஷத்திற்கு நேர் ஸாதனமா மென்று ஸித்திக்கின்றதல்லவா? இவ்வர்த்தத்தையே ஜகத்குரு சங்கர பகவத்பாதாள் தாமியற்றிய ஸ்ரீதேவீ வேதபாதஸ்தவத்தில்,

त्रिकलाढ्यां त्रिहृल्लेखां द्विहसस्वरभूषिताम् ।
यो जपत्यम्ब ते विद्यां सोऽक्षरः परमः स्वराट् ॥
अविज्ञाय परां शक्तिं स्वात्मभूतां महेश्वरीम् ।
अहो पतन्ति निरयेष्वेके चात्महनो जनाः ॥

பஞ்சதசீ மஹாவித்யையைச் சற்குரு மூலமாய்க் கிரஹித்து ஜபிப்பவன் அவிநாசியான பிரஹ்மமே யாகின்றான். தனது ஆத்மரூப பரதேவதையை அறியாமல் நரகத்தில் விழுந்து ஆத்மஹத்தியைச் செய்தவனாகின்றனன் என்று திருவாய் மலர்ந்தருளியிருப்பது இங்கு கவனிக்கத் தக்கதாகும்.

நிர்க்குணப் பிரஹ்மஸித்திக்கு ஸ்ரீவித்யை மிகவும் உத்தமமான ஸாதனமாகும். ஸ்ரீவித்யா பஞ்சதசியின் அர்த்தத்தை யுணர்ந்து உபாஸிப்பது அத்தியாவசியமாகும். பஞ்சதசியின், பாவார்த்தம், ஸம்ப்ரதாயார்த்தம், தத்வார்த்தம், மஹாவாக்கியார்த்தம் முதலிய பதினைந்து விதமான அர்த்தங்களும் "ஸ்ரீவரிவஸ்யா ரஹஸ்யம்" என்னும் சிறந்த கிரந்தத்தில் விஸ்தாரமாய்க் கூறப்பட்டிருக்கின்றது.

(இந்நூல் வியாக்கியானத்தோடு தமிழில் மொழி பெயர்க்கப் பட்டு, சென்னை ஸ்ரீ பிரஹ்மவித்யா விமர்சினீ ஸபையாரால் வெளியிடப்பட்டுள்ளது; அதைவாங்கி வாசித்தறியவும்.)

ஸ்ரீவித்யை யென்னும் பெயர் பாலை, பஞ்சதசீ, ஷோடசீ மந்த்ரங்களுக்கும், புவனேஶ்வரி, நவாக்ஷரீ முதலியவற்றிற் கும் பொருந்தும். பஞ்சதசீவித்யை, காதி யென்றும் ஹாதி யென்றும் ஸாதி யென்றும் முக்கியமாய்க் கூறப்படுவதோடு, மநு, சந்திரன், குபேரன், லோபாமுத்திரை, மன்மதன், அகஸ்தியர், அக்கினி, ஸூர்யன், இந்திரன், ஸ்கந்தன், சிவன், துர்வாஸஸ் ஆகிய பன்னிரண்டு பேர்களாலும் உபாஸிக்கப் பட்டுள்ள தென்றும் ஶாஸ்திரங்கள் கூறும். இவற்றுள் மன்மதவித்யை காதி வித்யையென்றும், சந்திரன் உபாஸித்தது ஸாதிவித்யையென்றும், லோபாமுத்திரை அகஸ்தியர், துர்வாஸஸ் இவர்கள் உபாஸித்தது ஹாதி வித்யை யென்றும் ஏற்படுகின்றன. இவ்வெல்லா வித்தைகளிலும் காதி வித்யையே சிறந்ததாகும்.

காதி வித்யையின் சிறப்பு :

**श्रीविद्यैव तु मन्त्राणां तत्र कादिर्यथा परा** :—“எங்ஙனம் ஸ்ரீ வித்யை மந்த்ரங்களுக்கெல்லாம் சிறந்ததோ, அதிலும் காதி வித்யை மேலானதோ” என்னும் பிரமாணத்தாலும், ஸ்ரீ மஹா ஷோடசீ வித்யையானது காதி வித்யையினின்றும் ஏற்படுவதாலும், “**चत्वार ईं बिभ्रति क्षेमयन्तः**” என்னும் ஶ்ருதி யின்படி நான்கு ஈகாரங்களுள்ள வித்யையே க்ஷேம வடிவ மோக்ஷத்தைத்தருகின்றது என்பதாலும், “**तामीकाराक्षरोद्धारां सारात्सारां परात्पराम्**” என்றும் “**यदेकादशमाधारं बीजं कोणत्रयोद्भवम्**” என்று முள்ளவாமகேஶ்வர தந்த்ர வசனங்களாலும் நிரூபிக்

கப்பட்டஹ்ரீ-ஏ-என்னும் பீஜங்களோடு கூடியுள்ள தன்மை யாலும், த்ரிபுரோபநிஷத்தில் காதி வித்யையின் மூலமாய் ஹாதி வித்யை உத்தாரம் செய்யப் பட்டிருப்பதனாலும், த்ரிபுராதாபினீ, தந்த்ரராஜம், வாமகேஶ்வரதந்த்ரம் முதலிய வற்றில் இதற்கே காயத்ரீ அர்த்தம், பாவார்த்தம், முதலிய அர்த்தங்கள் கூறப்பட்டுள்ளதாலும், இத் திரிஶதியில் ஆதரிக் கப்பட்டிருப்பதாலும், காதி வித்யையே சிறந்ததா மென்பது புலப்பட வில்லையா? ஹாதி வித்யை காமேஶ்வர வித்யை யென்றும் காதி வித்யை காமேஶ்வரீ வித்யையென்றும் தத்தாத்ரேய ஸம்ஹிதையில் கூறப் பட்டுள்ளது. எல்லா வித்யைகளும், அதிஷ்டான சித்ஶக்திப் பிரதிபாதகங்களா யிருப்பதால் அவற்றுள் ஒன்றற் கொன்று ஏற்றத் தாழ்வுகள் கிடையாவென்று நன்ருய் அறிதல் அவசியம்.

த்ரிஶதீ ஸ்தோத்திரத்திற்கு ஸம்ஸ்க்ருத பாஷ்யம்:— இந்த த்ரிஶதீ நாம ஸ்தோத்திரத்திற்கு ஜகத்குரு ஆதிசங்கர பகவத் பாதாசார்யஸ்வாமிகள் வடமொழியில் பாஷ்யம் இயற்றியுள்ளாரென்பது வித்வான்கள் பலராலும் ஒப்பப் பட்ட விஷயமாகும். இவ்விஷயத்தில் பல ஆக்ஷேபணைகளு முண்டு.

பரமாசார்யாளாலியற்றப்பட்ட ப்ரஸ்தானத்திரய பாஷ்யங்களிலும், மற்றும் அவரால் இயற்றப்பட்ட இதர அத்வைதப் பிரகரணங்களிலும், சித்சக்தியைப் பற்றி அவர் ஒன்றுங் கூறவில்லை; எனெனின், மேற்படி பாஷ்யங்களும் மற்றுமுள்ள பிரகரணங்களும் பௌத்தம், ஸாங்கியம் முதலிய பேத (துவைத) மதகண்டனத்தையே பிரதானமாய்க் கொ ண்டு விளங்குங் காரணத்தால் சித்சக்தியைப்பற்றி அங்கே

கூறுவது அவசியமில்லாதிருக்கலாமென ஊகிக்கத்தகும்; பின்னர்தான், பரமாசார்யாள் ஸௌந்தர்யலஹரீ, தேவீவேத பாதஸ்தவம், த்ரிஶதீநாமபாஷ்யம், ஶ்ரீவித்யாவிலாஸம், ஸுப கோதயவாஸனை முதலிய ஶ்ரீவித்யா கிரந்தங்களை யியற்றின ரென்று தெரிகின்றது.

ஶ்ரீ வித்யாரண்யஸ்வாமிகளாலியற்றப்பட்ட ஶ்ரீ சங்கர விஜயத்திலும், "பரமாசார்யாள் பாஷ்யங்களை யியற்றிப் பின் திக்விஜயம் செய்து வரும் வழியில், ஶ்ரீ மூகாம்பிகா க்ஷேத்திரத்தில் பரதேவதையைக் கீழ்வருமாறு துதித்திருக் கின்றனர்" என்று கூறப் பட்டிருக்கின்றது.

पारेपरार्धं पदपद्मभास्सु षष्ट्युत्तरं ते त्रिशतं तु भासः ।
आविश्य वह्न्यर्कसुधामरीचीनालोकवन्त्यादधते जगन्ति ॥
अन्तश्चतुष्षष्ट्युपचारभेदैरन्तेवसत्काण्डपटप्रदानैः ।
आवाहनाद्यैस्तव देवि नित्यमाराधनामादधते महान्तः ॥
अम्बोपचारेष्वधिसिंधुषष्टि शुद्धन्नयोः शुद्धिदमेकमेकम् ।
सहस्रपत्रे द्वितये च साधु तन्वन्ति धन्यास्तव तोषहेतोः ॥
आराधनं ते बहिरेव केचिदन्तर्बहिश्चैकतमेऽन्तरेव ।
अन्ये परे त्वम्ब कदापि कुर्युर्नैव त्वदैक्यानुभवैकनिष्ठाः ॥

இங்ஙனம், பரதேவதையை உபாஸ்தி ரஹஸ்யங்களோடு துதித்துள்ளார். ஆதலின் பரமாசார்யாள் ஶ்ரீ வித்யா விஷய மான பல நூல்களை இயற்றியிருக்கலாமென்பதில் யாதொரு ஸந்தேஹமுமின்று. ஶ்ருதிகளில் கூறப்படுவதான எந்தப் பிரஹ்மம் உளதோ அதேதான் சித்ஶக்தியாகும். (ஶ்ரீ பிரஹ்ம வித்யா விமர்சினீ ஸபையில் வெளிப்படுத்தப்படும் ஶ்ரீ பரா பூஜாவாஸனு விமர்சம் பார்க்கவும்.) "தத்துவமஸி" "அய

மாத்மாபிரஹ்ம" என்னும் மஹாவாக்கியங்களின் மனனநிதித் தியாஸனங்களும் ஸ்ரீ வித்யோபாஸனையும் ஒன்றேயாகும். த்ரிஶதீ 294-வது நாமமாகிய ஹ்ரீங்காரவேதோபநிஷதே நம : என்னும் நாமபாஷ்யத்தில் ஸ்ரீ வித்யோபாஸனை பிரஹ்ம வித்தையே யென்றும், அது ஞானகாண்டத்தில் சேர்ந்த தென்றும் கூறப்பட்டுள்ளது. 'न कर्मणा' என்னும் ஶ்ருதியா லும், 'नेदं तदिदमुपासते' என்னும் ஶ்ருதியாலும் கர்மோபா ஸனைகள் பிரஹ்ம ஸாக்ஷாத்காரத்திற்கு நேர்ஸாதனமல்ல வெ ன்றும் ஆதலால் அவை தாழ்ந்தவை யென்றுங் கூறப்பட்டி ருக்கின்றன. உபாஸனை தாழ்ந்தது என்று கூறும் ஶ்ருதிக் குப் பரதேவயைத் தவிற பின்னமாக ஒரு தேவதையிருக் கின்றதென்று மயக்கத்தினுல் செய்யும் பிரதீக உபாஸனை யே குறியாகும். அஹங்கிரஹரூப சித்வித்யோபாஸ்தியைத் தாழ்த்திக் கூறுவது அச்சுருதிகளுக்குத் தாத்பரியம் அல்ல வென்று அறிதல் அத்தியாவஶ்யம்.

ஜீவர்கள் அநேக ஜன்மங்களிற் செய்த இதரபின்ன தேவதோபாஸ்தியின் பலனுய்க் கடைசி ஜன்மத்தில் அவர் களுக்கு ஸ்ரீ வித்யோபாஸ்தி எற்பட்டு அதனுல் மோக்ஷத்தை யடைகின்றனர்.

देवतान्तरमन्त्रौघजपश्रीफलभूतया ।
जापकस्तव देव्यन्ते विद्यया विन्दतेऽमृतम् ॥

என்னும் ஸ்ரீ சங்கரபகவத் பாதாளியற்றிய தேவீ வேத பாதஸ்தவம் இதற்குப் பிரமாணமாம்.

இத்தகைய மஹாமஹிமை பொருந்திய ஸ்ரீவித்யை யானது அகஸ்தியருக்கு ஹயக்ரீவரால் ஸ்ரீ காஞ்சீ க்ஷேத் திரத்தில் உபதேசிக்கப்பட்டது.

ஸ்ரீஹயக்ரீவரின் வரலாறு:—பூர்வம் நான்முகப் பிரஹ்மன் ஜகத்தைச் சிருஷ்டிசெய்ய நினைத்து 'क इति ब्रह्मणो नाम तेन तत्रांचितो हरिः। तस्मात् कांचीति विख्याता पुरी पुण्यविवर्धिनी ॥ என்னும் விசேஷத்தையுடைய காஞ்சீ க்ஷேத்திரத்தில் ஆயிரம் மஹாயுக காலங்கள் வரை ஒரு அஸ்வமேதயாகம் இயற்றினர். இங்ஙனம் இயற்றுகையில், அந்த யாகம் அஸுரர்களால் கெடாவண்ணம், மஹாவிஷ்ணுவானவர் பிரஹ்மாவால் வேண்டிக்கொள்ளப் பட்டவராய், வில்லையும் அம்புகளையும் தாங்கி நித்திரை ஆஹாரம் இன்றி அதை ஸம்ரக்ஷித்துக்கொண்டிருந்து அது முடிந்த வுடனே அதிக நித்திரையால் வில்லைக் கழுத்தில் தாங்கிக்கொண்டு அப்படியே தூங்கிவிட்டனர். இங்ஙனம் ஐந்நூறு மஹாயுக காலம் வரை தூங்கிக்கொண்டே யிருந்தனர். அப்போது பிரஹ்மா முதலிய தேவர்கள் யாவரும் மஹாவிஷ்ணுவை எங்ஙனம் விழிக்கச் செய்வதென்று பலவிதமாய் யோஜித்துக் கடைசியில் செல்லைச் சிருஷ்டித்தார். அது விஷ்ணுவின் வில் நாணைக்கடிக்க அதனால் நாண் அறுபட்டு அதன் வேகத்தினால், மஹாவிஷ்ணுவின் சிரம் அறுந்து தெறித்து ஆஹவனீயாக்னியில் விழுந்து பஸ்மமாயிற்று. இதைக்கண்டு பிரஹ்மாவும் மற்ற தேவதைகளும் ஹாஹாகாரத்தோடு மிகவும் வருந்தி இன்னது செய்வதென்று அறியாமல் பராஶக்தியை ஸ்துதிக்கலானார்கள். அப்பொழுது பராஶக்தி அசரீரியாய் ஆகாயத்தில் தோன்றி "யக்ஞத்தின் பொருட்டு ஹிம்ஸித்த அஶ்வத்தின் சிரஸ்ஸை விஷ்ணுவின் சரீரத்தோடு பொருத்தினால் அவர் உயிர்த் தெழுந்து, 'ஹயக்கிரீவர்' என்னும் பிரஸித்த நாமத்தோடு அழைக்கப்படுவார்; அவரால் ஹயக்கிரீவன் என்னும் ஒரு அஸுரன் ஸம்ஹரிக்கப் படவேண்டும்; இந்த நிமித்தத்தினால் தான் இங்ஙனம் ஏற்பட்டது" என்று

ஆக்ஞாபிக்க, பிரஹ்மாதி தேவர்கள் அங்ஙனமே செய்தனர். விஷ்ணு மூர்த்தியும் புனர்ஜீவிதராய் விழித்தெழுந்து தனது ஸுந்தரமான சிரம் போனமைக்கு மிகவும் துக்கித்துப் பரதேவதையைத் துதித்து நிற்கையில், "மற்றும் ஐந்நூறு மஹாயுகங்கள் வரை இந்த காமகோடியில் ஸ்ரீகாமாக்ஷி தேவியாகிய என்னை விதிப்படி ஆராதித்துக் கொண்டு வித்தியார்த்திகளுக்கு ஸ்ரீ வித்யையையும் இதர வித்யைகளையும் உபதேசித்துக் கொண்டிருப்பாயாக. பின்னர் உனது யதார்த்தமான ரூபம் ஏற்படும்." என்று பரதேவதை திருவாய் மலர்ந்தருளினள். அந்த உத்தரவின்படி ஹயக்ரீவர் இன்னும் காஞ்சீ காமகோடிபீடத்தில் ஸ்ரீ மஹாத்ரிபுரஸுந்தரீ தேவியைத் துர்வாஸ கல்பத்தின்படி ஆராதித்துக்கொண்டு வருகின்றனர். இந்த பூஜைக்கு லோபாமுத்ராதேவி ஸுவாஸினீ பூஜைக்கு வருவது வழக்கம். லோபாமுத்திராதேவி அகஸ்தியரது பார்யை யாவள். அகஸ்தியருக்கு ஸ்ரீ வித்யை உபதேசமாவதற்கு முன்னரே, லோபாமுத்திரைக்கு வித்யோபதேச முண்டு. இங்ஙனம் இருக்க ஒரு நாள், அகஸ்தியர் தன்னை ஹயக்கிரீவரிடம் அழைத்துக்கொண்டு போகும்படி தன் பத்தினியிடம் சொன்னார். லோபாமுத்திரையும் ஹயக்கிரீவரது உத்தரவைப் பெற்றுத் தன்பர்த்தாவை அவரிடம் அழைத்துச்சென்றனள்.

பின்னர் அகஸ்தியர் ஹயக்கிரீவரைத் துதித்து ஸ்ரீ வித்யையை யுபதேசிக்கும்படி மிகவும் வேண்டிக்கொண்டனர். ஹயக்கிரீவர் நெடுநாள் அகஸ்தியரைப் பரீக்ஷித்துப் பின்னர் பஞ்சதசாக்ஷரீயையும், ஸ்ரீலலிதோபாக்கியானம் பூராவையும் உபதேசித்தனர் என்பது புராண வரலாறு. அகஸ்தியரது ஆஸ்ரமம் பெரிய காஞ்சீபுரம் ஸர்வதீர்த்தத்திற்குத் தெற்

கேயும், ஸ்ரீகைலாஸநாதரது ஆலயத்திற்குக் கிழக்கேயு முள்ள ஸ்ரீ உபநிஷத் பிரஹ்மேந்திர யோகிகளின் மடமே யாமென்று தெரிகின்றது. இங்கே அகஸ்தீஸ்வர லிங்கமும் ஸ்ரீ ஹயக்ரீவரது லிங்கமும் இருக்கின்றன. கோயில் மிகவும் ஜீர்ணமாய்ப் பூஜையும் இல்லாத நிலையில் தற்காலம் இருக்கின்றது. அன்றியும் ஸ்ரீ காமாக்ஷி தேவியின் ஆலயத்தின் கிழக்குக் கோபுரத்தில் ஸ்ரீ ஹயக்கிரீவரது பிம்பமும் ஸ்ரீ அகஸ்தியரது பிம்பமும் இருக்கின்றன. இவற்றிற்கும் பூஜை நடப்பதில்லை. லலிதோபாக்கியானத்திலும், அகஸ்தியருக்கு உபதேசம் காஞ்சீ க்ஷேத்திரத்திலே தான் என்று தெளிவாய்க் கூறப்பட்டிருக்கின்றது.

இத்தகைய மஹாமஹிமை பெற்ற த்ரிஶதீ நாமஸ்தோத்திரத்திற்குப் பரமாசார்யாள் ஜகத்குரு ஸ்ரீ சங்கரபகவத்பாதாள், ஸம்ஸ்க்ருதத்தில் ஒரு கம்பீரமான பாஷ்யமியற்றியுள்ளா ரென்று முன் கூறப் பட்டதல்லவா? அது மிகவும் ஆழ்ந்த அத்வைத ஶாஸ்திர ரஹஸ்யங்களை யடக்கிக் கொண்டு விளங்குவதாகும். இது அத்வைத ஶாஸ்திரப் பயிற்சியும் ஸம்ஸ்க்ருத பாஷா ஞானமும் அற்றவர்க்கு முற்றும் பயன்படா திருப்பதை யுணர்ந்து, சென்னை ஸ்ரீ பிரஹ்ம வித்யா விமர்சினீ ஸபையின் அங்கத்தினருள் ஒருவரும் ஸ்ரீ பரதேவதா பக்தருமாகிய ஸ்ரீ மான், T. S. நாராயணஸாமி அய்யர் M.A., அவர்கள் அடியேனை, த்ரிஶதீ சங்கர பாஷ்யத்தைத் தமிழில் மொழிபெயர்க்குமாறு கேட்டனர்.

அடியேனும், அவர் கேட்டது பரதேவதையின் தூண்டுதலேயாகுமென்று நினைத்து, என்னால் இயன்றவரைப் பாஷ்ய மூலத்தை யொட்டிமொழி பெயர்த்தேன். ஷை பாஷ்ய மூலத்

தில் வியாகரணபாகங்களேயும் மிகவும் நுட்பமான அத்வைத ஶாஸ்திரக் கருத்துக்களேயும் ஸாமான்யமாய் அறிதல் கூடா தாதலின் அத்தகைய துரூஹமான வற்றை விடுத்து மற்ற பாகங்களே மொழிபெயர்த்தேன். சிற்சில விடங்களில் வியாக்கியானத்தில் இல்லாத விஷயங்களேயும் சேர்த்துள் ளேன். இங்ஙனம் மொழிபெயர்க்கும் பொழுது எனக்கு மிகவும் உபகரித்தவர் பிரஹ்மஸ்ரீ ஸாமிசாஸ்திரிகளென்று வழங்கப்படும் அநந்தாநந்தராவர். சுவர் அவருடையது சித் திரம் என்னுடையதாகும். அவருக்கும், யான் எழுதித் தந்தவற்றைச் செவ்வனே எழுதித்தந்த ஸௌபாக்யவதிக்கும், ப்ரூப் பார்த்து அடிக்கடி அச்சாபீஸுக்குச் சென்று சிரமம் பாராது உழைத்த சிரஞ்சீவி S. ஸாம்பமூர்த்தி அய்யருக்தும், மிகவும் அழகாக இந்நூலே அச்சிட்டுத் தந்த பாரதி விஜயம் அச்சுக்கூடத் தலேவர் பிரஹ்மஸ்ரீ ராமய்யர் அவர்களுக்கும் ஸர்வாபீஷ்டங்களேயும் அருளுமாறு பரதேவதையை, யான் வேண்டிக் கொள்கின்றனன்.

இந்நூலின் முதற்பதிப்பு மேற்படி பிரஹ்மஸ்ரீ T. S. நாராயணஸாமி அய்யர் M.A., அவர்களாலேயே அவரது செலவில் அச்சிட்டு வெளியிடப்பட்டதாகும். இத்தகைய பெரும் புண்ணியத்தைச் செய்த அவருக்குப் பரதேவதை ஸர் வாபீஷ்டங்களேயும் அருளி, இனி, மேலும் மேலும் இத் தகைய புண்ணியத்தைச் செய்யும்படி பிரேரணே செய்யப் பன்முறை வேண்டுகின்றேன். இதில் எனது பிரமாதாதி தோஷங்களாலும், ஆராய்ச்சிக் குறைவினுலும் பல பிழைகள் இருக்கும். அவற்றை வித்வான்களா யுள்ள பெரியோர், அடியேன் மீது கருணே பூண்டு தெரிவிப்பாரேயாயின்

யான் அவற்றை வந்தன பூர்வகமாயேற்று மறுபதிப்பில் திருத்தி வெளியிடச் சித்தமாயிருக்கின்றனன். பிழை யுளதாயின் உலகம் பொறுக்க.

जन्मान्तरसहस्रेषु चरितैः सुकृतैर्मया ।
जन्मराहित्यदं प्राप्तं पदं श्रीदेशिकात्मनः ॥

मोहावर्तसुदुस्तरं मदमहाकामोर्मिमालाकुलं
क्रोधाकारतिमिंगिलायुतयुतं संसारवारान्निधिम् ।
तर्तुं श्रीगुरुराजपादकमलाकारं सुपोतं विना
नान्यत्साधनमस्ति हे सुमनुजास्तत्संश्रयध्वं पदम् ॥

न्यूनातिरिक्तरहितपरब्रह्मानुशासनात् ।
न्यूनातिरिक्तदोषांस्तु क्षाम्यन्तु विबुधा मम ॥

॥ इति शिवम् ॥

திருவல்லிக்கேணி
சென்னை.
3-10-1938.
ஸோமவாரம்
விஜயதசமி.

இங்ஙனம்
ஸஜ்ஜனவிதேயன்
ந. சுப்ரமணிய அய்யர்.

## ॥ कामाक्षीमातृकास्तवः ॥

अक्षरमालारूपामहमिदमाकारसच्चिदानन्दाम् ।
अरुणप्रकाशसारां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ १ ॥
आद्यां प्रपञ्चयोनिं चाध्यात्मिकशास्त्रशाखिफलरूपाम् ।
आनन्ददायकदृशं कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ २ ॥
इन्द्वर्कवह्निनयनामिन्द्राद्यैर्दैवतागणैर्वन्द्याम् ।
इदमाख्यदृश्यरूपां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ३ ॥
ईशोत्सङ्गनिवासामीप्सितसकलार्थदायकाङ्घ्रियुगाम् ।
ईशादिदेववन्द्यां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ४ ॥
उद्यत्स्वरूपबोधामुदितसहस्रेन्दुशीतलामम्बाम् ।
उदयस्थितिलयकर्त्रीं कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ५ ॥
ऊर्ध्वाम्नायनिवासामूर्म्यादिकरहितभक्तहृदयस्थाम् ।
ऊंकारबीजलक्ष्यां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ६ ॥
ऋषिगणसेवितचरणामृक्षग्रहपीठयोगिनीरूपाम् ।
ऋजुमार्गसंविधात्रीं कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ७ ॥
ॠंकारबीजलक्ष्यामृजुमार्गचरिष्णुभक्तहृदयस्थाम् ।
ऋक्सामयाजुषेड्यां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ७ ॥
लृंमन्त्रलक्ष्यरूपां लृब्बीजाख्यप्रपञ्चसद्रूपाम् ।
लाक्षासमानवर्णां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ९ ॥

ऌंकारलक्ष्यरूपां लक्ष्मीवाणीनिषेविताङ्घ्रियुगाम् ।
ललितां लावण्यमयीं कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ १० ॥

एलासुगन्धिचिकुरामेकाग्रान्तस्थसच्चिदानन्दाम् ।
एणाङ्कमण्डलस्थां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ११ ॥

ऐंबीजवाग्भवाख्यामैश्वर्यनिधानयोग्यपदविभवाम् ।
ऐलबिलसेव्यमानां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ १२ ॥

ओंकारपञ्जरशुकीं ओमर्थस्वस्वरूपहृल्लेखाम् ।
ओमित्याम्नायनुतां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ १३ ॥

औंकारसामरस्यामौपाधिकभेदरहितनिजरूपाम् ।
औंबीजलक्ष्यविद्यां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ १४ ॥

अन्तर्यजनाराध्यामङ्कुशपाशेषुचापहस्ताब्जाम् ।
अन्तःकरणाधारां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ १५ ॥

अःकारानुस्यूतामहमाकाराख्यसिद्धकामकलाम् ।
अहकारवर्णरूपां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ १६ ॥

कल्याणशैलनिलयां कन्दर्पाद्दृतककारमन्वर्थाम् ।
कलिदोषनाशकाङ्घ्रिं कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ १७ ॥

खद्योतचन्द्रनयनां खण्डत्रयरूपसिद्धविद्यां ताम् ।
खबिलस्थगुर्वभेदां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ १८ ॥

गगनादिभूतरूपां गगनाधिष्ठानसच्चिदानन्दाम् ।
गम्येतरस्वरूपां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ १९ ॥

घनसत्संविद्रूपां घनसारामोदिवदनबिंबोष्ठीम् ।
घंकारमातृकाङ्गीं कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ २० ॥

ङ्कारवर्णरूपां ङंमन्त्रार्थस्वरूपरुद्राणीम् ।
ङाङीङ्संज्ञार्थां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ २१ ॥

चक्रस्थबिन्दुभिन्नां चेतनचैतन्यरूपसंधात्रीम् ।
चिन्तामणिगेहस्थां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ २२ ॥

छन्दस्सारात्सारां छविरूपानन्दसच्चिदाकाराम् ।
छन्दोगगीतकीर्तिं कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ २३ ॥

जडचित्प्रपञ्चरूपां जागरितृस्वान्तयोगिहृत्संस्थाम् ।
जापकलोकार्तिहरीं कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ २४ ॥

झंबीजमन्त्रलक्ष्यां झंकारिसमुद्रसौधमध्यस्थाम् ।
झंमध्यचन्द्रबिम्बां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ २५ ॥

ञंमन्त्रशक्तिसहितां ज्ञात्रादिविरहितसंविदेकरसाम् ।
ज्ञानैकगम्यरूपां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ २६ ॥

टंवर्णमन्त्ररूपां टंबीजार्थस्वरूपिणीं विजयाम् ।
टंकारशब्दवाच्यां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ २७ ॥

ठंबीजमध्यनिलयां ठंमन्त्रार्थस्वरूपचित्कलिकाम् ।
ठान्तानाहतवासां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ २८ ॥

डंफंदशदळसंस्थां डाकिन्यादिकसुयोगिनीसेव्याम् ।
डंमन्त्रलक्ष्यरूपां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ २९ ॥

ढंमातृकार्थरूपां ढंबीजाभिख्यदण्डिनीनाथाम् ।
ढंकारशब्दलक्ष्यां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ३० ॥

णंणांणींणूसंज्ञां नाथदयासमुपदिष्टमन्वर्थाम् ।
नरनारायणसेव्यां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ३१ ॥

तरुणार्कमण्डलनिभां तापसबृन्दस्य जीवनाधाराम् ।
ताटङ्कयुगलभूषां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ३२ ॥

थंबीजगम्यरूपां तत्वविदात्मस्वरूपतद्रूपाम् ।
थकअ त्रिकोणनिलयां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ३३ ॥

दहराम्बरप्रकाशां दारिद्र्याज्ञाननाशकांघ्रियुगाम् ।
दण्डिन्यादिकसेव्यां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ३४ ॥

धर्मार्थकामरूपां धवलारुणमिश्रचरणनिर्वाणाम् ।
धर्माधर्मातीतां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ३५ ॥

नलिनीतन्तुसरूपां नाडीषट्चक्रमध्यसंचाराम् ।
नवचक्रमध्यसंस्थां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ३६ ॥

परमानुग्रहकर्त्रीं पशुपतिकामेश्वराङ्कपर्यङ्काम् ।
पद्मावाणीसेव्यां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ३७ ॥

फलरूपमोक्षविद्यां फण्नमआदिकसुपल्लवस्वाङ्गाम् ।
फंवर्णलक्ष्यरूपां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ३८ ॥

बदरीवनाश्रमस्थां बालाश्यामादिबहुविधाकाराम् ।
बैन्दवमहासनेशीं कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ३९ ॥

भवरोगध्वंसकरीं भगमालाकामवज्रपरमेशीम् ।
भण्डासुरसंहर्त्रीं कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ४० ॥

मलयाचलसंस्थां श्रीमणिपूरान्तर्विभासितांघ्रियुगाम् ।
मद्बुद्धिसाक्षिरूपां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ४१ ॥

यरलवभूताधारां याकिन्यम्बास्वरूपललिताम्बाम् ।
याथार्थ्यबोधरूपां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ४२ ॥

रसरूपनित्यभूमां राकिण्याद्यैः सदा समासेव्याम् ।
रतिपतिसेवितचरणां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ४३ ॥

लम्बोदरस्य जननीं लोपामुद्राख्यहादिविद्यां ताम् ।
लाङ्गलधारिसुपूज्यां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ४४ ॥

वरदाभयादिहस्तां वाग्वादिन्यादिमातृकासेव्याम् ।
वैष्णवमायारूपां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ४५ ॥

शान्तरसवृत्तिगम्यां शारीरकशास्त्रसूत्रसंवेद्याम् ।
शांकरलहरीरूपां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ४६ ॥

षट्चक्रोपरिसंस्थां षट्त्रिंशत्तत्त्वरूपिणीमीशीम् ।
षाड्गुण्यपूरितशुभां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ४७ ॥

संध्यां सहस्रवदनां सकलागमसिद्धसंविदेकपराम् ।
सनकादियोगिवन्द्यां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ४८ ॥

हंसहळक्षगकोणां हयमुखदुर्वासआदिभिर्वन्द्याम् ।
हाहाहूहूस्तुत्यां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ४९ ॥

ळंबीजशैववविभवां ळंमन्त्रार्थस्वरूपपरमेशीम् ।
ळंवर्णमातृकाङ्गीं कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ५० ॥

क्षयरहितबोधरूपां क्षंबीजार्थस्वरूपसर्वज्ञाम् ।
क्षीरोदधिमध्यस्थां कामाक्षीं नौमि कामपीठगताम् ॥ ५१ ॥

इति श्रीगुहानन्दनाथचरणकमलसक्तचित्तेन
चिदानन्दनाथेन प्रणीतो मातृकास्तवः
संपूर्णः ।



# பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| viii | 3 | यजजी | यज्ञजीषी |
| xiv | 11 | தேவயை | தேவதையை |
| 14 | 10 | सक्ष्मी | लक्ष्मी |
| 17 | 1 | सवार्णाभा | सवर्णाभा |
| 18 | 2 | प्रञ्च | प्रपञ्च |
| 25 | 18 | गृह्णाति | गृह्णाति |
| 28 | 13 | விளஙகுபவள் | விளங்குபவள் |
| 29 | 4 | हटा | हठा |
| 33 | 25 | ையய நம: | யை நம: |
| 38 | 2 | प्रतिष्टा " | प्रतिष्ठा " |
| 40 | 13 | சுட்டிப் | சுட்டிக் |
| " | 6 | अधिष्टा | अधिष्ठा |
| 42 | 7 | प्रतिष्टा " | प्रतिष्ठा " |
| 45 | 21 | तिष्टन्यः | तिष्ठन्यः |
| 50 | 11 | प्रेरयन्ति | प्रेरयन्ती |
| 52 | 20 | ब्रह्ममयी | ब्रह्ममयी |
| 60 | 14 | ஸமஸாரம் | ஸம்ஸாரம் |
| " | 10 | लक्षकोट्यण्ड | लक्षकोट्यण्ड |
| 63 | 14 | लम्बोदरप्रसुः | लम्बोदरप्रसूः |
| 64 | 19 | ஹரீங்கார | ஹ்ரீங்கார |
| 67 | 19 | ப்அபேத | அபேத |
| 69 | 23 | देवतायःस्वकं नामस् " | देवतायाः स्वकं नाम |
| 72 | 20 | हलधृक्पूजिता | हलधृत्पूजिता |
| 77 | 22 | रूपवात् | रूपत्वात् |

| | | | |
|---|---|---|---|
| 80 | 14 | प्रतिष्टा | प्रतिष्ठा |
| 87 | 18 | ஸிருஷ்டிச் | ஸிருஷ்டி |
| 89 | 21 | वेदा | वेद् |
| 91 | 25 | पूनर्विशेत् | पुनर्विशेत् |
| 96 | 11 | हविर्भोत्री | हविर्भोक्त्री |
| 97 | 8 | तमसपहा | तमसापहा |
| ,, | 17 | संसारि | संसारी |
| ,, | 25 | பரதேதை | பரதேவதை |
| ,, | 28 | தமஸபஹா | தமஸாபஹா |
| 99 | 19 | जीवभृतां | जीवभूतां |
| 100 | 15 | ஸவபாவ | ஸ்வபாவ |
| ,, | 16 | ஸபுரி | ஸ்புரி |
| ,, | 21 | ஹருதய | ஹ்ருதய |
| ,, | 24 | हरिगोपारूणांशुका | ह्रिगोपारुणांशुका |
| 141 | 16 | வடிய | வடிவ |
| 162 | ,, | ब्रह्मणा | ब्राह्मणा |
| 167 | 24 | प्रतिष्टां | प्रतिष्ठां |
| 175 | 7 | पङ्च | पञ्च |
| 176 | 2 | विध्या | विद्या |
| ,, | ,, | दिध्या | दिद्या |
| ,, | 8 | वेध्यपि | वेद्यपि |
| ,, | 9 | विध्यविदं | विद्याविदं |
| 179 | 13 | नित्यबलि | नित्याबलि |
| 180 | ,, | रचिता | रचित |
| ,, | 20 | न्यूॅन | नूॅन |
| 185 | 13 | सगारायै | सागरायै |
| 189 | 1 | नयिकायै | नायिकायै |



१ पद्मपादाचार्य २ तोटकाचार्य **श्रीमज्जगद्गुरु आद्य शंकराचार्याः** ३ हस्तामलकाचार्य ४ सुरेश्वराचार्य

॥ ओं ह्रीं ॥

श्रीगुरुपादुकाभ्यां नमः

श्रीगणेशाय नमः

श्रीललिता महात्रिपुरसुन्दरी पराभट्टारिकायै नमः

# ஸ்ரீ லலிதா த்ரிசதி ஸ்தோத்திரத்தின்

## ஸம்ஸ்க்ருத பாஷ்ய கர்த்தாவாகிய

ஸ்ரீசங்கரபகவத்பாதாசார்ய ஸ்வாமிகளவர்களின்

## மங்களாசரணம்.

वन्दे विघ्नेश्वरं देवं सर्वसिद्धिप्रदायिनम् ।
वामाङ्कारूढवामाक्षीकरपल्लवपूजितम् ॥ १ ॥

पाशाङ्कुशेक्षुसुमराजितपञ्चशाखां
पाटल्यशालिसुषुमाञ्चितगात्रवल्लीम् ।
प्राचीनवाक्स्तुतपदां परदेवतां त्वां
पञ्चायुधार्चितपदां प्रणमामि देवीम् ॥ २ ॥

लोपामुद्रापतिं नत्वा हयग्रीवमपीश्वरम् ।
श्रीविद्याराजसंसिद्धिकारिपङ्कजवीक्षणम् ॥ ३ ॥

विस्तारितां बहुविधां बहुभिः कृतां च
टीकां विलोकयितुमक्षमतां जनानाम् ।
आकलय्य सार्थपदयोगविवेकभानुं
तुष्ट्यै करोमि ललितापदभक्तियोगात् ॥ ४ ॥

॥ ओं ह्रीं ॥

श्रीगुरुपादुकाभ्यां नमः

श्रीगणेशाय नमः

श्रीललिता महात्रिपुरसुन्दरी पराभट्टारिकायै नमः

# ஸ்ரீ லலிதா த்ரிசதி ஸ்தோத்திரத்தின்

## ஸம்ஸ்க்ருத பாஷ்ய கர்த்தாவாகிய

ஸ்ரீசங்கரபகவத்பாதாசார்ய ஸ்வாமிகளவர்களின்

## மங்களா சரணம்.

वन्दे विघ्नेश्वरं देवं सर्वसिद्धिप्रदायिनम् ।
वामाङ्कारूढवामाक्षीकरपल्लवपूजितम् ॥ १ ॥

पाशांकुशेक्षुसुमराजितपञ्चशाखां
पाटल्यशालिसुषुमाञ्चितगात्रवल्लीम् ।
प्राचीनवाक्स्तुतपदां परदेवतां त्वां
पञ्चायुधार्चितपदां प्रणमामि देवीम् ॥ २ ॥

लोपामुद्रापतिं नत्वा हयग्रीवमपीश्वरम् ।
श्रीविद्याराजसंसिद्धिकारिपङ्कजवीक्षणम् ॥ ३ ॥

विस्तारितां बहुविधां बहुभिः कृतां च
टीकां विलोकयितुमक्षमतां जनानाम् ।
तत्रत्य सर्वपदयोगविवेकभानुं
तुष्ट्यै करोमि ललितापदभक्तियोगात् ॥ ४ ॥

இங்ஙனம் ஸ்ரீசங்கரபகவத்பாதாசார்யஜகத்குரு ஸ்வாமிகள் தாமியற்றத் தொடங்கிய பாஷ்யம் இனிது முடியும் பொருட்டும், அவருக்கு முன்னுள்ள பெரியோர்களின் ஆசாரத்தைத்தழுவியும் மஹாகணபதி, பரதேவதை, அகஸ்தியர், ஸ்ரீ ஹயக்ரீவர் முதலியவர்களைத் துதித்துப் பின்னர், ஸ்ரீ பிரஹ்மாண்ட புராணத்தின் உத்தரகண்டத்தில், ஸ்ரீ ஹயக்ரீவருக்கும் அகஸ்தியருக்கும் நிகழ்ந்த ஸம்வாத ரூபமாயுள்ள ஸ்ரீ லலிதோபாக்யானம் ஸ்தோத்திர கண்டத்திலுள்ள த்ரிஶதீ ஸ்தோத்திரத்திற்கு வடமொழியில் ஒரு சிறந்த பாஷ்யம் இயற்றியருளினுர். அந்த பாஷ்யத்திற்குப் பாஷ்யார்த்தசந்திரிகை யென்னும் தமிழ்த் தாத்பர்யம் இயற்றப்படுகின்றது.



# ஶ்ரீலலிதா த்ரிசதி ஸ்தோத்ர
## சங்கரபாஷ்யத்தின்
# தமிழ் தாத்பர்யம்.

---

## தமிழ் உரையாசிரியரின் மங்களா சரணம்.

गुरुं गुहं पूर्णगिरौ वसन्तं वरप्रदं चिद्गगने चरन्तम् ।
निरन्तरं स्वात्मसुखेरमन्तं परं भजे विघ्ननिवर्तिदं तम् ॥ १ ॥

श्रीशङ्कराचार्य गुरोस्तुपादान् श्रीशं कराभ्यां धृतशङ्खचक्रम् ।
श्रीशङ्करं शङ्करवामभागां ज्ञानाभिवृद्ध्यै सततं नमामि ॥ २ ॥

आचार्यपदनिर्दिष्टे मार्गेऽद्वैतप्रकाशिके ।
ज्ञानयष्टिं करे धृत्वा निर्भयस्सन् चराम्यहम् ॥ ३ ॥

आचार्यपादैस्तु कृतं त्रिशत्याः भाष्यं सतां तुष्टिकरं महार्थम् ।
भाष्यानुसारि द्रविडार्थयुक्तां टीकाङ्करोम्यद्यसुबोधदां ताम् ॥ ४ ॥

श्रीगुहानन्दनाथाब्जचरणामृतपायिना ।
श्रीचिदानन्दनाथेन कृता भाष्यार्थचन्द्रिका ॥ ५ ॥

---

# நூல்

अगस्त्य उवाच—

हयग्रीव दयासिन्धो भगवन् शिष्यवत्सल ।
त्वत्तः श्रुतमशेषेण श्रोतव्यं यद्यदस्ति तत् ॥ १ ॥

அகஸ்தியர் வாக்கியம் :—

சிஷ்யர்களிடம் அன்பு பாராட்டும் கருணைக் கடலே! ஹயக்ரீவ பகவானே!! நான் தங்களிடம் கேழ்க்கவேண்டிய யாவற்றையும் கேட்டுக் கொண்டேன். 1

रहस्यनामसाहस्रमपि त्वत्तः श्रुतं मया ।
इतःपरं मे नास्त्येव श्रोतव्यमिति निश्चयः ॥ २ ॥

தங்களிடமிருந்து ஸ்ரீ ரஹஸ்ய நாம ஸாஹஸ்ரமும் என்னால் கேழ்க்கப்பட்டது; இனிமேல் எனக்குக்கேழ்க்க வேண்டியது ஒன்றும் இல்லை யென்பது நிச்சயம். 2

तथापि मम चित्तस्य पर्याप्तिर्नैव जायते ।
कार्त्स्न्यार्थः प्राप्य इत्येव शोचयिष्याम्यहं प्रभो ॥ ३ ॥

ஆயினும் ஹே பிரபுவே! என்னுடைய சித்தத்தில் சாந்தியுண்டாகவில்லை. ஏதோவொரு ரஹஸ்யமான விஷய மானது அறியப்படவேண்டும்; அதையடையாமையினால் நான் துக்கிக்கின்றேன். 3

किमिदं कारणं ब्रूहि ज्ञातव्यांशोऽस्ति वा पुनः ।
अस्ति चेन्मम तद्ब्रूहि ब्रूहीत्युक्त्वा प्रणम्य तम् ॥ ४ ॥

இதற்குக் காரணம் என்னமோ தாங்கள் கூறவேண்டும். நான் தங்களிடத்தில் இன்னும் கேட்டுக்கொள்ள வேண்டிய விஷயங்கள் ஏதாகிலும் உண்டோ? அப்படி இருக்குமேயானால் அதை எனக்குச் சொல்ல வேண்டும்; அவசியம் சொல்ல வேண்டும் என்று கூறி அவரை வணங்கினார். 4

सूत उवाच—

समाललंबे तत्पादयुगलं कलशोद्भवः ।
हयाननो भीतभीतः किमिदं किमिदं त्विति ॥ ५ ॥

मुञ्च मुञ्चेति तं चोक्त्वा चिन्ताक्रान्तो बभूव सः ।
चिरं विचार्य निश्चिन्वन्वक्तव्यं न मयेत्यसौ ॥ ६ ॥

तूष्णीं स्थितः स्मरन्नाज्ञां ललितांबाकृतां पुरा ।

ஸூதர் சொல்லுவது :—

இங்ஙனம் அகஸ்தியர் ஹயக்ரீவருடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டவுடன் ஹயக்ரீவரானவர், திடுக்கிட்டு "இது என்ன! இது என்ன!! பாதங்களை விடு, விட்டு விடு" என்றுகூறி மிகவும் மனவருத்தத்துடன் நெடுநேரம் யோஜித்து, என்னால் அகஸ்தியருக்கு இனிச் சொல்ல வேண்டிய விஷயம் மற்றொன்றும் இல்லை என்று நிச்சயித்துக் கொண்டு, சற்று நேரம் சும்மாவிருந்து, முன்னர் ஸ்ரீ லலிதாம்பாள் செய்த கட்டளையை நினைத்துக்கொண்டு ஒன்றும் பேசாமல் இருந்தார். 5-6½

प्रणम्य विप्रं स मुनिस्तत्पादावत्यजन्स्थितः ॥ ७ ॥

மறுபடியும் அகஸ்தியர் ஸ்ரீஹயக்ரீவரின் சரணங்களை விடாமல் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு இருந்தார். 7

वर्षत्रयावधि तथा गुरुशिष्यौ तथा स्थितौ ।
तच्छृण्वन्तश्च पश्यन्तः सर्वे लोकाः सुविस्मिताः ॥ ८ ॥

மூன்று வருஷகாலம் அப்படியே குருசிஷ்யர்கள் இங்ஙனம் இருப்பதைக் கண்டவர்களும் கேட்டவர்களுமான, பதினன்கு லோகத்தவரும் ஆச்சர்யத்தை யடைந்தார்கள். 8

ततः श्रीललितादेवी कामेश्वरसमन्विता ।
प्रादुर्भूय हयग्रीवं रहस्येवमचोदयत् ॥ ९ ॥

பின்பு ஸ்ரீ லலிதாம்பாள் காமேஸ்வரரோடுங்கூட ஸ்ரீ ஹயக்ரீவரின் முன்னர் தோன்றி, அவரிடத்தில் ரஹஸ்யமாய் இங்ஙனம் தெரிவித்தனள். 9

श्रीदेव्युवाच—

अश्वाननावयोः प्रीतिः शास्त्रविश्वासिनित्वयि ।
राज्यं देयं शिरोदेयं न देया षोडशाक्षरी ॥ १० ॥

பரதேவதையின் வாக்கியம்:—

ஹே அஶ்வாநந! சாஸ்திரத்தில் விசுவாசமுள்ள உன்னிடத்தில் எங்களுக்குப்ரீதி ஏற்பட்டிருக்கின்றது. ராஜ்யத்தைக் கொடுத்தாலும் கொடுக்கலாம்; சிரஸ்ஸைக் கொடுத்தாலும் கொடுக்கலாம்; ஸ்ரீ ஷோடஶாக்ஷரீ மந்த்ரம் கொடுக்கத்தகாதது. 10

स्वमातृजारवद्गोप्या विद्यैषेत्यागमा जगुः ।
ततोऽतिगोपनीया मे सर्वपूर्तिकरी स्तुतिः ॥ ११ ॥

தனது மாதாவினது வியபிசாரத்தை ஒருவன் எங்ஙனம் ரஹசியமாய் வைத்துக் கொள்வானே அங்ஙனமே ஸ்ரீ வித்யையை ரஹசியமாய் வைத்திருக்க வேண்டுமென்பது ஆகமங்களின் கருத்து. வித்யையைவிட, "ஸர்வபூர்த்திகரீ" யென்னும் எனது ஸ்தோத்திரமானது இன்னும் அதிக ரஹஸ்யமாய்க் காப்பாற்ற வேண்டியதாகும். 11

मया कामेश्वरेणापि कृता संगोपिता भृशम् ।
मदाज्ञया वचो देव्यश्चक्रुर्नामसहस्रकम् ॥ १२ ॥

என்னுலும் காமேஸ்வரராலும் செய்யப்பட்ட இந்த ஸ்தோத்திரமானது மிகவும் ரஹஸ்யமானது. என்னுடைய ஆக்ஞையால் வாக்தேவிகள் ஸஹஸ்ரநாமஸ்தோத்திரத்தைச் செய்தார்கள். 12

आवाभ्यां कथिता मुख्या सर्वपूर्तिकरी स्तुतिः ।
सर्वक्रियाणां वैकल्यपूर्तिर्यज्जपतो भवेत् ॥ १३ ॥

எங்களால் கூறப்பட்ட ஸர்வ பூர்த்திகரீ யென்னும் இந்தஸ்தோத்திரமானது முக்கியமானதாயும், அதன் ஜபத்தால் அது ஸர்வ கர்மங்களின் குறைவுபாடுகளைப் பூர்த்தி செய்யும்படியானதாயும் இருக்கின்றது. 13

सर्वपूर्तिकरं तस्मादिदं नाम कृतं मया ।
तद्ब्रूहि त्वमगस्त्याय पात्रमेव न संशयः ॥ १४ ॥

ஆதலால்தான் இந்தஸ்தோத்திரத்திற்கு ஸர்வபூர்த்திகரீ என்னும் நாமம் என்னுல் கொடுக்கப்பட்டது; இதை நீ அகஸ்தியருக்கு உபதேசிப்பாயாக; இதற்கு அவன் பாத்திரனே, ஸந்தேஹம் வேண்டாம். 14

पत्न्यस्य लोपामुद्राख्या मामुपास्तेऽतिभक्तितः ।
अयं च नितरां भक्तस्तस्मादस्य वदस्व तत् ॥ १५ ॥

இந்த அகஸ்தியருடைய பத்தினியாகிய லோபாமுத்திரை யென்பவள் என்னிடத்தில் அளவற்ற பக்தியோடு என்னை உபாஸிக்கின்றாள். இந்த அகஸ்தியரும் என்னிடத்தில் பரம பக்தியோடு கூடினவன்; ஆதலால் இந்த ஸ்தோத்திரத்தை இவனுக்கு உபதேசிப்பாயாக. 15

अमुञ्चमानस्त्वत्पादौ वर्षत्रयमसौ स्थितः ।
एतज्ज्ञातुमतो भक्त्या हीदमेव निदर्शनम् ॥ १६ ॥

இந்தஸ்தோத்திரத்தை அறிந்து கொள்வதற்காகவே மூன்று வருஷகாலமாய் உன்பாதங்களை விடாமல் பிடித்துக் கொண்டு இருக்கின்றான் அல்லவா? அகஸ்தியர் இந்த ஸ்தோத்திர உபதேசத்திற்கு உரியவன் என்பதற்கு இதுவே அத்தாட்சியாகும். 16

चित्तपर्याप्तिरेतस्य नान्यथा संभविष्यति ।
सर्वपूर्तिकरं तस्मादनुज्ञातो मया वद ॥ १७ ॥

அகஸ்தியருக்குச் சித்தசாந்தி, இந்தஸ்தோத்திர உபதேசத்தைத் தவிர மற்ற எதனாலும் உண்டாகாது. ஆதலால் நான் உத்தரவிடுகின்றேன். ஸர்வபூர்த்திகரஸ்துதியைக் கூறுவாயாக. 17

सूत उवाच—

इत्युक्त्वान्तरधाद्देवी कामेश्वरसमन्विता ।
अथोत्थाप्य हयग्रीवः पाणिभ्यां कुम्भसंभवम् ॥ १८ ॥
संस्थाप्य निकटे वाचमुवाच भृशविस्मितः ।

ஸூதர் கூறுகின்றார்:—

இங்ஙனம் திருவாய் மலர்ந்தருளி அம்பாள் காமேஶ்வரரோடு அந்தர்த்தானம் செய்தனள். பிறகு ஹயக்ரீவர் தன் இரண்டு கைகளாலும் அகஸ்தியரைத் தூக்கி யெழுப்பித் தனது சமீபத்தில் அமர்த்தி வெகு ஆச்சரியத்துடன் கூறுகின்றார். 18-18½

हयग्रीव उवाच—

कृतार्थोऽसि कृतार्थोऽसि कृतार्थोऽसि घटोद्भव ॥ १९ ॥

ஹயக்ரீவர் கூறுகின்றார்:—

ஹே கும்பமுனே ! நீ கிருதார்த்தனாய். இவ்வுலகில் நீ ஒருவனே கிருதார்த்தன் என்று கூறத்தக்கவன். 19

त्वत्समो ललिताभक्तो नास्ति नास्ति जगत्त्रये ।
येनागस्त्य स्वयं देवी तव वक्तव्यमन्वशात् ॥ २० ॥

உனக்குச் சமானமான பரதேவதா பக்தன் மூன்று லோகங்களிலும் இல்லை. ஏனெனில் அம்பிகையே பிரத்யக்ஷமாய் வந்து உனக்கு இந்தஸ்தோத்திரத்தைச் சொல்லும்படி ஆக்ஞாபித்தனள். 20

सच्छिष्येण त्वया चाहं दृष्टवानस्मि तां शिवाम् ।
यतन्ते दर्शनार्थाय ब्रह्मविष्ण्वीशपूर्वकाः ॥ २१ ॥

ஸத்சிஷ்யனான உன்னால் எனக்கும் பரதேவதையின் தரிசனம் ஏற்பட்டது ; பரமசிவையின் தர்சனத்திற்குப் பிரஹ்மா விஷ்ணு சிவமூர்த்திகள் எவ்வளவோ முயற்சி செய்கின்றனர். 21

अतः परं ते वक्ष्यामि सर्वपूर्तिकरं स्तवम् ।
यस्य स्मरणमात्रेण पर्याप्तिस्ते भवेद्धृदि ॥ २२ ॥

எந்தஸ்தோத்திரத்தை ஸ்மரித்த மாத்திரத்திலேயே உனக்கு சித்தசாந்தி உண்டாகுமோ அத்தகைய பெருமை வாய்ந்த ஸ்துதியை (அம்பாள் உனக்கு உபதேசிக்கும்படி உத்தரவிட்டபடியால்) கூறுகின்றேன். 22

रहस्यनामसाहस्रादपि गुह्यतमं मुने ।
आवश्यकं ततोऽप्येतल्ललितां समुपासितुम् ॥ २३ ॥

இந்த ஸ்தோத்திரமானது ஸஹஸ்ரநாமத்தைவிட மிகவும் மேலானதும் ரஹஸ்யமானதுமாகும்; ஆதலால் இது ஸ்ரீலலிதா உபாஸகர்களுக்கு மிகவும் அவசியமானதாகும். 23

---

तदहं संप्रवक्ष्यामि ललितांबानुशासनात् ।
श्रीमत्पञ्चदशाक्षर्याः कादिवर्णान्क्रमान्मुने ॥ २४ ॥

पृथग्विंशति नामानि कथितानि घटोद्भव ।
आहत्य नाम्नां त्रिशती सर्वसंपूर्तिकारिणी ॥ २५ ॥

ஹே அகஸ்தியரே! அப்படி பரம ரஹஸ்யமாயிருப்பினும், ஸ்ரீ லலிதாம்பாளின் உத்தரவின்மேல் அதை யுனக்குக் கூறுகின்றேன். ஸ்ரீ பஞ்சதஶாக்ஷரீ என்னும் மஹா வித்தையின் முதலெழுத்தாகிய 'क' முதல், கிரமமாய் பதினைந்து அக்ஷரங்களுக்கும், ஒவ்வொன்றுக்கு இருபது இருபது நாமங்கள் வீதம் முந்நூறு நாமங்களோடு கூடியது இந்த ஸர்வபூர்த்திகரீ என்னும் ஸ்தோத்திரமாகும். 24-25

रहस्यातिरहस्यैषा गोपनीया प्रयत्नतः ।
तां शृणुष्व महाभाग सावधानेन चेतसा ॥ २६ ॥

இது ரஹஸ்யங்களுக்கெல்லாம் பரம ரஹஸ்யமாய் இருப்பதனால் இதை கோப்யமாய் (மறைவாய்) வைத்துக் கொள்ளுவதில் மிகவும் ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும். இத்தகைய பெருமைவாய்ந்த ஸ்தோத்திரத்தை ஏகாக்ர சித்தத்தோடு ஶ்ரவணம் செய்வாயாக. 26

केवलं नामबुद्धिस्ते न कार्या तेषु कुम्भज ।
मन्त्रात्मकत्वमेतेषां नाम्नां नामात्मताऽपि च ॥ २७ ॥

இந்த ஸ்தோத்திரத்தைக் கேவலம் நாமாக் (பெயர்) கள் தானே என்று அசட்டை செய்யக்கூடாது. ஹே கும்பமுனியே! இவைகள் நாமங்களைப்போல் இருந்தாலும் மந்த்ர ஸ்வரூபமுடையவைகளாகும். 27

तस्मादेकाग्रमनसा श्रोतव्यं च त्वया सदा ।

ஆதலால் மனதை யொருமுகப் படுத்திக்கொண்டு உன்னால் கேழ்க்கத்தக்கதாகும். 27½

सूत उवाच—

इत्युक्त्वा तं हयग्रीवः प्रोचे नामशतत्रयम् ॥ २८ ॥

ஸூதர் கூறுகின்றார்:—

இங்ஙனம் ஹயக்ரீவர் அகஸ்தியரை நோக்கிக் கூறி த்ரிஶதி யென்னும் ஸ்தோத்திரத்தை உபதேசிக்கத் தொடங்கினார். 28

बहुकालं सुभक्तिमहिम्ना गुरुपादाम्बुजमवलम्ब्य स्थिताय कुम्भयोनिमुनये शिवदंपतिकृत नामशतत्रयोक्त्या प्रेरितो हयग्रीव उवाच—

பக்திப்பெருக்கினல் வெகுகாலம் தனது குருவாகிய ஸ்ரீஹயக்ரீவரது பாதாரவிந்தங்களை விடாமல் பிடித்துக் கொண்டிருந்த கும்பமுனியின் பொருட்டுச் சிவதம்பதிகளால் திருவாய் மலர்ந்தருளப்பட்ட த்ரிஶதிநாமஸ்தோத்திரத்தைப் பரதேவதையால் ஏவப்பட்ட மனத்தராய் ஸ்ரீஹயக்ரீவர் கூறுகின்றார்.

---

## त्रिशती नामस्तोत्रम्

## த்ரிஶதீநாமஸ்தோத்திரம்.

अस्य श्रीललितात्रिशती स्तोत्रमहामन्त्रस्य, भगवान् हयग्रीव ऋषिः, अनुष्टुप्छन्दः, श्रीललितात्रिपुरसुन्दरी देवता, ऐं बीजं, सौः शक्तिः, क्लीं कीलकं, मम चतुर्विधफलपुरुषार्थसिद्ध्यर्थे जपे विनियोगः, ऐं अंगुष्ठाभ्यां नमः । क्लीं तर्जनीभ्यां नमः । सौः मध्यमाभ्यां नमः । ऐं अनामिकाभ्यां नमः । क्लीं कनिष्ठिकाभ्यां नमः । सौः करतलकरपृष्ठाभ्यां नमः । ऐं हृदयाय नमः । क्लीं शिरसे स्वाहा । सौः शिखायैवषट् । ऐं कवचाय हुं । क्लीं नेत्रत्रयाय वौषट् । सौः अस्त्राय फट् । भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः ॥ ध्यानम् ॥

अतिमधुरचापहस्तामपरिमिता मोदबाणसौभाग्याम् ।
अरुणामतिशयकरुणामभिनवकुलसुन्दरीं वन्दे ॥ २९ ॥

लं ; इत्यादिपञ्चपूजांकृत्वा :—

हयग्रीव उवाच—

ककाररूपा कल्याणी कल्याणगुणशालिनी ।
कल्याणशैलनिलया कमनीया कलावती ॥

कमलाक्षी कल्मषघ्नी करुणामृतसागरा ।
कदम्बकाननावासा कदम्बकुसुमप्रिया ॥

कन्दर्पविद्या कन्दर्पजनकापाङ्गवीक्षणा ।
कर्पूरवीटीसौरभ्यकल्लोलितककुप्तटा ॥

कलिदोषहरा कञ्जलोचना कम्रविग्रहा ।
कर्मादिसाक्षिणी कारयित्री कर्मफलप्रदा ॥

एकाररूपा चैकाक्षर्यैकानेकाक्षराकृतिः ।
एतत्तदित्यनिर्देश्या चैकानन्दचिदाकृतिः ॥

एवमित्यागमाबोध्या चैकभक्तिमदर्चिता ।
एकाग्रचित्तनिर्ध्याता चैषणारहिताद्दता ॥

एलासुगन्धिचिकुरा चैनःकूटविनाशिनी ।
एकभोगा चैकरसा चैकैश्वर्यप्रदायिनी ॥

एकातपत्रसाम्राज्यप्रदा चैकान्तपूजिता ।
एधमानप्रभा चैजदनेकजगदीश्वरी ॥

एकवीरादिसंसेव्या चैकप्राभवशालिनी ।
ईकाररूपा चेशित्री चेप्सितार्थप्रदायिनी ॥

ईदृगित्याविनिर्देश्या चेश्वरत्वविधायिनी ।
ईशानादिब्रह्ममयी चेशित्वाद्यष्टसिद्धिदा ॥ १० ॥

ईक्षित्रीक्षणसृष्टाण्डकोटिरीश्वरवल्लभा ।
ईडिता चेश्वरार्धाङ्गशरीरेशाधिदेवता ॥

ईश्वरप्रेरणकरी चेशताण्डवसाक्षिणी ।
ईश्वरोत्सङ्गनिलया चेतिबाधाविनाशिनी ॥

ईहाविरहिता चेशशक्तिरीषत्स्मितानना ।
लकाररूपा ललिता लक्ष्मीवाणीनिषेविता ॥

लाकिनी ललनारूपा लसद्दाडिमपाटला ।
ललन्तिकालसत्फाला ललाटनयनार्चिता ॥

लक्षणोज्ज्वलदिव्यांगी लक्षकोट्यण्डनायिका ।
लक्ष्यार्था लक्षणागम्या लब्धकामा लतातनुः ॥

ललामराजदलिका लम्बिमुक्तालताञ्चिता ।
लम्बोदरप्रसूर्लभ्या लज्जाढ्या लयवर्जिता ॥

ह्रींकाररूपा ह्रींकारनिलया ह्रींपदप्रिया ।
ह्रींकारबीजा ह्रींकारमन्त्रा ह्रींकारलक्षणा ॥

ह्लींकारजपसुप्रीता ह्लींमती ह्लींविभूषणा ।
ह्लींशीला ह्लींपदाराध्या ह्लींगर्भा ह्लींपदाभिधा ॥

ह्रींकारवाच्या ह्रींकारपूज्या ह्रींकारपीठिका ।
ह्रींकारवेद्या ह्रींकारचिन्त्या ह्रीं ह्रींशरीरिणी ॥

हकाररूपा हलधृक्पूजिता हरिणेक्षणा ।
हरप्रिया हराराध्या हरिब्रह्मेन्द्रवन्दिता ॥ २० ॥

हयारूढासेविताङ्घ्रिर्हयमेधसमर्चिता ।
हर्यक्षवाहना हंसवाहना हतदानवा ॥

हत्यादिपापशमनी हरिदश्वादिसेविता ।
हस्तिकुम्भोत्तुङ्गकुचा हस्तिकृत्तिप्रियाङ्गना ॥

हरिद्राकुंकुमादिग्धा हर्यश्वाद्यमरार्चिता ।
हरिकेशसखी हादिविद्या हालामदालसा ॥

सकाररूपा सर्वज्ञा सर्वेशी सर्वमङ्गळा ।
सर्वकर्त्री सर्वभर्त्री सर्वहन्त्री सनातना ॥

सर्वानवद्या सर्वाङ्गसुन्दरी सर्वसाक्षिणी ।
सर्वात्मिका सर्वसौख्यदात्री सर्वविमोहिनी ॥

सर्वाधारा सर्वगता सर्वावगुणवर्जिता ।
सर्वारुणा सर्वमाता सर्वभूषणभूषिता ॥

ककारार्था कालहन्त्री कामेशी कामितार्थदा ।
कामसञ्जीवनी कल्या कठिनस्तनमण्डला ॥

करभोरुः कलानाथमुखी कचजिताम्बुदा ।
कटाक्षस्यन्दिकरुणा कपालिप्राणनायिका ॥

कारुण्यविग्रहा कान्ता कान्तिधूतजपावलिः ।
कलालापा कम्बुकण्ठी करनिर्जितपल्लवा ॥

कल्पवल्लीसमभुजा कस्तूरीतिलकाञ्चिता ।
हकारार्था हंसगतिर्हाटकाभरणोज्ज्वला ॥ ३० ॥

हारहारिकुचाभोगा हाकिनी हल्यवर्जिता ।
हरित्पतिसमाराध्या हठात्कारहतासुरा ॥

हर्षप्रदा हविर्भोक्त्री हार्दसन्तमसापहा ।
हल्लीसलास्यसन्तुष्टा हंसमन्त्रार्थरूपिणी ॥

हानोपादाननिर्मुक्ता हर्षिणी हरिसोदरी ।
हाहाहूहूमुखस्तुत्या हानिवृद्धिविवर्जिता ॥

हय्यङ्गवीनहृदया हरिगोपारुणांशुका ।
लकाराख्या लतापूज्या लयस्थित्युद्भवेश्वरी ॥

लास्यदर्शनसंतुष्टा लाभालाभविवर्जिता ।
लङ्घ्येतराज्ञा लावण्यशालिनी लघुसिद्धिदा ॥

लाक्षारससवर्णाभा लक्ष्मणाग्रजपूजिता ।
लभ्येतरा लब्धभक्तिसुलभा लाङ्गलायुधा ॥

लग्नचामरहस्तश्रीशारदापरिवीजिता ।
लज्जापदसमाराध्या लम्पटा लकुलेश्वरी ॥

लब्धमाना लब्धरसा लब्धसम्पत्समुन्नतिः ।
ह्रींकारिणी ह्रींकारादिः ह्रींमध्या ह्रींशिखामणिः ॥

ह्रींकारकुण्डाग्निशिखा ह्रींकारशशिचन्द्रिका ।
ह्रींकारभास्कररुचिः ह्रींकाराम्भोदचञ्चला ॥

ह्रींकारकन्दाङ्कुरिका ह्रींकारैकपरायणा ।
ह्रींकारदीर्घिकाहंसी ह्रींकारोद्यानकेकिनी ॥ ४० ॥

ह्रींकारारण्यहरिणी ह्रींकारावालवल्लरी ।
ह्रींकारपञ्जरशुकी ह्रींकाराङ्गणदीपिका ॥

ह्रींकारकन्दरासिंही ह्रींकाराम्भोजभृङ्गिका ।
ह्रींकारसुमनोमाध्वी ह्रींकारतरुमञ्जरी ॥

सकाराख्या समरसा सकलागमसंस्तुता ।
सर्ववेदान्ततात्पर्यभूमिः सदसदाश्रया ॥

सकला सच्चिदानन्दा साध्या सद्गतिदायिनी ।
सनकादिमुनिध्येया सदाशिवकुटुम्बिनी ॥

सकलाधिष्ठानरूपा सत्यरूपा समाकृतिः ।
सर्वप्रञ्चनिर्मात्री समानाधिकवर्जिता ॥

सर्वोत्तुङ्गा संगहीना सगुणा सकलेष्टदा ।
ककारिणी काव्यलोला कामेश्वरमनोहरा ॥

कामेश्वरप्राणनाडी कामेशोत्संगवासिनी ।
कामेश्वरालिङ्गिताङ्गी कामेश्वरसुखप्रदा ॥

कामेश्वरप्रणयिनी कामेश्वरविलासिनी ।
कामेश्वरतपस्सिद्धिः कामेश्वरमनःप्रिया ॥

कामेश्वरप्राणनाथा कामेश्वरविमोहिनी ।
कामेश्वरब्रह्मविद्या कामेश्वरगृहेश्वरी ॥

कामेश्वराह्लादकरी कामेश्वरमहेश्वरी ।
कामेश्वरी कामकोटिनिलया काङ्क्षितार्थदा ॥ ५० ॥

लकारिणी लब्धरूपा लब्धधीर्लब्धवाञ्छिता ।
लब्धपापमनोदूरा लब्धाहंकारदुर्गमा ॥

लब्धशक्तिर्लब्धदेहा लब्धैश्वर्यसमुन्नतिः ॥
लब्धवृद्धिर्लब्धलीला लब्धयौवनशालिनी ॥

लब्धातिशयसर्वाङ्गसौन्दर्या लब्धविभ्रमा ।
लब्धरागा लब्धपतिः लब्धनानागमस्थितिः ॥

लब्धभोगा लब्धसुखा लब्धहर्षाभिपूरिता ।
ह्रींकारमूर्तिर्ह्रींकारसौधशृङ्गकपोतिका ॥

ह्रींकारदुग्धाब्धिसुधा ह्रींकारकमलेन्दिरा ।
ह्रींकारमणिदीपार्चिर्ह्रींकारतरुशारिका ॥

ह्रींकारपेटकमणिर्ह्रींकारादर्शबिम्बिता ।
ह्रींकारकोशासिलता ह्रींकारास्थाननर्तकी ॥

ह्रींकारशुक्तिकामुक्तामणिर्ह्रींकारबोधिता ।
ह्रींकारमयसौवर्णस्तम्भविद्रुमपुत्रिका ॥

ह्रींकारवेदोपनिषद्ध्रींकाराध्वरदक्षिणा ।
ह्रींकारनन्दनारामनवकल्पकवल्लरी ॥

ह्रींकारहिमवद्गङ्गा ह्रींकारार्णवकौस्तुभा ।
ह्रींकारमन्त्रसर्वस्वा ह्रींकारपरसौख्यदा ॥



## श्रीचक्रम्



बिन्दुत्रिकोणवसुकोणदशारयुग्म
मन्वश्रनागदळसंयुतषोडशारम् ।
वृत्तत्रयं च धरणीसदनत्रयं च
श्रीचक्रमेतदुदितं परदेवतायाः ॥



SRI KANCHI KAMAKSHI

*With kind permission of :—*

**His Holiness, Jagath Guru Sri Sankaracharia Swamigal of Sri Kanchi Kamakoti Peetam.**



SRI KANCHI KAMAKSHI

*With kind permission of :—*

**His Holiness, Jagath Guru Sri Sankaracharia Swamigal of Sri Kanchi Kamakoti Peetam.**

ஸ்ரீ

# லலிதா த்ரிசதீஸ்தோத்திர நாமாக்களின் ஸ்ரீசங்கரபாஷ்யத்திற்கு சந்திரிகை என்னும் தமிழ் உரை.

1. **ककाररूपा**—காதி வித்யையையே சரீரமாகவுடைய பரதேவதையின் ஞாபகவிசேஷணம் **क** என்னும் வர்ணம் (அக்ஷரம்) ஆகும். அல்லது, **क** என்னும் எழுத்தே ஒருபதமாகும். இந்த ககாரரூப வாசகத்திற்கு ஹிரண்யகர்ப்பன், ஜலம், உத்தமாங்கம் (சிரஸ்ஸு), ஸுகம் முதலியன அர்த்தங்கள் ஆகும். ககாரமானது மெய் (**व्यंजनं**) யெழுத்துக்களுக்கெல்லாம் முதலாவதாயுள்ள காரணத்தால், ஸர்வ ஜகத்தையும் சிருஷ்டித்தல், காப்பாற்றுதல் முதலிய தர்மங்களோடு கூடிய ஹிரண்யகர்ப்பனைக் குறிக்கின்றது ; ஆதலால் ககாரரூபா ;

அல்லது, ககாரத்தின் மற்றொருபொருளான ஜலமே அந்நம் முதலியவற்றை விருத்திசெய்யுங் காரணத்தால் ஸர்வப் பிரபஞ்சத்தையும் ஜீவிக்கச்செய்வதுபோல, ககாரம், மூலவித்யையின் முதலெழுத்தாய் இருப்பதால் மற்ற பீஜங்களையும் போஷிக்கின்றது. ஆதலால் ககார ரூபா; அல்லது, ஸர்வப் பிராணிகளுக்கும் சிரஸில் அம்ருதம் இருக்கின்றது ; இது யோகசாஸ்திரப் பிரஸித்தம். யோகஸாதனையினால் மூலாதாரத்திலிருந்து குண்டலினீ சக்தியை எழுப்பி ஸஹஸ்ராரத்திலுள்ள அம்ருதத்தைப் பிரவஹிக்கும்படிசெய்

யும் யோகிகளுக்கு ஈஶ்வரபாவம் உண்டு. இங்ஙனமே க வர்ணம் காதிவித்யையில் முதலாவது பீஜமாகும். இதைப் புரஶ்சர்யை செய்பவர்கள் சிவபாவத்தைத் தடையின்றி அடைகின்றார்கள்; ஆதலால் ககார ரூபா ;

அல்லது, "कं ब्रह्म ; खं ब्रह्म" என்னும் ஶ்ருதிப்படி சிதாகாசவடிவ தஹராகாசமானது ஆநந்தஸ்வரூபமாய் இருக்கின்றது. இங்ஙனமே ஸுகம் என்று பொருள்படும் ககாரமானது முமுக்ஷுக்கள், மோக்ஷத்தின் பொருட்டு மிக்க அபிலாஷையுடன் விரும்பும் பிரஹ்மவித்யா மூலமந்த்ரத்தின் முதலக்ஷரமாயிருக்கின்றது ஆதலின் ககாரரூபா.

திரண்டபொருள் :—காதிவித்யையின் முதலெழுத்தாய் இருப்பதால், வித்யையே சரீரமாயுடைய பரதேவதையை ஞாபகப்படுத்துங் காரணத்தாலும், மெய்யெழுத்துக்களுக்கெல்லாம் முதலாய் இருப்பதுபோல, ஸர்வப் பிரபஞ்சகாரண ஹிரண்ய கர்ப்பவடிவமாய் இருப்பதாலும், ஜலமானது ஸகல உலகத்திற்கும் ஜீவனமாய் இருப்பதுபோலக் காதிவித்யையின் முதலாவது எழுத்தாகிய ககாரம் அவ்வித்யையின் மற்ற அக்ஷரங்களைப் போஷிப்பதாலும், சரீரத்தின் பிரதான அங்கமாகும் சிரஸிலுள்ள அம்ருதத்தினால் யோகிகள் மோக்ஷத்தை அடைவதுபோல இந்த क என்னும் அக்ஷரத்தைப் புரஶ்சர்யை செய்யும் முமுக்ஷுக்கள் மோக்ஷத்தையடைவதனாலும், சிதாகாசவடிவ தஹராகாசமானது ஆநந்தஸ்வரூபமாய் விளங்குவதுபோல ஸுகஸ்வரூப மோக்ஷத்தின் பொருட்டு முமுக்ஷுக்களால் விரும்பப்படும் பிரஹ்ம வித்யையின் முதலக்ஷரமாயிருப்பதாலும் ககாரரூபா என்னும்பெயர் பரதேவதைக்கு ஏற்பட்டது.

ககாரரூபாயை நம: (1)

2. **कल्याणी**—கல்யாணங்கள் என்பவை ஸுகங்களாகும். இந்த (விஷய) ஸுகங்கள், ஶ்ருதிகளில் கூறப்பட்டபடி, ஆரோக்யமும் யௌவனமுங் கூடிய ஸார்வபௌமன் முதல் சதுர்முகப் பிரஹ்மன் வரையிலுள்ள சரீர உபாதிகளையுடையவர்களால் அநுபவிக்கப்படும் ஸுகங்களாகும். இவை நிருபாதிகஸ்வரூப ஆநந்தக் கடலினின்றும் தெறிக்கும் நுண்ணிய நீர்த்துளிகளேயாகும்; ஆநந்தமே வடிவமாக வுடையவள் கல்யாணீ. "**विज्ञानमानन्दं ब्रह्म**" என்னும் ஶ்ருதிப்படி நிரங்குஶ நித்யாநந்தஸ்வரூப பிரஹ்மலக்ஷணமாய் விளங்குகின்ற பரதேவதையென்பது பொருள்.

கல்யாண்யை நம: (2)

3. **कल्याणगुणशालिनी**—கல்யாணங்களாயுள்ள குணங்களோடு கூடியவள். ஸுகத்தையுண்டுபண்ணக்கூடிய ஸத்யகாமத்வம், ஸத்யஸங்கல்பத்வம் முதலிய குணங்களுக்குக் கல்யாண குணங்கள் என்றுபெயர். இந்த குணங்கள் அம்பாளைப் பிரகாசிப்பிக்கின்றன; அல்லது மேற்கூறிய கல்யாண குணங்களால் அம்பாள் கொண்டாடப்படத் தக்கவள்; அல்லது அறியத்தக்கவள். சுத்த சைதன்யரூபமாயுள்ள சித்சக்திக்குக் குணங்கள் ஸ்வாதீனமானவை. வாஸ்தவமாய் அம்பாளுக்குக் குணங்களே இல்லை. "**साक्षीचेता केवला निर्गुणश्च**" என்று உபநிஷத்தும், **निर्गुणा** என்று ஸஹஸ்ரநாமமும் கூறுகின்றன. ஆதலின் அம்பாளிடத்தில் குணங்கள் ஆரோபிக்கப்பட்டுப் பிரகாசிக்கப்படுவன வாகும். ஆயினும் உபாதியாகிய குணங்களைக் கற்பித்துத் துதிப்பது தோஷமானதன்று; பேதபுத்தியோடு கூடிய பக்தர்களுக்கு ஸகுணரூபஸ்தோத்திரத்தினுல் அம்பாளுடைய கருணை உண்டா

கின்றது; ஆயினும் ஆரோபிக்கப்பட்டுள்ள குணங்களை அபவாதம் செய்து (நீக்கி) அபேதரூப சுத்தசைதன்யமென்னும் அறிவோடு உபாஸிப்பது தான் சிறந்ததாகும். இத்தகைய முக்கிய (நிர்க்குண) உபாஸ்தியைக் குருமுகமாய்த் தெரிந்து கொள்ளுவது அவசியம். ஆதலின் அது இங்கே விஸ்தரிக்கப் படவில்லை.

கல்யாணகுணசாலின்யை நம: (3)

4. **कल्याणशैलनिलया**—கல்யாணமென்பது ஸுகம்; சைலம் என்பது மலைச்சிகரம் (சிலாகனம்); கல்யாண சைலத்தில் அதாவது துக்கம் ஒருசிறிதும் கலவாத தனிச் சுகத்தில் இருப்பை உடையவள். மலைச்சிகரத்தில் மண், மரம் முதலியன ஒன்றுங்கிடையாது—தனியான கல்தான் இருக்கும். இதுதான் சிலாகனம். "**स भगवः कस्मिन् प्रतिष्ठित इति स्वेमहिम्नीति होवाच**" **इति श्रुतिः** "பிரஹ்மாபின்ன சித்சக்தி எங்கே ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றது? ஸ்வயமாயுள்ள தனது மஹிமையாகும் ஆநந்தத்தில் அது ப்ரதிஷ்டிக்கப்பட்டுள்ளது" என்பது ஶ்ருதி. அல்லது ஆநந்தமயகோசமே நிலையமாக வுடையவள். "**ब्रह्म पुच्छं प्रतिष्ठा**" என்னும் ஶ்ருதி இதற்குப் பிரமாணமாகும். அல்லது, மஹாமேருவையே இருப்பிடமாகக்கொண்டவள். **सुमेरुमध्यशृंगस्था** என்பது இதற்குப் பிரமாணமாம்.

கல்யாணஶைலநிலயாயை நம: (4)

5. **कमनीया**—பரமப்ரேமைக்கு விஷயமாயிருப்பவள்; ஆநந்தமேஸ்வரூபமாக வுடையவளாதலின். "**कोह्येवान्यात्कः प्राण्यात्। यदेष आकाश आनंदो नस्यात्**" என்பது ஶ்ருதி. ஸுகமானது மனதை அபஹரிக்கும் தன்மையையுடையது; எல்லாருக்கும் ஸுகத்தில்தான் விருப்பம். ஆசையோடு விரும்பிய பொருள்

கிட்டியபோது ஸுகம் ஏற்படுகின்றது. ஸுகம் மனத்தின் பரிணமமாகும். ஆதலால்தான் ஸுகம் மனத்தை அபஹரிக்கின்றது என்று சொல்வது. பரமப்பிரேமைக்கு விஷயமாயுள்ளவள் பரதேவதை. மாயையின் மயக்கத்திற்குட்பட்டவர்கள், இச்சிக்கும் ஸுகங்களைப் பெறுவதற்காகத் தங்கள் தங்களுக்கு இஷ்டமான தேவதையை உபாஸிக்கின்றார்கள். பக்தர்கள் விரும்பிய (சுகரூப) பலனைப் பரதேவதையே அவரவர்களின் இஷ்டதேவதையாய் இருந்து தருவதால் கமநீயா எனப்படுவாள்; அல்லது ஞானிகளுக்கு "**आत्मनस्तुकामाय सर्वं प्रियं भवति**" என்னும் ஶ்ருதிப்படி, ஆநந்தகனமாயும், ஆத்மஸ்வரூபமாயும், மனோஹர ஸுந்தரரூபமாயும் இருப்பதால் கமநீயா யென்னும் பெயர் பரதேவதைக்குப் பொருந்தும்.

கமநீயாயை நம: (5)

6. **कलावती**—கலைகள் யென்றால், கை, கால், தலை முதலிய அவயவங்கள்; அல்லது அறுபத்திநான்கு வித்தைகள்; அல்லது சந்திரனுடைய கலைகள் என்பனவாகும். "**यतीनां मंत्रिणां चैव ज्ञानिनां योगिनां तथा। ध्यानपूजानिमित्तं हि तनूं गृह्णाति मायया**" என்னும் பிரமாணப்படி பக்தர்களின் தியானத்திற்காகவே கை கால் முதலிய அவயவங்களுள்ள சரீரத்தோடும், அல்லது ஸர்வசாஸ்திர ஸ்வரூபத்தோடும் அல்லது சந்திரகலாஸ்வரூபத்தோடும் விளங்குபவள் என்று பொருள்.

கலாவத்யை நம: (6)

7. **कमलाक्षी**—மலர்ந்த தாமரைப்பூவின் இதழ்போன்ற நேத்திரங்களையுடைவள்; அல்லது கமலா என்றால் லக்ஷ்மீ. லக்ஷ்யத்திற்குரிய விஷயங்கள் லக்ஷ்மீயெனக் கூறப்படும். அக்ஷி என்றால் விஷய ஞானத்திற்கு நிமித்தமானப்பிரமா

ணம் என்பது பொருள். லக்ஷ்யத்தின் ஞானத்திற்குரிய வ்ருத்தியோடு கூடியவள். கமலா = லக்ஷ்மீ = ஐஶ்வர்யம். இவ்வுலகத்திற்கு வேண்டிய ஐஶ்வர்யத்தையும், பரலோகத்திற்கு வேண்டிய தர்மத்தையும் அருளையும் தருவதற்குக் காரணமான அக்ஷியையுடையவள். என்ருல், பரதேவதையின் கடைக்கண் பார்வையால் அருட்செல்வமும் பொருட்செல்வமும் உண்டாகும் என்பது கருத்து.

கமலாக்ஷ்யை நம: (7)

8. **कल्मषघ्नी**—கல்மஷங்களை (பாபங்களை) நாசம் செய்கின்றவள். "**अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि**" என்பது கீதாவசனம், அல்லது "**ज्ञानाग्निस्सर्व कर्माणि भस्मसात्कुरुतेऽर्जुन**" என்னும் பிரமாணப்படி வேதாந்த மஹாவாக்யங்களாலேற்படும் அபரோக்ஷரூப பிரஹ்மவித்யா வடிவமானவள்.

கல்மஷக்ன்யை நம: (8)

9. **करुणामृतसागरा**—கருணையினுல் உண்டாகக் கூடிய மோக்ஷரூப அம்ருதத்திற்குக்கடல் போன்றவள். எங்ஙனம், கடலானது தான் இருந்தவிடத்திலேயே இருந்துகொண்டு அன்னியமான உலகத்தை நீருண்ட மேகத்தினின்றும் விடுபட்டுப்பெய்யும் மழையினுல் ஜீவிப்பிக்கின்றதோ, அங்ஙனமே "**ब्रह्म वेद ब्रह्मैव भवति-ब्रह्मविदाप्नोति परम्**" என்னும் ஶ்ருதிகளின்படி, தான் மோக்ஷரூப அம்ருதக்கடலாய் இருந்துகொண்டு "**लभते च ततः कामान् मयैव विहितान् हितान्**" என்னும் பகவானுடைய வாக்யத்தின்படி அந்த அந்த அதிகாரிகளுக்குத் தக்கபடி, அவரவர்களால் செய்யப்பட்ட கர்மம் உபாஸனை முதலியவைகளின் பலத்தைக் கொடுப்பதனுல் பரதேவதையைக் கடலோடு உவமித்துக் கூறப்பட்டது. அல்லது

சரணமடைந்த பக்தர்களைக் காப்பாற்றும்தர்மம், கருணையாகும். இவ்வித கருணைக்குக் கடல்போன்றவள். அல்லது, கருணையினால், ஸகர வம்சத்து அரசர்களைத் தான் பாகிரதீ (கங்கை) வடிவங்கொண்டு என்றும் அழியாத பெரும் புகழைப்பெறும்படி செய்து பிரஹ்மலோகத்தை யடையச் செய்தவள். கருணாம்ருதஸாகராயை நம: (9)

10. **कदम्बकाननावासा**—கதம்ப வனத்தையே கிருஹமாகக்கொண்டு விளங்குபவள். **बिन्दुस्थानं सुधासिन्धुः पंचयोन्यस्सुरद्रुमाः । तत्रैव नीपश्रेणीच तन्मध्ये मणिमण्टपम् ॥ तत्र चिन्तामणिमयं**=என்னும் பைரவயாமள வசனப்படி கதம்ப வனத்தில், மணிமண்டபத்தில் விளங்கும், சிந்தாமணி மாளிகையில் வசிப்பவள்.

கதம்பகாநநாவாஸாயை நம: (10)

11. **कदम्बकुसुमप्रिया**—கதம்ப புஷ்பங்களில் மிகுந்த இஷ்டத்தையுடையவள்.

குறிப்பு:—கதம்பவிருக்ஷமானது தேவவிருக்ஷமாகிய கற்பகவிருக்ஷங்களில் ஒன்று. கற்பகவிருக்ஷமென்பது அந்தக்கரணமாகும். அந்தக்கரணம் பஞ்சபூதங்களின் ஸத்வ குணங்களின் ஸமஷ்டியாகும். அங்ஙனமே கல்பவிருக்ஷமும் ஸந்தானம், ஹரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கதம்பம் என்னும் ஐவகை விருக்ஷங்களின் பொதுப்பெயர். அந்தக்கரணத்தின் ஐந்து பாகங்கள், மனம், புத்தி, சித்தம், அஹங்காரம், உள்ளம் என்பவையாகும்; மனம் வாயுவின் ஸத்வாம்சம், புத்தி அக்னியின்ஸதவம், சித்தம் ஜலத்தின் ஸத்வம்,

அஹங்காரம் ப்ருதிவியின் ஸத்வம், உள்ளம் அல்லது ஸமஷ்டி அந்தக்கரணம் ஆகாசத்தினது ஸத்வம். ஆதலின் கதம்பம் என்பது மனமாகும்; மனமென்னும் காட்டில் வஸிப்பவள் **कदम्बकाननावासा.** கதம்பகுஸுமம் என்பது மனத்தின் வ்ருத்தி யாகும். ஞானமும் வ்ருத்தியும் அவிநாபாவரூபங்கள்; வ்ருத்தியின்றி ஞானமில்லை; ஞானத்தையடையும் உத்தே சமின்றி எந்த வ்ருத்தியும் இல்லை; ஆதலின் விஷய ஞான ரூபமும் தத்வஞானரூபமும் அபேதமாய் உடைய பர தேவதைக்கு, மனோவ்ருத்திரூப கதம்பகுஸுமம் அதிகப்ரீதி கரமானது. கதம்பகுஸுமப்ரியாயை நம: (11)

12. **कन्दर्पविद्या**—கந்தர்ப்பன் = மன்மதன். அவனது வித்யையில், ஆத்மபிரஹ்மைக்ய ஞானரூப அதிஷ்டான மாய் விளங்குபவள். அல்லது மன்மதனை மந்த்ரத்ரஷ்டா வாயுடைய காதி பஞ்சதசியானது, தத்வஞானத்தை யடை யச்செய்வதால் வித்யையென்னும் பெயரைப்பெற்றிருக்கின் றது; அவ்வித்யைக்கு வாச்சியமாயிருப்பவள்.

கந்தர்ப்பவித்யாயைநம: (12)

13. **कन्दर्पजनकापाङ्गवीक्षणा**—தன் கடைக்கண்பார்வை யால், பரமசிவனது நெற்றிக்கண்ணால் எரிந்து சாம்பலான மன்மதனை உயிர்ப்பித்தவள்; **हरनेत्राग्नि संदग्ध कामसंजीवनौषधिः** என்பது லலிதாஸஹஸ்ரநாமம். இந்த நாமத்தினால் அழகற் றவரும் புத்தியற்றவருங் கூடப் பரதேவதையின் கடாக்ஷ வீக்ஷண்யத்திற்குப் பாத்திராவார்களாயின், அவர்கள், மன்மதனைப்போல் ரூப, யௌவன, சாமர்த்திய, ஐஸ்வர்யங் களையடைகின்றார்கள் என்று சித்திக்கின்றது.

नरं वर्षीयांसं नयनविरसं नर्मसु जडं
तवापांगालोके पतितमनुधावन्ति शतशः ।
गलद्वेणीबन्धाः कुचकलशविस्रस्तसिचया
हटात्त्रुट्यत्कांच्यो विगलितदुकूला युवतयः ॥

என்னும் ஸௌந்தர்யலஹரி வசனம் இங்கு பிரமாணமாம்; அல்லது, மன்மதனுடைய ஜனகனு(பிதாவா)ன மஹாவிஷ்ணுவானவர் அம்பாளுடைய கடைக்கண்பார்வையாகும் ஆக்ஞையைப்பெற்று லோகரக்ஷணம் செய்து வருகின்றனர். ஆதலால் மஹாவிஷ்ணுவை லோகபரிபாலன கார்யத்தில் ஏவும்படியான கடைக்கண் பார்வையையுடையவள். அல்லது, மன்மதனின் தாயாராகும் மஹா லக்ஷ்மியைப் பக்தர்களுக்கு ஸர்வாபீஷ்டங்களையும் தரும்படி ஆக்ஞாபித்து ஏவக்கூடிய கடைக்கண்பார்வையை யுடையவள். அல்லது, மன்மத விகாரத்தை யுண்டுபண்ணக்கூடிய புஷ்பம், சந்தனம், கானம் (பாட்டு), சந்திரிகை (நிலவு) முதலிய போக்யவிஷயங்களைத்தனது கடைக்கண்பார்வையால் உண்டாக்கத்தக்கவள்.

கந்தர்ப்பஜனகாபாங்கவீக்ஷணாயைநம: (13)

14. **कर्पूरवीटीसौरभ्यकल्लोलितककुप्तटा** — பச்சைக்கற்பூரம் கலந்த தாம்பூலவாஸனையினால் உலகத்தின் பத்துத் திக்குகளையும் பரிமளிக்கச் செய்பவள். இதனால் பரதேவதையின் மஹாராஜபோகம் ஸூசிப்பிக்கப்பட்டதாகும்.

கற்பூரவீடீஸௌரப்ய கல்லோலித ககுப்தடாயை நம: (14)

15. **कलिदोषहरा** — கலியுகத்தில் பிறந்தவர்களுக்கு ஜனன மாத்திரத்தாலேயே பாபங்கள் ஏற்படுகின்றன.

அந்த பாபங்களை, அம்பாள், தனது ஸகுண விக்ரஹங்களைத் தரிசனம் செய்வதனாலும், தனது திவ்ய சரித்திரக் கதைகளைக் கேட்பதனாலும், தனது நாமஸங்கீர்த்தனத்தினாலும், தனது ஸ்தோத்திரங்களினாலும், பூஜையினாலும், தியானத்தினாலும் நாசம்செய்கின்றாள். **कलिकल्मषनाशिनी**— ஸஹஸ்ரநாமம். அல்லது, கலியென்றால், மதவாதிகள் ஒருவருக்கொருவர் செய்துக்கொள்ளும் விவாதம். இது தங்கள் தங்கள் மதத்தில் அபிநிவேசமுடைமையால் உண்டாகும் தோஷங்கள். இவை பரப்பிரஹ்ம விஷயகமான அஸ்தித்வ – நாஸ்தித்வங்கள் ; பின்னத்வ – அபின்னத்வங்கள் முதலியனவும், இவைகளைச் சாதிக்கத் தங்கள் தங்களுக்கு அநுகூலமான ஆபாஸ ஶ்ருதிகளைத் தமது இஷ்டம் போல் அர்த்தம்செய்து ஒருவருக்கொருவர் வாதிட்டு க்ரோதம், நிந்தை, ஆக்ரஹம் முதலியவற்றை யடைதலுமாகும். இவ்விதமான ஸமஸ்த தோஷங்களையும் அத்வைதப் பிரஹ்மஞான ஸாதனத்தினால் நிவர்த்திசெய்பவள் என்று பொருள். கலிதோஷஹராயை நம: (15)

16. **कञ्जलोचना**—ஜலத்திற் பிறந்தவைகளான தாமரை, நீலோத்பலம் முதலியவற்றையொத்த கண்களையுடையவள். அல்லது, கஞ்சம் = பிரஹ்மாண்டம், "**अयं पूर्वमप: सृष्ट्वा तासु वीर्यमपासृजत् तदण्डमभवद्धैमम्**" என்னும் ஶ்ருதிப்ரமாணப்படி அநேக பிரஹ்மாண்டங்களைத் தனது பார்வையால் சிருஷ்டிக்கும் ஆற்றலுள்ளவளென்று பொருள்.

கஞ்ஜலோசநாயை நம: (16)

17. **कम्रविग्रहा**—காம்பீர்யம், தைர்யம், மாதுர்யம் முதலிய அநேக குணங்களால் அதிமனோஹரமான சரீரத்

தோடுகூடியவள்; அல்லது, "आनन्दरूपममृतं यद्विभाति" என்னும் ஶ்ருதிப்படி ஆநந்தமே சரீரமாகவுடையவள்; லலிதாரூபிணி என்று பொருள். கம்ரவிக்ரஹாயை நம: (17)

18. **कर्मादिसाक्षिणी**—கர்மம், உபாஸனை, யோகம், ஶ்ரவணம், மனனம், நிதித்யாஸனம் முதலியவற்றிற்கு ஸாக்ஷி வடிவமாயிருப்பவள். ஸாக்ஷியென்றால் ஸம்பந்தப்படாமல் பார்த்துக்கொண்டிருப்பது "**साक्षी चेता**" என்பது ஶ்ருதி. கர்மாதிஸாக்ஷிண்யை நம: (18)

19. **कारयित्री — कारयितृत्वं** = செய்விக்குந் தன்மையென்றால் "இதைச்செய்" என்று கர்மாக்களை விதிக்குந் தன்மை. இந்த தர்மம் ஶப்தாத்மகவேதத்தில் விளங்குவது. ஶப்தம் ஜடமாதலால், "இதைச்செய், இதைச்செய்யாதே" என்று விதிநிஷேதரூபமான ஆக்ஞையைச்செய்தல் கூடாது; சப்தத்திற்கு அதிஷ்டான சைதன்யத்திற்குத்தான் கூடும். "**सर्वे वेदा यत्रैकं भवन्ति**" என்னும் ஶ்ருதிப்படி வேதம் ஆத்மஸ்வரூப சித்சக்திக்கு அபின்னமானது. சித்சக்தி தனது ஸ்வப்ரகாசத்தால், வேதத்தின் ஏகதேசமான கர்மகாண்டத்தில் பிரமாணங்களாயுள்ள விதிநிஷேதவடிவ ப்ரேரணையைச் சம்பந்தப்படாமல் செய்கின்றாள் என்பது பொருள். காரயித்ர்யை நம: (19)

20. **कर्मफलप्रदा**—செய்யப்பட்ட கர்மங்களுக்கு இனிமேல் காலாந்தரத்தில் எப்பொழுதோ உண்டாகப் போகும் பலத்திற்குக் காரணம் அத்ருஷ்டம் அல்லது அபூர்வம் என்று அநீஶ்வரவாதிகளான பூர்வமீமாம்ஸகர்கள் கூறுகின்றனர். இதுசரியல்ல; அதிஸூக்ஷ்மமாயுள்ள இந்த

அத்ருஷ்டம் ஜடமாயிருப்பதால், சேதனதர்மமான, பலந் தரும் சாமர்த்யம் அதற்கு இல்லை. கர்மாக்களுக்குப் பலன் அவச்யம் வந்தே தீரும். கர்மாக்களுக்குப் பலன் கொடுக்குந் தன்மையையுடையவரும் கர்த்தாவை விட வேறான ஸர்வஞ்ஞருமான ஒருவர் இருக்கிறார் என்று ஒப்புதல் அவச்யம். "**कर्माध्यक्षः**" என்னும் ஶ்ருதிப்பிரமாணப்படியும் "**मयैव विहि-तान् हीतान्**" என்னும் ஸ்மிருதிப்படியும் பரதேவதையே கர்ம பலங்களைத்தருபவள் என்றேற்படுகின்றது.

கர்மபலப்ரதாயை நம : (20)

21. **एकाररूपा**—பஞ்சதசீ வித்யையின் இரண்டாவது அக்ஷரத்தினால் குறிப்பிடப்பட்டவள்.

ஏகாரரூபாயை நம : (21)

22. **एकाक्षरी**—ஏகம் = முக்யம் - ஒப்பற்ற ஒன்று என்பதாம். அக்ஷரம் = நாசமின்றியது. இது பரமேஶ்வரனுக்கு உபாதியாயுள்ளதும் கூடஸ்த பதத்திற்கு வாச்சியமானதுமான மாயை. இது ஆத்மஞானத்தினால் முக்தி ஏற்படும் வரையில் நாசம் அடையாது. இந்தமாயையில் பிரதிபிம்பித்து ஸர்வக்ஞத்வம் முதலிய குணங்களோடு கூடியவள் பரதேவதை ; அல்லது, ஏகாக்ஷரம் = ப்ரணவம். இதன் வாச்யம் அபரப்ரஹ்மம், லக்ஷ்யம் பரப்ரஹ்மம்; இதன் உபாஸ்தியினால் அபரப்ரஹ்மமும், பரப்ரஹ்மமும் அடையப்படுகின்றன. இத்தகைய ப்ரணவஸ்வரூபமாய் விளங்குபவள் ; அல்லது,

அகண்டமாயும் (ஏகனாயும்), அக்ஷரனாயும் (நாசமின்றியவனாயும்) விளங்கும் பரமேஶ்வரனைப் பாதி சரீரமாகவுடைய பரதேவதை ; அல்லது, ஏகாக்ஷரம்=மாயா

பீஜமாகும் ஹ்ரீங்காரம், இந்த ஹ்ரீங்கார உபாஸனைக்கு உபாஸ்யமாய் விளங்குபவள் ; அல்லது,

" अथ परा यया तदक्षरमधिगम्यते " என்னும் ஶ்ருதிப்படி அக்ஷரபதத்தின் லக்ஷ்யார்த்தம் சைதன்யம். இந்த சைதன்யம் ஏகவடிவ அகண்டாகார வ்ருத்தியில் விமர்சிக்கப் படுகின்றது. ஆதலின் ஏகாக்ஷரீ. " च " காரம் நிர்க்குணப் பிரஹ்மத்தில் ஸகுணப்ரஹ்மமும் விசேஷமாக ப்ரகாசிக்கின்றது என்பதைத் தெரிவிப்பதாகும். இதே அர்த்தத்தை இனிவரும் च காரங்களுக்கும் பாவித்தல் அவஶ்யம்.

" सच्चिन्मयः शिवः साक्षात्तस्यानन्दमयी शिवा " என்றும் "स्त्रीरूपां चिन्तयेद्देवीं पुंरूपामथवेश्वरीम् । अथवा निष्कलं ध्यायेत्सच्चिदानन्दविग्रहाम् ॥ என்றும் " त्वं स्त्री त्वं पुमान् " என்றும் ஶ்ருதி ஸ்மிருதிகளில் கூறப்பட்டுள்ளபடி, பரதேவதையானவள் உபாதிபேதத்தினுல் சிவனென்றும், சிவையென்றும், சிவமென்றும் ஆண்பால் முதலிய லிங்கபேதத்தையடைகின்றனள். ப்ரஹ்மாபின்ன சித்சக்தியை ஆண்பாலாகவும், பெண்பாலாகவும், நபும்ஸகலிங்கமாகவும் கூறும் ஶ்ருதி வாக்கியங்கள் பல்லாயிரம் உண்டு. ஆதலின் அவன், அவள், அது, என்பவற்றிற்கும் பேதம் இல்லை. இங்ஙனமே தத்-த்வம் என்பவற்றிற்கும் பேதம் இல்லை. இந்த அபேதந்தான் தத்-த்வம் பதங்களின் லக்ஷ்யார்த்தம் ஆகும். இத்தகைய லக்ஷ்யார்த்த வடிவ அகண்டார்த்தத்தைப் பகவான் ஸ்ரீ ஹயக்ரீவர் च காரத்தினுல் குறிப்பிட்டிருக்கின்றனர் என்று அறிதல் அவச்யம்.

ஏகாக்ஷர்யையநம : (22)

23. **एकानेकाक्षराकृतिः**—ஏகஅக்ஷரவடிவமாயும் அநேக அக்ஷர வடிவமாயும் விளங்குபவள். சுத்தஸத்வப்பிரதான ஈஶ்வர உபாதியாகும் மாயை அல்லது அக்ஞானம் ஏகஅக்ஷரரூபமாகும். மலினஸத்வப்பிரதான அக்ஞானம் அல்லது அவித்தை ஜீவ உபாதியாகும். ஜீவர்கள் பலராதலால் அவர்களின் உபாதிகளும் பல. ஆதலின் அநேகம் என்னும் பதம் உபயோகிக்கப்பட்டது. "**माया चाविद्या च स्वयमेव भवति**" என்னும் ஶ்ருதிப்படி பரதேவதையே ஈஶ்வர உபாதியாகும் மாயையாகவும் ஜீவ உபாதியாகும் அவித்யையாகவும் ஆனாள் என்றேற்படுகின்றது. "**मायां तु प्रकृतिम्**" என்று ஶ்ருதி கூறுவதால் ஏகரூபமாகவும் அநேக ரூபமாகவும் உள்ள, ப்ரதிபிம்ப பக்ஷமாகவோ அல்லது அவச்சேத ரீதியாகவோ ஈஶ்வரஉபாதியாகவும் ஜீவ உபாதியாகவும் விளங்குபவளாயும் அக்ஷரவடிவ சைதன்யஸ்வரூபமாயுமுள்ளவள்; அல்லது, ஏகரூபமான அக்ஷர வடிவப்ரணவமாகவும், அநேகாக்ஷரரூப அகாராதி க்ஷகாராந்த மாத்ருகாஸ்வரூபமாகவும் விளங்குபவள். "**अकारादिक्षकारान्ता मातृकेत्यभिधीयते**" என்னும் ஸ்ம்ருதி இதற்குப்பிரமாணமாம். அல்லது, "**ए**" காரமும் "**क**" காரமும் மற்றும் இதர அநேக அக்ஷரங்களும் கூடிய ஸ்ரீ பஞ்சதசாக்ஷரீவடிவ மூலவித்யாஸ்வரூபமாகவிளங்குபவள். அல்லது, **अनेकाक्षरेषु** = அநேகமாயுள்ள அக்ஞானங்களில் ஸாக்ஷியாய் ஏகரூபமாய் விளங்குபவள்; அதாவது தத்துவம் பதார்த்த சோதனையில் ஸாமரஸ்ய அகண்டஸ்வரூபமாய் விளங்குபவள்.

ஏகாநேகாக்ஷராக்ருதயே நம: (23)

24. **एतत्तदित्यनिर्देश्या** — இன்னகாலத்தில் இத்தகைய பரிச்சேதத்தோடு கூடிய வஸ்துவிற்கு **एतत्** என்று பெயர்.

**तत्** என்பது பரோக்ஷமாய் உள்ள பொருளாகும். இது என்றுவது அது என்றுவது நிச்சயிக்கமுடியாத ஸ்வரூபத்தை யுடையவள். "**अशब्दमस्पर्शमरूपमव्ययम्**" "**निर्गुणं निष्कलम्**" என்னும் ஶ்ருதிகளின்படி எந்த ஒரு சித்சக்தியானது ஶப்தத்தின் ப்ரவ்ருத்திக்கு நிமித்தமான குணம், ஜாதி, க்ரியை முதலியவைகளோடு சம்பந்தமற்றதோ, அது, எந்த மனத்தினுல் நிச்சயிக்கக்கூடும்? எந்தவார்த்தைகளால் இத்தகைய ஸ்வரூபத்தையுடையவள் என்று கூறக்கூடும்? "**यद्वाचानभ्युदितम्**" என்னும் ஶ்ருதிப்படி வாக்குக்கும் மனத்திற்குப் அதீதமானவள்; ஆதலின் இத்தகையதென்றுவது அத்தகையதென்றுவது நிர்த்தேசம் செய்ய முடியாதவள். அல்லது பிரத்யக்ஷம், அநுமானம் முதலிய ப்ரமாணங்களால் சித்திக்கக்கூடிய காரியவடிவ ப்ரபஞ்சம் **एतत्** என்று கூறப்படும். **तत्** என்பது பரோக்ஷத்வம் முதலியவற்ருேடு கூடிகார்யரூப ப்ரபஞ்சத்திற்கு முன்னுள்ள காரண வடிவமானது. **इति** என்பது கார்ய காரணங்களின் ஸம்பந்தத்தைக் குறிப்பிப்பதாகும். சுத்தசைதன்யஸ்வரூபிணியான பரதேவதை கார்யமென்றுவது காரணமென்றுவது நிர்த்தேசிக்கக் கூடாதவள்: காரியத்தன்மையையம், காரணத்தன்மையையும் ஏற்கும் உபாதியற்ற சித்சக்தியில் வாச்யார்த்தம் பொருந்தாமையின் அநிர்த்தேஶ்யையாகும். அல்லது, யாவராலும் "நான்" என்று அபரோக்ஷமாய் அனுபவிக்கப்படும் துவம் பதவாச்சிய ஜீவசைதன்யம் **एतत्** என்பதாகும். பரோக்ஷமாயும் ஶாஸ்திரங்களில் ப்ரஸித்தமாயும் உள்ள ஈஶ்வர சைதன்யமாகும் தத்பத வாச்யார்த்தம் **तत्** என்பதாகும். **इति** என்பது ஏவ என்னும் அபேதார்த்த முடையது; ஆதலின்ஜீவனே ஈஶ்வரனுகும் என்றேற்படுகின்றது. ஆயினும் இங்ஙனம்

நிர்ணயம் செய்தற்குக்கூடாதவள்; ஏனெனில், ஸாங்க்யவாதி, ப்ரக்ருதியே ஜகத்காரணமென்றும், ஜீவர்கள் பலரென்றும் சேதனரென்றும் போக்தாக்களென்றும் கூறி, ஈஶ்வரனே இல்லை யென்று ஸித்தாந்தம் செய்கின்றனன். பாகவத மதத்திலோவெனின், “गुणी सर्ववित्” என்னும் ஶ்ருதிப்படி “நித்யகல்யாண குணங்களோடு கூடிய ஸர்வக்ஞ பரமேஶ்வரனான விஷ்ணுவினிடத்திலிருந்து ஜீவன் உற்பத்தியாய், அவ்விஷ்ணு வினிடத்திலேயே லயத்தையும் அடைகின்றான்; ஆதலின்ஜீவன் அநித்யன்—பகவானாகிய விஷ்ணுவே பாரமார்த்திகன்” என்று ஒப்பப்பட்டிருக்கின்றது. ஸாங்கியன் ஈஶ்வரனே இல்லையென்றும், பாகவதன் ஜீவனே இல்லையென்றும் கூறுகிறார்கள். இவர்களிருவர் மதமும் உபநிஷன் மதத்தினால் கண்டிக்கப்படுகின்றது. உபநிஷன்மதத்தில் ஜீவேஶ்வரர்களுக்கு வாச்யார்த்தத்தில் அபேதம் அங்கீகரிக்கப்படுதல் இல்லை. ஜீவேஶ்வரர்கள் இருவரும் பாரமார்த்திகஸ்வரூபமுடையவரல்லர்; ஜீவேஶ்வரர்கள், பாரமார்த்திகமாய் ஸச்சிதாநந்தஸ்வரூபமுடையவரேயன்றிக் கிஞ்சிக்ஞனுமல்ல; ஸர்வக்ஞனுமல்ல, கர்த்தாவுமல்ல, பலதாதாவுமல்ல; போக்தாவுமல்ல, நியந்தாவுமல்ல; அல்லது, தடஸ்த ஈஶ்வரனையொப்பும் நியாய வைசேஷிகஶாஸ்திரப்படியும் “ஜீவன் ஈஶ்வரனைவிட பின்னன்; ஈஶ்வரன் ஜீவனைவிட வேறு” என்று இங்ஙனம் பேத வ்யவஸ்தையை வைத்துக்கொண்டு இத்தகையதென்று நிர்ணயம் செய்ய முடியாதவள்.

ஏதத்ததித்யநிர்தேஶ்யாயை நம: (24)

25. **एकानन्दचिदाकृतिः**—**एका** = யாவராலும் முக்கியமாய் விரும்பப்படும் மோக்ஷஸ்வரூபிணி; **आनन्दः** = நித்ய ஸுகம்; **चित्** = சைதன்யம்-ப்ரகாசக்ஞானம்; ப்ரஹ்மஸ்வரூப லக்ஷணமான ஸச்சிதாநந்த ரூபிணி யென்று பொருள். "**विज्ञानमानन्दं ब्रह्म**" "**आनन्दो ब्रह्मेति व्यजानात्**" என்னும் உபநிஷத் வாக்யங்கள் இதற்குப்பிரமாணங்களாம். "**आनन्दादय: प्रधानस्य**" என்னும் ஸூத்ரப்படியும், ஸ்வரூபப்பிரகாச விமர்சங்களின் ஸாமரஸ்ய ஆநந்தாநுபவ ஜீவன் முக்தி ஸ்திதியில், அகண்டாகாரவ்ருத்தியில் அபரோக்ஷமாய் ஸ்புரிக்குந்தன்மை யுடையவள். அல்லது, சில யோகிகளுக்கு அனுபவமாயுள்ள ஆநந்த ஸாக்ஷாத்கார வடிவினள் ; என்றால் ஆவரணமி(மறைப்பி)ன்றிப்பிரகாசஸ்வரூபமாய் விளங்குபவள் ; அல்லது, ஆநந்தம் = சிவை, சித்சக்தி ; சித் = பரமேஶ்வரன். ஏகம் = மூர்த்தி பேதமின்றி ஒன்றாய் விளங்கும், ஆக்ருதி = வடிவத்தையுடையவள். அதாவது சிவ சக்தி ஸாமரஸ்யரூப அத்வைதஸ்வரூபிணி என்று பொருள்.

ஏகாநந்தசிதாக்ருத்யை நம: (25)

26. **एवमित्यागमाबोध्या**—இங்ஙனமென்று ஆகமங்களினால் போதிக்கப்படாதவள்.

சங்கை :—மேற்கூறிய நாமத்தில் ஆநந்தவடிவினள் பரதேவதையென்றேறப்பட்டது. அந்த ஆநந்தஶப்தம் ஆநந்தமயனான ஜீவனைக்குறிப்பிப்பதாகும். "**य एको जालवानीशत ईशनीभिः**" என்னும் ஶ்ருதிப்பிரமாணத்தின்படியும் இங்ஙனமே சித்திக்கின்றது. ஏகமாயுள்ள ஆநந்தமய ஜீவனிடத்தில் சைதன்யரூப அதிஷ்டானவடிவமாய் விளங்குபவள்

என்றும் மேற்கூறிய நாமாவுக்கு அர்த்தம் செய்யலாம். "ब्रह्म पुच्छं प्रतिष्ठा" என்று ஜீவனது ஆநந்தத்தைப் பிரகாசிக்கச்செய்யும் சைதன்யமானது "புச்சம்" என்னும் ரூபத்தினுல் கூறப்பட்டதாகும். "सत्यं ज्ञानमनन्तं ब्रह्म" என்னும் லக்ஷண வாக்கியமானது விதிமுகமாய் இருப்பதால் வாச்யார்த்தப்பிரதானமாய் இருக்கின்றது. அதத்வ்யாவ்ருத்திவடிவ நிஷேதமுக வாக்கியங்கள் லக்ஷ்ணுவ்ருத்திப் பிரதானமானவை. ஸத் சித் ஆநந்தங்கள் விதிமுகலக்ஷணங்கள். அத்வயம், அப்ரமேயம், அகர்த்தா, அநந்தம் முதலியவை நிஷேத முகலக்ஷணங்களாம். விதிமுகமும் நிஷேதமுகமுமான இவ்விரண்டு லக்ஷணங்களுக்கும் ப்ரஹ்மஸ்வரூபத்தோடு யோகம் ஸம்பவியாது. அஸத்வடிவ ப்ரபஞ்சத்தினின்றும் வேறு பிரித்து அறிவிப்பது ஸத் என்னும் லக்ஷணம். வேறுபடுத்துவது, வேறுபடுத்தப்படுவது என்பவை முறையே ஸத்தும் அஸத்ரூப ப்ரபஞ்சமுமாம். இவை இரண்டும் ஸமஸத்தையாய்த்தான் இருத்தல் வேண்டும்; என்ருல், ஸத்தும் அஸத்தும் ஒரேஸத்தையுள்ளவை என்று வொப்பல் வேண்டும். ஆதலின் ஸத் என்னும் லக்ஷணம் பிரபஞ்சஸத்தைக்கு வேருன ப்ரஹ்மத்தில் எங்ஙனம் சேரும்? சேராது; ஆகவே விதிரூபமும் நிஷேதரூபமுமான லக்ஷணங்களை ப்ரஹ்மத்திற்கு விசேஷணங்களென்று ஒப்புதல் அவச்யம். தத்துவமஸி முதலிய வாக்யங்களுக்கும் விசிஷ்ட வாக்யார்த்தமே ஸம்பவிக்கின்றது. என்று கூறின், அங்ஙனமன்று.

சமாதானம்:—தத் துவம் பதங்களுக்கு விசிஷ்ட வாக்யார்த்தம் ஸம்பவியாது. விசேஷண விசேஷ்யங்கள் பிரத்

யக்ஷப்பிரமாண ஸித்தமானவை-" இத்தகைய விசேஷணத் தோடு கூடினவள் பரதேவதை" யென்று வெளிப்படையாய் வேதாகமங்களால் அறியப்படாதவள் என்பது இந்த நாமத் தின் அர்த்தமாகும்.

"தத்துவமஸி" என்னும் மஹாவாக்யத்திற்கு விசிஷ் டார்த்தம், அகண்டார்த்தம் என இருவகையான அர்த்தங் கள் கூறலாம். நீலகடம்-இதில் நீலம் விசேஷணம்-கடம் விசேஷ்யம். கடாகாசம்-இதில் கடம் உபாதி, ஆகாசம்-உப ஹிதம். விசேஷணம், விசேஷ்யஸ்வரூபத்தில் பிரவேசித்து இதர விசிஷ்டங்களிலிருந்தும் வேறுபடுத்துகின்றது. நீல கடம் என்பதில் நீலமென்னும் விசேஷணம் கடம் என்னும் விசேஷ்யஸ்வரூபத்தில் பிரவேசித்து அருணகடம், ஶ்வேத கடம் முதலியவற்றினின்றும் வேறுபடுத்துகின்றது. கடா காசம்-இதில் கடம் என்னும் உபாதியானது உபஹிதமாகும் ஆகாசத்தின் ஸ்வரூபத்தோடு ஸம்பந்தப் படாமலே (வேறா) யிருந்துகொண்டு மடாகாசம், மஹாகாசம் முதலிய வற்றி னின்றும் வேறுபடுத்துகின்றது. ஆதலின் லக்ஷணங்கள் விசேஷண விசேஷ்ய ஸம்பந்தமாகவோ, அல்லது உபாதி உபஹிதஸம்பந்தமாகவோ இருக்கும். இவற்றில் விசேஷண விசேஷ்ய ஸம்பந்தம் ஸமஸத்தாகமாம். உபாதி-உபஹித ஸம்பந்தம் விஷமஸத்தாகமாகவும் இருக்கலாம். ஸித்தாந் தத்திலோ பாரமார்த்திகமாகும் ஒருஸத்தையைத் தவிற வேறுஸத்தையில்லை. வேறுஸத்தையுண்டெனின் அது கற் பிதமாய் இருக்கின்றது. லக்ஷ்யம் பாரமார்த்திகம்; லக்ஷண மும் பாரமார்த்திகமெனின் லக்ஷணம் பாரமார்த்திக ஸத்தைக்கு வேறாயுள்ள மனத்திற்குப் போத்யமாகாது. ஆத லின் லக்ஷணம் லக்ஷ்யத்தைவிட வேறான ஸத்தையிலும்

இருக்கலாம்; ஆதலின் விதிமுக அல்லது நிஷேதமுகவடிவ ப்ரஹ்மலக்ஷணங்கள்யாவும் ப்ரஹ்மஸ்வரூபத்தில் மித்யை யாகத்தோன்றும் அன்னியஸத்தா வ்யாவர்த்தகங்களே யாகும். வ்யாவர்த்தகத்தினுல் கற்பிதவஸ்துவின் நாசம் ஏற்படுகின்றது. கற்பிதத்தின் நாசமும் அதிஷ்டானத்தின் ஞானமும் ஒன்று என்பது ஸித்தாந்தம். **अधिष्टानावशेषोहि नाशः कल्पित वस्तुनः** என்பது ப்ரமாணமாம். ஆநந்தம் என்னும் லக்ஷணமானது, பாரமார்த்திகஸத்தையில் கற்பிக்கப்பட்ட துக்கரூப ப்ரபஞ்சத்தை நிஷேதித்து அதன் அதிஷ்டான ஸ்வரூபத்தையுணர்த்தாமல் உணர்த்தி அதில் லயமாகின்றது. இங்ஙனமே, எல்லாலக்ஷணங்களேயும் விமர்சம் செய்து அறிக. ஶ்ருதிமாதாவானவள் "நேதி நேதி" என்று கல்பிதத்தை வேறுபடுத்தி ஸ்வரூபத்தை "**एवम्**" என்று சுட்டிப் காட்டாது மௌனத்தை யடைகின்றனள். எங்ஙனம் ஒரு ஸ்திரீயானவள், தன் பதி கூடியுள்ள பத்துபேருள்ள ஸபையில் ஒன்பதுபேரைத் தன்பதியல்லவென்று கூறித் தன் பர்த்தாவைப் பர்த்தாவென்ருவது பர்த்தாவல்லவென்ருவது கூருமல் மௌனத்தை யடைந்தாலும், பர்த்தா அறிவிக்கப் பட்டவனுகின்றுனே, அங்ஙனமே, ஶ்ருதியும் ப்ரஹ்மத்தை அறிவிக்கின்றது. இதுபாரிசேஷிக ந்யாயமாம். தத்துவம் பதார்த்தங்களில் வாச்சிய பாகம் ஸ்வரூபமன்று. பரஸ்பர விரோதிகளாயுள்ள (கல்பித) வாச்யங்களே நிஷேதிக்கின் அதிஷ்டான, பாரமார்த்திக அகண்ட ஐக்யம் ஸித்திக்கின்றது. ஆதலின் ப்ரஹ்மாபின்ன பரதேவதையானவள் ஆகமங்களால், இத்தகையதென்று வாச்சியார்த்தத்தினுல் அறிவிக்கப்படாதவள் என்று கூறப்பட்டது.

ஏவமித்யாகமாபோத்யாயை நம: (26)

27. **एकभक्तिमदर्चिता**—அத்வைதஸ்வரூப ஜீவப்பிரஹ்மைக்யத்தில் ஸதா இச்சைகொண்டுள்ளவர்களால் பூஜிக்கப்படுபவள். பூஜையின் உபலக்ஷணமாக ஸ்தோத்திரம், தியானம், நமஸ்காரம் முதலியவைகளையும் கொள்ளல் வேண்டும். "**यन्मनसा ध्यायति तद्वाचा वदति तत्कर्मणा करोति**" என்பது ஶ்ருதி. ஞானேந்திரிய கர்மேந்திரியங்களால் செய்யப்படும் ஸகல விவகாரங்களும் மனத்தால் நினைக்கப்பட்டவையேயாகும் என்பது கருத்து.

அல்லது, இந்த ஸம்ஸார மண்டலத்தில் பரமேஶ்வர ஞானத்தோடுள்ளவர்கள் சிலர். அவர்களால் ஸகுணப்ரஹ்ம விஷயமாய்ப் பக்திசெய்யப்படுகின்றது. அந்தபக்தி எட்டு வகை. அவற்றில் ஒருவிதம் அர்ச்சனம். இத்தகைய பக்திமான்களால் அந்தர்யாகம், பஹிர்யாகம், மஹாயாகம் முதலிய பலப்பிரகாரங்களால் பூஜிக்கப்படுபவள்.

ஏகபக்திமதர்ச்சிதாயை நம: (27)

28. **एकाग्रचित्तनिर्ध्याता**—ஒருமுகப்பட்ட மனத்தினுலுங் கூடத்தியானம் செய்தற்குக்கூடாதவள். ஏகாக்ரம் என்பது ஜீவப்பிரஹ்மைக்யமாகும் ஒன்றையே ஆலம்பனமா (பற்றுக்கோடா)கவுடைய நிலையாகும். இதில் விஜாதீயமாகும் அநாத்ம வ்ருத்திகளை நிஷேதித்து ஸஜாதீயமாகும் ஆத்ம வ்ருத்திகளைப் பெருக்கும் வ்ருத்தியுண்டு ; இதனோடு கூடிய சித்தமானது ஏகாக்ரசித்தம் எனப்படும். இதையுடையவர்கள் ஏகாக்ரசித்தத்தோடு கூடியவர்கள் ; நிதித்தியாஸன சீலர்கள். இத்தகைய அதிகாரிகளால் இயமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தாரணை,

த்யானம், ஸமாதி என்னும் ஸாதனங்களின் பரிபாகத்தி ஞல், அஸம்ப்ரக்ஞாதம் என்னும் ஸமாதி அடையப்படுகின் றது. இது மூவகைப்படும். அவை, ருதம்பரை, ப்ரக்ஞா லோகம், ப்ரசாந்தவாஹிதா என்பவையாம். ருதம்பரா வென்பது ஸச்சிதாநந்த ப்ரஹ்மத்தை யுள்ளபடி யதார்த்த மாய் அறியும் வ்ருத்தி விசேஷமாகும். "आत्मन्येव वशं नयेत्" என்பது பகவத்கீதை. "प्रज्ञा प्रतिष्ठा" என்னும் ஶ்ருதிப் படி அகண்டாகார வ்ருத்தியின் நெடுநாள் இடைவிடாத பழக்கத்தால், ஆவரணமானது நசித்து, பிரக்ஞையென்னும் பெயருடைய ப்ரஹ்மமானது அபரோக்ஷமாகும். இத் தகைய ப்ரஹ்மாபரோக்ஷவ்ருத்தியே பிரக்ஞாலோக மென ப்படும். இதுகாரண விக்ஞானமெனப்படும். "எந்த ஒரு ஞானத்தினுல் எல்லாம் அறியப்பட்டதாகுமோ அது." ப்ராரப்த வசமாய்ச் சித்தத்தில் அத்யஸ்தமாய்த்தோன்றும் ஸர்வப்பிரபஞ்சமும் சைதன்யப்பிரகாசத்தால் ப்ரகாசிக் கின்றது. அவிச்சின்னமாய் அதாவது தொடர்ச்சியாய்ப் பெருகும் அகண்டாகார வ்ருத்திக்கு வாஹி என்று பெயர். இத்தகைய வ்ருத்தியோடு கூடிய நிலைக்கு வாஹிதா என்று பெயர். ப்ரசாந்தமென்பது நிரோதம்செய்யும் ஸாமர்த்ய முடைத்தாய் நாமரூப (உலக)வாஸனைகளு மற்ற சுத்த அந்தக் கரண, ப்ரஹ்மகோசர அகண்டாகார வ்ருத்தியின் அடக்க நிலையாகும். இது நிர்விகல்பஸமாதியின் பிராரம்பஸ்திதி யெனப்படும்.

"मनसो वृत्तिशून्यस्य ब्रह्माकारतया स्थितिः । असंप्रज्ञातनामेति समाधिर्योगिनां प्रियः" "प्रशान्तमनसं ह्येनम्" என்பனவாதி பிரமாணங்கள் ப்ரசாந்தவாஹிநீ ஸ்திதியை நன்கு கூறுகின் றன. இத்தகைய நிதித்யாஸனபரர்களுக்கு அபரோக்ஷமாய்

விளங்குபவள். த்யானம், த்யானம்செய்கிறவன் த்யானம் செய்யப்படுவது என்னும் த்ரிபுடிபேதமற்ற ஸ்வரூபமாத லின் த்யானம் செய்தற்குக்கூடாதவள் என்று அறிதல் அவஶ்யம். **निध्याता** என்னும் பாடமிருப்பின் ஶ்ரவண-மனன-நிதித்யாஸங்களினுல் ஸாக்ஷாத்கரிக்கப் படுபவ ளெனப்படும். "**ब्रह्मवेद ब्रह्मैव भवति**" என்னும் ஶ்ருதிப் படி த்யாதா த்யேயமாகவே யாகின்ருன்.

ஏகாக்ரசித்தநிர்த்யாதாயை நம: (28)

29. **एषणारहितादृता**--ஏஷணுத்ரயத்தை நிவர்த்திசெய்த மஹான்களால் ஆதரிக்கப்பட்டவள். ஏஷணை என்ருல் இச்சை யாகும். இந்த ஏஷணை புத்ரேஷணை, வித்தேஷணை, லோகேஷணை யெனமூன்று வகைப்படும். புத்ரேஷணையா வது இந்த லோகத்தை ஜயிப்பதற்கு ஏற்பட்டதாகும். வித் தேஷணையோவெனின், பித்ரு லோக ஜயத்திற்குச் சாதக மான கர்ம ஸம்பத்திக்காக ஏற்பட்டதாகும்; கைலாஸம், வைகுண்டம் முதலிய, தேவலோகங்களின் அடைவிற்குச் சாதனமான மந்த்ரஜபம் முதலிய உபாஸனுவடிவ இச்சை க்கு லோகேஷணையென்று பெயர். லோகாந்தரங்களை யடை விக்கும் உபாஸ்தி ப்ரதீக உபாஸ்தியாகும். "**ते ह स्म पुत्रैषणायाश्च वित्तैषणायाश्च लोकैषणायाश्च व्युत्थायाथ भिक्षाचर्यं चरन्ति**" என் னும் ஶ்ருதிப்படி ஏஷணுத்ரயங்களையும் ஒழித்த பரம ஹம்ஸ ஸந்யாஸிகளால் ஸ்வஸ்வரூபமாக நிரந்தரநிதித்யா ஸனத்தினுல் ஸாக்ஷாத்காரம் செய்யப்படுபவள். அதாவது ஸர்வாநர்த்தநிவ்ருத்தி பரமாநந்த ப்ராப்தி வடிவ மோக்ஷஸ்வ ரூபமாய் விளங்குபவள்.

ஏஷணுரஹிதாத்ருதாயை நம: (29)

30. **एलासुगन्धिचिकुरा**—அப்ராக்ருதமான திவ்விய வாஸனை யோடு கூடிய கூந்தலையுடையவள். செயற்கையாலல்லாது இயற்கையாகவே உள்ள வாசனையையுடையது பரதேவதையின் கூந்தல். கூந்தலோடு உபலக்ஷணமாய், எல்லா அங்கங்களையும் கொள்ளுதல் வேண்டும்.

ஏலாஸுகந்திசிகுராயை நம: (30)

31. **एनः कूटविनाशिनी**—பாபக் கூட்டங்களை நசிப்பிக்கின்றவள். பாபஸமுதாயத்தின் வ்யஷ்டிபேதங்களாகும் ஆகாமி, ஸஞ்சிதம் ப்ராரப்தங்களை ஒருவன் ஸம்ஸாரஸாகரத்தில் மூழ்கிக்கிடந்து கொண்டு அநுபவித்து ஒழித்து விடுவோமென்றால் அது முடியவே முடியாது. ஆனால் ஆத்மப்ரஹ்ம அபேத ரூப தத்துவஞான வடிவமாயுள்ள பரதேவதையின் ஸாக்ஷாத்காரத்தால் எல்லாவித பாபங்களும் ஒருங்கேநாசமாகின்றன. "**अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि**" என்னும் ஸ்ம்ருதியாலும், "**अशरीरं वाव सन्तं प्रियाप्रिये न स्पृशतः ।**" என்னும் ஶ்ருதியாலும் மேற்கூறிய அர்த்தம் நிர்ணயிக்கப்படுகின்றது. அல்லது பாபங்களையும், அவற்றின் காரணமான வஞ்சனையையும் அதன் காரணமான மாயையையும் நிர்மூலப்படுத்துபவள்.

ஏன: கூடவிநாசின்யை நம: (31)

32. **एकभोगा**—ஸஜாதீய, விஜாதீய, ஸ்வகத பேதமற்ற காமேஶ்வரருடன் அபேதமாய் ஸ்வஸ்வரூபாநந்தத்தை அநுபவிக்கின்றவள்.

கார்ய காரணாத்மக அபின்ன மாயாதிஷ்டான வடிவமாய் இருக்குங்காரணத்தினால் சித்சக்திரூப பரதேவதையின்

ஸத்தையில்தான் கார்யகாரணரூப ஸர்வப் பிரபஞ்சமும் நிலைபெற்றிருக்கின்றது. ஆதலின் ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, நாசம் முதலியவற்றின் காரணமான மாயைக்கு அதிஷ்டானமாய் விளங்குவதே போகமாகும். "**एकाकी न रमते ततः पतिश्च पत्नीश्चाभवताम्**" என்னும் ஶ்ருதிப்படி பரதேவதையே பதியாகவும் பத்னியாகவும் விளங்கி வாஸ்தவத்தில் ஒரே சைதன்யமாயுள்ள ஹேதுவினால் பதி பத்னிகளுக்கு முறையே பத்னீ பதிகளிடம் தோன்றும் இரண்டு விதமான போகங்களையும் அகண்ட ஏகரஸமாய் அநுபவிக்கின்றவள். ஏகபோகாயை நம: (32)

33. **एकरसा**—அத்வைதஸ்வரூப அகண்டைக ரஸவடிவமாய் விளங்குபவள். "**रसꣳह्येवायं लब्ध्वानन्दी भवति**" என்பது ஶ்ருதி. அல்லது, நவரஸங்களில் முக்யமான ஶ்ருங்கார ரஸஸ்வரூபிணி; "**श्रृंगार रस संपूर्णा**" என்பது லலிதாஸஹஸ்ரநாமம்; அல்லது, தன் பர்த்தாவான காமேஶ்வரரிடத்தில் அதிகப்ரேமையோடு கூடினவள். அல்லது, அறுவகை ரஸங்களில் முக்கியமான மதுரரஸஸ்வரூபிணி. ஸத்வகுணப்பிரதானமான மாயையை உபாதியாக வுடைய சைதன்ய ரூபிணியாதலின். "**रस्याः स्निग्धा स्थिरा हृद्या आहाराः सात्त्विक प्रियाः**" என்பது கீதை. ஏகரஸாயை நம: (33)

34. **एकैश्वर्यप्रदायिनी**— "**यः सर्वेषु भूतेषु तिष्ठन्यः सर्वाणि भूतान्यन्तरो यमयति**" என்னும் ஶ்ருதிப்படி எவன் எல்லாப் பூதங்களுக்கும் அந்தர்யாமியாய் இருந்துகொண்டு அவற்றைப் ப்ரேரணை செய்கின்றானோ அவன் ஈஶ்வரன். இங்ஙனம் ஈஶ்வரனால் ப்ரேரணை செய்யப்பட்டவராயும் பூதசப்த

வாச்யராயும், அஞ்ஞானத்தின் கார்யமான அந்தக்கரணத்தில் ப்ரதிபிம்பித்த சைதன்ய (ஆபாஸ) வடிவினராயும், ஜாக்ரம், ஸ்வப்நம், ஸுஷுப்தி என்னும் அவஸ்தாத்ரய அபிமானிகளாயும் உள்ள ஜீவர்களுக்கு அகண்ட ப்ரஹ்ம ஸாக்ஷாத்கார நிலையில் "तत्वमसि" "एकमेवाद्वितीयम्" என்னும் பிரமாணங்களின்படி அபேத அநுபவம் உண்டாகின்றது. இத்தகைய சிவ ஜீவைக்யமே ஏகைஶ்வர்ய மெனப்படும்; இந்நிலையைத் தருபவள். அல்லது, வித்யை, தனம் முதலியவைகளோடு கூடிய பலபேர்களில் ஒருவனை வித்யாவான், தனவான் என்று கூறின் மற்றவர்களைவிட அவனது வித்யையும் தனமும் சிரேஷ்டமானவை என்று ஏற்படுகின்றது. இங்ஙனமே ஐஶ்வர்யங்களில் ஒப்பற்றதான அணிமாதிகளைத் தருவதோடு இந்த ஸித்திகளில் மிகச்சிறந்த நிஶ்ரேயஸ் வடிவ மோக்ஷத்தையும் தருபவள்.

அல்லது, ஒப்பும் உயர்வுமில்லாத ஸார்வபௌமத்வாதி லக்ஷணவடிவ ஐஶ்வர்யத்தைக் கொடுக்கக்கூடியவள்.

ஏகைஶ்வர்யப்ரதாயின்யை நம: (34).

35. **एकातपत्रसाम्राज्यप्रदा** — ஆத்யாத்மிக, ஆதிதைவிக, ஆதிபௌதிகமென்னும் முவ்விதமான தாபங்களுக்கு ஆதபமென்று பெயர். தபிக்கச்செய்யும் தாபங்களிலிருந்து ரக்ஷிப்பதற்கு ஆதபத்ரம் என்று பெயர். ஸர்வ ஸம்ஸார துக்கங்களையும் போக்கடிக்கும் ஆத்மக்ஞானமே ஆதபத்ரமாகும். "**यज्ज्ञात्वा न पुनर्मोह मेवं यास्यसि**" என்பது பகவத்கீதை. ஜீவப்ரஹ்மைக்ய அகண்ட ஞானமே ஏகாதபத்ரமாகும். ஸாம்ராஜ்யம் = நன்றாய்த் தனக்குத் தானே தன்

மஹிமையில் விளங்கும் நிலே. அகண்டாகார ஞானத்திலிருந்துண்டாகும் இத்தகைய நிலேயைத் தருபவள்.

அல்லது, ஆதபத்ரம்=குடை ; ஏகச்சத்ராதிபதியாகும் சக்ரவர்த்தி பதவியைத்தருபவள்.

ஏகாதபத்ரஸாம்ராஜ்யப்ரதாயை நம: (35)

36. **एकान्तपूजिता**—ஏக=அத்விதீயமானதும், தத் பதார்த்த சோதனையில் ஸித்தித்த லக்ஷ்யமானதுமான ப்ரஹ்மத்தின், அந்தம்=உபாதியில் அதாவது ஹ்ருதயத்தில், பூஜிதா=அஹங்கிரஹ உபாஸனையால் அபரோக்ஷ ஸாக்ஷாத்காரம் செய்யப்படுபவள். அத்விதீயப்ரஹ்மத்தைப் பேதப்படுத்துவது அத்யாஸவடிவ ஹ்ருதயக்கிரந்தியேயாகும். இக்கிரந்தியே ஸர்வ அநர்த்தங்களுக்கும் மூலகாரணமாகும் உபாதியாம். இது ஒழிந்தால்தான் சோகநிவர்த்தி உண்டாகும். ஆதலின் ஹ்ருதயக்கிரந்தியை நசிப்பிக்க "அஹம் ப்ரஹ்மாஸ்மி, ப்ரஹ்மைவாஹமஸ்மி" என்னும் பூஜையைச் செய்தல் அவஶ்யம் ; இத்தகைய ஏகாந்த பூஜையில் ஸாக்ஷாத்காரமாகுபவள் ; அல்லது, ஏகாந்தத்தை மருவிய ஒருமுகப்பட்ட மனத்தினல் யோகிகள் பூஜித்தற்குரியவள். அல்லது காமேஶ்வரரால் ஏகாந்தமென்று கூறப்படும் ஸ்திரீலிங்கத்தில், ஸம்ப்ரதாயபிரவிர்த்தியின் பொருட்டு பஹிர்யாக விதிப்படி, ஆதிமஸாதனத்தோடு ஸ்ருஷ்டிகாலத்தில் செய்யப்பட்ட பூஜையினல் ஸந்தோஷ மடைந்தவள். "**कश्चिद्धीरः प्रत्यगात्मानमैक्षदावृत्तचक्षुरमृतत्वमिच्छन्**" என்னும் உபநிஷத் பிரமாணத்தின்படி அந்தர்முகப்பட்ட சுத்தமனத்தினல் ஸர்வப்ரவிலாபனத்தின் முடிவில் நிதித்யாஸனத்தில் அபேதமாய் ஸ்வப்ரகாசமாய் விளங்குபவள்.

ஏகாந்த பூஜிதாயை நம: (36)

37. **एधमानप्रभा**—நாளுக்குநாள் விருத்தியடையும் ஸ்வ யம் பிரகாசத்தோடு கூடினவள். அனுத்மாவாகும் இன்னொரு ப்ரகாசப்பொருளை யபேக்ஷிக்காமல் ஸ்வயம் ப்ரகாசமாய் விளங்குபவள். "**तमेव भान्तमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति**" என்பது ஶ்ருதி.

ஏதமானப்ரபாயை நம: (37)

38. **एजदनेकजगदीश्वरी**—ப்ராணனோடு கூடி சேஷ்டிக்கும் ஸர்வ ஜகத்தையும் ப்ரேரணை செய்பவள். ப்ராணிகள் மாத்திரம் ஸர்வ ஜகத்ரூபம் ஆகமாட்டா; ஸ்தாவரங்களும் சேர்ந்தால்தான் ஜகத்தின் அர்த்தம் முற்றுப்பெற்றதாகும். ஆதலின் மரம், செடி, கல் முதலிய ஜடப்பொருள்களையும் "ப்ராணி" என்னும் வகையில் சேர்த்தல் வேண்டும். ஸ்தாவரங்களுக்கு ப்ராணன் உண்டா? அவை ஓரிடத்தை விட்டுப் பெயர்ந்து மற்றோரிடத்திற்குப் போகுமா? எனின், அவைகளுக்கு இடம் விட்டு இடம்மாறும் ஆற்றல் இல்லாமற் போனாலும், தாம் நிலைபெற்று வளர்வதற்கு வேண்டிய காற்று, ஜலம், ஆகாரம் முதலியவற்றைப் பருகும் உணர்ச்சியோடு கூடியிருக்கின்றன. ஆதலின் அவைகளும் ப்ராணிகளே; ஆதலின் ஸ்தாவர ஜங்கமாத்மக ஸர்வப்ராணிகளையும் தங்கள் தங்கள் செயல்களில் ப்ரேரணை செய்பவள்.

ஏஜதனேகஜகதீஶ்வர்யை நம: (38)

39. **एकवीरादिसंसेव्या**— ஏக:=பிறரிடத்தில் பொருந்தாத அஸாதாரண தர்மத்தோடு கூடிய, வீர:=புரஶ்சர்யை, பூஜை, த்யானம் முதலியவற்றால் மந்த்ரஸித்தி, தேவதாஸாக்ஷாத்காரம் முதலியவைகளைப் பெற்றவர்கள்; தைர்ய காம்பீர்யாதி குணங்களோடு விளங்குபவர்; சத்ருக்களைச்ஜயித்

தவர்கள்; இவர்ளுக்கு வீரரென்று பெயர். காமம், குரோதம் முதலிய சத்ருக்களை ஜெயித்து ஆத்மஸ்வாராஜ்யத்தைப் பெற்ற இவர்களால் ஸேவிக்கப்படுபவள். எப்பொழுது அம்பாள் தன்னைச் சரணமடைந்தவர்களைக் காப்பதற்காக ஸகுண ஆகாரத்தை யடைகின்றுளோ அப்பொழுது, அவள் அநேக கோடி பரிவார தேவதைகளால் சூழப்பட்டு மந்த்ர, தேவதாஸ்வரூபிணியாய் உபாஸிக்கப் படுகின்றனள் என்று அறியவும். அல்லது,

ரேணுகை, ஶ்யாமளை, லக்ஷ்மீ, ஸரஸ்வதி முதலியவர்களும் வீரர்களாவர். ப்ரஹ்மவிஷ்ணுவாதிகளும் வீரர்களே. இவர்கள் தங்கள் தங்கள் அதிகார பீடத்திலிருந்து கொண்டு தங்களை யுபாஸிக்கும் பக்தர்களுக்கு அவரவர்களின் அபீஷ்டங்களை யருளிக்கொண்டும், ஜகன்மாதாவாகிய பரதேவதையை உபாஸித்துக்கொண்டும் இருக்கின்றுர்கள். ஆதலின் ரேணுகை முதலியவர்களால் உபாஸிக்கப்படுபவள் பரதேவதையாகும். ஏகவீராதி ஸம்ஸேவ்யாயை நம: (39)

40. **एकप्राभवशालिनी**— ப்ராபவம்=சரணமடைந்தவர்களைக் காப்பாற்றுங்குணம். இதில், ஏகம்=ஒப்புயர்வற்ற அஸாதாரணமான சீலத்தையுடையவள். நிரபேக்ஷிகமான ரக்ஷகத்வம் கூடஸ்த சைதன்யத்திற்கேயுள்ளது. “**तजलानिति शांत उपासीत**” என்பது ஶ்ருதி. அல்லது ப்ராபவம் என்பது ஐஶ்வர்யம். ஏகமாயுள்ள அஸாதாரண ஐஶ்வர்யம் அகண்டசேதனத்திற்கே யுள்ளது. “**पादोऽस्य सर्वा भूतानि**” “**एकांशेन स्थितो जगत्**” என்பவை ப்ரமாணங்களாம். ப்ரபுத்வ பரம்பரையில் கடைசியில் நிரபேக்ஷிகமாய் விளங்குவது ஈஶ்வரத்வமாகும். “**एष सर्वेश्वर एष भूताधिपतिरेष भूतपालः**” என்னும் ஶ்ருதிப்படி ஈஶ்வரன் எல்லாவற்றிற்கும்

அந்தர்யாமியும், ஜகத்காரண னென்னும் தடஸ்தலக்ஷணே யின் லக்ஷ்யமான அகண்டஸச்சிதாநந்தஸ்வரூபனுமாவான். ஈஶ்வரனது தடஸ்த ஸ்வரூப லக்ஷணங்கள் பரதேவதையே. ஆதலின் பரதேவதையே ஸ்வஸ்வரூபமாக அநுஸந்தானம் செய்யத்தக்கவள் என்பது நிஷ்கர்ஷையான அர்த்தமாகும்.

ஏகப்ராபவஶாலிந்யை நம: (40)

41. **ईकाररूपा**—சித்சக்தியின் ஆதிவித்யையின் மூன்ரு வதான ஈகாரஸ்வரூபமாயிருப்பவள்.

ஈகாரரூபாயை நம: (41)

42. **ईशित्री**—எல்லாவற்றையும் ப்ரேரணைசெய்பவள் "**सर्वस्य बुद्धिरूपेण जनस्य हृदि संस्थिता प्रेरयन्ति महादेवी**" என்பது ஸ்ம்ருதி.

ஈசித்ர்யை நம: (42)

43. **ईप्सितार्थप्रदायिनी**—ஜீவர்கள் விரும்பும் இஹபர ஸுகங்களாகும் அப்யுதயங்களையும் மோக்ஷரூபமான நிஶ்ரேயஸ்ஸையும் தருபவள். நிரீஶ்வரவாதிகளான பூர்வமீமாம்ஸகர்கள் மதப்படி, தர்மாதர்மரூப கர்மங்கள் அத்ருஷ்டம் அல்லது அபூர்வத்தின் மூலமாய்க் காலாந்தரத்தில் ஸுக துக்கரூப பலங்களைத் தருகின்றன என்பதாகும். இது பொருந்தாது. ஏனெனின், அபூர்வம் ஜடம்; அசேதன பதார்த்தத்திற்கு ஒரு வகையான ஸாமர்த்யமுமில்லை யென்பது பிரஸித்தம். சேதனனுகும் ஜீவனே பலதாதாவாகலாமே எனின், தான் செய்த பாபகர்மத்திற்குரிய துக்க பலனைத் தனக்கு உண்டாக்கிக் கொள்ள வேண்டும். தனக்குப் பிரதிகூலமான துக்கத்தை தானே உண்டாக்கிக் கொள்ளுதல்

லோகத்தில் அப்பிரஸித்தம். ஆதலின் ஒரு ஜீவன், தனது கர்மாக்களுக்குத் தானே பலதாதா வாயிருத்தல் ஸம்பவியாது. ஆயின் ஒரு ஜீவன் செய்த கர்மாக்களுக்கு மற்றொரு ஜீவன்பலன் தரட்டுமேயெனின் ஜீவர்கள் கிஞ்சிக்ஞர்கள். ஒருவன் ரஹஸ்யமாய்ச்செய்த ஒரு காரியத்தை அறிந்துகொள்ளும் ஆற்றல் இல்லாதவர்கள். ஆதலின் அற்ப அறிவுடைய ஜீவன் கர்மபலதாதாவாயிருத்தல் அஸம்பவம். ஆதலின் ஜீவர்களுக்கு வேறாய், பேரறிவுடையவனாய் வைஷம்மியம் முதலிய துர்க்குணங்களற்றவனுயுள்ள சேதன புருஷன் ஒருவன் அவசியம் இருத்தல் வேண்டும். அவனே பரமேஶ்வரன். சிவசக்திகளுக்குப் பரஸ்பரம் பேதமின்மையின் பரதேவதையே பலதாதாவென்று கூறப்பட்டது. ஸ்வஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கும் மஹாவாக்ய சிரவணத்தினுலும், மனனநிதித்யாஸனங்களினுலும் பரமபுருஷார்த்த வடிவமோக்ஷத்தைத் தருபவள்.

ஈப்ஸிதார்த்த ப்ரதாயின்யை நம : (43)

44. **ईदगित्यविनिर्देश्या—ईदक्**=இன்ன லக்ஷண முடையவளாய் இவ்வளவு பரிமாணத்தோடு, இவ்வித ரூபமாய், இந்த இந்த தர்மங்களோடு கூடியவள் **इति**=என்று, **अविनिर्देश्या**-நிரூபணம் செய்யமுடியாதவள் "**यच्चक्षुषा न पश्यति**" "**यन्मनसा न मनुते**" என்பவை ஶ்ருதிப்பிரமாணங்கள்; சக்ஷுராதிஞானேந்திரியங்களுக்கும் மனத்திற்கும் வாக்குக்கும் கோசரமாகாததனுல், இத்தகையதென்று நிர்த்தேசம் செய்யக்கூடாதவள். உபநிஷத்தின் மதப்படி, உபநிஷத்துக்கள், இதர ப்ரத்யக்ஷம், அநுமானம் முதலிய ப்ரமாணங்களின் அபேக்ஷை யில்லாமலே அநாதி அக்ஞானத்தினுல் மறந்து

போயிருக்கும் ஸ்வஸ்வரூபத்தை ஞாபகப்படுத்துதலால் அவை ப்ரமாணங்களாகின்றன. ப்ரஹ்மாபின்ன ஸ்வஸ்வரூபபோதகமாயுள்ள ஶப்தப்ரமாணமாகும் மஹாவாக்கியங்களும் லக்ஷணையால்தான் ஸ்வரூபத்தைக் குறிப்பிடுகின்றன. இவை ஆத்மாவை நிர்தேசிக்கின்றன வென்ருவது நிர்த்தேசம் செய்யவில்லை யென்ருவது கூறமுடியாது.

ஈத்ருகித்யவிநிர்த்தேஶ்யாயை நம: (44)

45. **ईश्वरत्वविधायिनी**—ஈஶ்வர பாவத்தோடு ஐக்யம் செய்பவள். அதாவது, தான் அகண்டாகார சைதன்யஸ்வரூபமாய் இருப்பதனுல், ஆவரண விக்ஷேப சக்திகளோடு கூடிய அக்ஞானத்தை நிவர்த்திசெய்து, பேதபுத்தி மாத்திரத்தினுல் ஸம்பாதிக்கப்படும் இஹபரஐஶ்வர்யங்களிலுள்ள பிரமை (அத்யாஸத்தை) யைப்போக்கடிக்கின்றவள். "**स्वेन रूपेणाभिनिष्पद्यते**" என்பது ஶ்ருதி. அல்லது, ஈஶ்வரத்வம் என்ருல் வித்யை, தனம், உயர்ந்த நிலைமை, அதிகாரம் முதலியவைகளை அந்த அந்த பிராணிகளின் புண்ய பாப ப்ராரப்தங்களை யநுஸரித்துப் பலத்தை விதிப்பவள்; அதாவது அடையச்செய்பவள்.

ஈஶ்வரத்வவிதாயின்யை நம: (45)

46. **ईशानादिब्रह्ममयी**—ஈஶாந, தத்புருஷ, அகோர, வாமதேவ, ஸத்யோஜாதரென்னும், பஞ்சப்பிரஹ்மஸ்வரூபிணி. அல்லது, ஈஶாநன்முதல் ப்ரஹ்மா விருகவுள்ள பஞ்சகர்த்தாக்களும் நான்பிரஹ்மன், நான்விஷ்ணு நான் ருத்ரன், நான் மஹேஶ்வரன், நான் ஸதாசிவன் (ஈஶானன்) என்று அஹங்காரத்தோடு கூடியுள்ளவர்களாதலின்,

அவர்களின் அந்தக்கரணத்தில் ஸாக்ஷிரூபமாய் விளங்கி அஹம்பத லக்ஷ்யார்த்த ஸச்சிதாநந்த பரப்பிரஹ்மஸ்வரூபமாய் இருப்பவள். ஈஶாநாதி ப்ரஹ்மமய்யை நம : (46)

47. **ईशित्वाद्यष्टसिद्धिदा**—ஈசித்வம் முதலிய அஷ்டஸித்திகளேயும் தருபவள்.

**अणिमा महिमा लघ्वी गारिमा प्राप्तिरीशिता ।**

**प्रकाम्यं च वशित्वं च यत्र कामाः परागताः ॥**

என்பவை அஷ்டஸித்திகளாகும்.

1. அணிமா=நொடிநேரத்தில் அதிஸூக்ஷ்மபாவத்தையடையும் சக்தி.

2. மஹிமா=க்ஷணத்தில் மிகப்பெரிய வடிவத்தையடையும் சக்தி.

3. லக்வீ=மிகவும் லேசாய் இருக்குந்தன்மை.

4. கரிமா=கடினமாயும் ஜடமாயுமுள்ள பெரிய பர்வதம் போல் கனமாயிருக்குந்தன்மை.

5. ப்ராப்தி=வெகு சீக்கிரத்தில் விராட்ஸ்வரூபத்தையடையும் சக்தி.

6. ஈசித்வம்=இந்த்ராதி தேவர்களேயும் ப்ரேரேபிக்கும் வல்லமை.

7. ப்ராகாம்யம் = நினேத்தகார்யத்தைச் சாதித்து விரும்பியவற்றையெல்லாம் அடையும் ஆற்றல்.

8. வசித்வம்=பதினன்கு லோகங்களேயும் தன்வசமாக்கிக்கொள்ளும் வல்லமை.

இச்சித்திகள்யாவும் பாஹ்யப் பிரவ்ருத்தியோடு கூடிய வர்களுக்கே பயன்படுவதாகும்; ஆத்மஞானிகளுக்கு இவற்ருல் யாதொரு பயனுமில்லை.

ஈசித்வாத்யஷ்டஸித்திதாயை நம: (47)

48. **ईक्षित्री**—"साक्षी चेता" "आविः संनिहितं गुहायाम्" என்னும் ஶ்ருதிகளின்படி அஸங்க உதாஸீன ஞானஸ்வரூப மாய் இருக்கின்றவள்.

ஈக்ஷித்ர்யை நம: (48)

49. **ईक्षणसृष्टाण्डकोटिः**—இச்சா மாத்திரத்திஞல் கணக்கில்லாத ப்ரஹ்மாண்டங்களைச் சிருஷ்டி செய்யக்கூடியவள். "तदैक्षत बहुस्यां प्रजायेय" "स ईक्षांचक्रे; "आत्मा वा इदमेकमग्र आसीत्;" नान्यत्किंचन मिषत् स ईक्षत लोकान्नु सृजा इति स इमा ँल्लोकानसृजत" என்னும் பல ஶ்ருதிகளின்படி சிலந்திப்பூச்சி வலை பின்னுவதுபோல் பாஹ்யகாரணங்களின் அபேக்ஷை சிறிதுமின்றி, சிற்சக்தியபின்ன ப்ரஹ்மமே ஸர்வ ஜகத்திற்கும் அபின்ன நிமித்தோபாதானகாரணமாயிருக்கின்றது. "प्रकृतिश्च प्रति-ज्ञादृष्टान्तानुपरोधात्" என்னும் பிரஹ்மஸூத்ரமும் இந்த விஷயத்தையே விமர்சிக்கின்றது.

ஈக்ஷணஸ்ருஷ்டாண்டகோடயே நம: (49)

50 **ईश्वरवल्लभा**—காமேஶ்வரரைப் பதியாக வுடையவள். அல்லது ஈஶ்வரகோடியில் சேர்ந்த ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களால், அவரவர்களுக்குள்ள மஹிமையின் ஏற்றத் தாழ்வுப்படி, பரமப் பிரேமையோடு, பூஜிக்கத் தகுந்தவள்.

ஈஶ்வரவல்லபாயை நம: (50)

51. **ईडिता**—ஞானகாண்டமென்னும் வேதாந்தவாக்யங்களால் துதிக்கப்பட்டவள். "**एष नित्यो महिमाब्राह्मणस्य**" என்பது ஶ்ருதி. ஈடிதாயை நம: (51)

52. **ईश्वरार्धाङ्गशरीरा**—ஸச்சிதாநந்த ஸ்வரூப பரம சிவத்தின் பாதி சரீரத்தையுடையவள். அதாவது ஆநந்த ஸ்வரூபமே சரீரமாகவுடையவள். "**सच्चिन्मयः शिवः साक्षात्तस्यानन्दमयी शिवा**" என்பது ஸ்ம்ருதி. அல்லது பரமேஶ்வரனுடைய அர்த்தாங்கமான வாமபாகத்தை யிருப்பாகவுடையவள். அல்லது, பரமேஶ்வர வடிவ ஹகாரத்தின் அர்த்தாங்க சரீர மந்த்ராத்மகமாயிருப்பவள். அதாவது, ஹம் என்னும் பரமேஶ்வர பீஜத்தின் ஶப்தம் ஶக்திவடிவம். அர்த்தம் (பொருள்) சிவவடிவம்; "**वागर्थाविव**" என்பது அபியுக்த வசனம். ஈஶ்வரார்த்தாங்கஶரீராயை நம: (52)

53. **ईशाधिदेवता**—ஈஶ என்னும் பதத்தோடு உபலக்ஷணமாய் ஜீவனையும் கொள்ளல்வேண்டும். மாயோபாதியோடு கூடிய தத்பத வாச்யனான ஈஶ்வரனுக்கும் அவித்யோபாதியோடு கூடிய துவம்பத வாச்சியனான ஜீவனுக்கும் (**अधि**) மேலே, அஃதாவது பாகத்தியாக லக்ஷணையால் உபாதிகளை நிவர்த்தி செய்தபோது, கூடஸ்த சின்மாத்ர அகண்டைக ரஸமாய் விளங்குபவள். அல்லது, ஸம்வித்ரூப பரதேவதையானவள் **शिवरूपविमर्शनिर्मलादर्श** மாயும் **शङ्करस्यापि शङ्करि** யாகவும் இருப்பதனால் காமேஶ்வரனாலும் பூஜிக்கத்தகுந்தவள்; பரம பதிவ்ரதையென்று பொருள்; ஸாமரஸ்ய பாவமே பூஜையென்பதற்குத் தாத்பர்யம்.

ஈஶாதிதேவதாயை நம: (53)

54. **ईश्वरप्रेरणकरी**—மாயாவிசிஷ்ட ஜகத்காரணனு கும் ஈஶ்வரனுக்கும் அதிஷ்டானமாய் இருந்துகொண்டு ஜகத் ஸ்ருஷ்டி முதலிய கார்யங்களில் அவ்வீஶ்வரனைப்பிரே ரேபிக்கின்றவள். பரதேவதை, இச்சை, ஞானம், க்ரியை யென்னும் சக்திகளுக்கும் ஆவரண விக்ஷேபாத்மக அக் ஞானத்திற்கும் அதிஷ்டானமாய் விளங்குபவளாகும். இவற் றோடு கூடியுள்ள ஈஶ்வரன், இனிமேல் ஸ்ருஷ்டிக்கப் படுவ தான ஜகத்தைப்பற்றி ஆலோசிக்கின்றபோது, அவ்வாலோ சனையென்னும் ஈக்ஷணவடிவ ப்ரகாச ஸ்வரூபமாய் இருப்ப வளாதலின் ஈஶ்வரனை ப்ரேரேபிக்கின்றவள் என்று கூறப் பட்டது. பரதேவதை ஈஶ்வரனது பட்டமஹிஷியாகவும் அவனுக்கு மிகவும் ஸ்வாதீனையாகவும் இருப்பதனுல் ஈஶ் வரனைப்பிரேரணைசெய்த லென்பதும் அவனது ஆக்ஞை யினுலேயே என்றறிதல் அவசியம்.

ஈஶ்வரப்ரேரணகர்யை நம: (54)

55. **ईशताण्डवसाक्षिणी**—பரமேஶ்வரனது தாண்டவ (நடன)த்திற்குச் சாக்ஷியாய் இருப்பவள். ஜகத்தின், ஸ்ரு ஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபாவம், அநுக்ரஹம் முதலிய வைகளே பரமேஶ்வரனது தாண்டவமாகும். இப்பஞ்ச கிரு த்தியங்களுக்கும் ஸாக்ஷியாய் இருப்பவள் பரதேவதை. '**असंगो न हि सज्जते**' என்பது ஶ்ருதி. அல்லது பரமேஶ்வரன் தனது நாட்டியமாகும் ஆநந்தத் தாண்டவத்தினுல் அறு பத்திநான்கு கலைகளையும் உபதேசிக்கின்றுர். அப்போது பரதேவதை அவ்வுபதேசத்திற்கு ஸாக்ஷியாய் விளங்குகிறுள். '**नर्तनाद्धि परेशस्य चतुःषष्टिकलाजनिः**' என்னும் பிரதோஷ ஸ்தோத் திரம் இதற்குப் பிரமாணமாம்.

ஈஶதாண்டவ ஸாக்ஷிண்யை நம: (55)

56. **ईश्वरोत्सङ्गनिलया**—*தனது பதியான காமேஶ்வரனது மடிமேல் நிலைபெற்றுவிளங்குபவள்*

ஈஶ்வரோத்ஸங்க நிலயாயை நம : (56)

57. **ईतिबाधाविनाशिनी**—*விதிவசத்தினுலும் துஷ்ட ஜந்துக்களாலும் ஏற்படும் உபத்ரவத்தைப் போக்கடிப்பவள்.*

ஈதிபாதாவிநாசின்யை நம : (57)

58. **ईहाविरहिता**—*அடையப்படாத பொருளை அடைய வேண்டுமென்னும் இச்சைக்கு ஈஹை என்றுபெயர். அவ்விச்சை இல்லாதவள் ; ஆப்தகாமத்தன்மையினுல்.*

ஈஹாவிரஹிதாயை நம : (58)

59. **ईशशक्तिः**—*ஈஶ்வரனுடைய ஶக்திஸ்வரூபமாயிருப்பவள். ஸர்வக்ஞத்வம், ஸர்வகர்த்ருத்வம் முதலிய ஸாமர்த்தியங்களெல்லாம் ஶக்திஸ்வரூபங்கள். '* **देवात्मशक्तिम्** *' என்பது ஶ்ருதி.*

ஈஶஶக்த்யை நம : (59)

60. **ईषत्स्मितानना**—*மந்தஹாஸத்தோடு கூடின முகத்தையுடையவள்; துக்கம் ஒரு சிறிதுமில்லாத பரமாநந்த ஸ்வரூபிணியாதலால் எப்பொழுதும் புன் சிரிப்பு முகத்தோடு கூடினவள்.*

ஈஷத்ஸ்மிதாநநாயை நம : (60)

61. **लकाररूपा**—*மூலவித்யையின் நான்காவது வர்ணமாகிய லகாரவடிவமாக இருப்பவள்.*

லகாரரூபாயை நம : (61)

62. **ललिता**—" **ललितं त्रिषु सुन्दरम्** " *என்னும் வசனப்படி ஒப்பும் உயர்வுமற்ற அழகையுடையவள்.*

லலிதாயை நம : (62)

63. **लक्ष्मीवाणीनिषेविता**—ஸகலவித ஐஶ்வர்யங்களை யும் தருபவள் லக்ஷ்மீ; ஸகல வித்யாஞானங்களையும் தருபவள் ஸரஸ்வதி; ஐஶ்வர்யஶக்தி, ஞானஶக்தி யென்னும் லக்ஷ்மீ-ஸரஸ்வதிகளால் யதார்த்தமாயுள்ள ப்ரேமையோடு அநந்யமாய் ஸேவிக்கப்படுபவள்; ஸேவையென்றால் கண்ணிமை கொட்டாமல், பரதேவதை எந்த நேரத்தில் எந்த ஆக்ஞையைச்செய்வாளோ வென்று பரதேவதையின் முகத்தையே பார்த்துக்கொண்டிருப்பதாகும்.

லக்ஷ்மீவாணீநிஷேவிதாயை நம: (63)

64. **लाकिनी**—"कं ब्रह्म" என்னும் ஶ்ருதிப்படி कं=ஆநந்தம். ஆநந்தமல்லாதது அகம் (**अकं**); ப்ரஹ்ம பின்னமாகத் தோன்றும் ப்ரபஞ்சம்; இது துக்கவடிவம். இந்த ஜகத்து எங்கே லயத்தை யடைகின்றதோ அது லம். லயத்தின் உபலக்ஷணமாக உத்பத்தி ஸ்திதிகளையும் கொள்ளல் வேண்டும். அதாவது இந்த ஜகத்து எங்கிருந்து உத்பத்தியாய் எங்கே நிலைபெற்று எங்கே லயத்தை அடைகின்றதோ அது, (**लं अकं अस्यास्तीति=लाकिनी**) லாகினீ ஆகும்; என்றால் அந்ருத ஜட துக்க ப்ரபஞ்சகாரணமாயும், ப்ரபஞ்ச வடிவ நாமரூபங்களின் வியாவ்ருத்தியில் ஸ்வயமாய் ப்ரகாசிக்கும் ப்ரஹ்மஸ்வரூபமாயும் விளங்குபவள்.

லாகின்யை நம: (64)

65. **ललनारूपा**—ஒருவஸ்துவின் ஞாபகத்தை யுண்டு பண்ணுவது ரூபமெனப்படும்; ஆதலின் வஸ்துவின் அடையாளம் அல்லது லிங்கமே ரூபமாகும். ஸ்திரீகளின்ரூபம் அதாவது வேஷம், பூஷணம் முதலிய அலங்காரங்கள் யா

ருக்குஉள்ளனவோ அவள். "लिंगाङ्कितमिदं पश्य जगदेतद्भगाङ्कितम्" என்பது புராணவசனம். லலநாரூபாயை நம: (65)

66. **लसद्दाडिमपाटला**—நன்ருய் விகஸித்த மாதுளம், பாதிரி இவைகளின் சேர்க்கையால் எந்த நிறம் ஏற்படுமோ அத்தகைய நிறத்தையுடையவள். மாதுளம் புஷ்பத்திற்கு ஸஜாதீயமான செம்பருத்தி (பந்துகம்) வ்ருக்ஷ முதலிய புஷ்பங்களேயும் கொள்ளலாம். பாடலம் என்பது வெண்மை கலந்த சிவப்புநிறம். லஸத்தாடிம பாடலாயை நம: (66)

67. **ललन्तिकालसत्फाला**—லலந்திகை யென்னும் ஒரு வித ஆபரணத்தினுல் ப்ரகாசிக்கும் நெற்றியையுடையவள். மத்தியில் நவரத்தினங்களேப் பொருத்தி, மேலே நல்லமுத்தை இழைத்துள்ள ஒருவகை ஆபரணம் லலந்திகை யெனப்படும். இது நெற்றியில் விளங்குவதனுல் நெற்றிப்பட்டமென்றுங் கூறலாம். லலந்திகாலஸத்பாலாயை நம: (67)

68. **ललाटनयनार्चिता**—நெற்றிக்கண்ணேயுடையவர்களால் பூஜிக்கப்படுபவள்; லலாடம் என்பது **भ्रूमध्यं**=புருவநடு, குளபதம். நயனம் என்பது ஞானம். கேசரீ முத்திரையால் ஊர்த்வ திருஷ்டியையுடைய மஹாயோகிகள், அஸி-வருணே களுக்கு மத்தியிலுள்ள (வாரணுஸி) அவிமுக்த (காசி) க்ஷேத்திரத்தில் ஜாபாலோபநிஷத்தில் அத்ரிக்கு யாக்ஞவல்கியர் கூறியுள்ளபடி பாவித்துப் பரமேஶ்வரனே யாராதனம் செய்பவர்களாவார்கள். அவர்களால் பூஜிக்கப்படுபவள். அதாவது அத்தகைய மஹாயோகிகளால் ஸாக்ஷாத்கரிக்கப்படுபவள். அல்லது முக்கண்படைத்த ருத்ரமூர்த்தியால் பூஜிக்கப்படுபவள்.

லலாட நயனுர்ச்சிதாயை நம: (68)

69. **लक्षणोज्ज्वलदिव्याङ्गी**—ஸ்வரூபம் தடஸ்தம் என்னும் இருவித லக்ஷணங்களாலும் சோபிக்கும் ஸ்வரூபத்தையுடையவள். "**तदात्मानं स्वयमकुरुत**" என்னும் ஶ்ருதிப்படி பரதேவதை தனது சரீரத்தைத்தானே நிர்மித்துக்கொண்டாள். அதாவது ஸச்சிதாநந்தகனமான ஜீவாத்மக விக்ரஹமுடையவள்; அல்லது, ஸாமுத்ரிகா சாஸ்திரப்படி ஸகல லக்ஷணங்களும் பொருந்திய அங்கங்களை (சிரம், கைகள் முதலியவை) யுடையவள்.

லக்ஷணோஜ்வல திவ்யாங்க்யை நம: (69)

70. **लक्षकोट्यण्डनायिका**—லக்ஷம், கோடி என்னும் கணக்கற்ற அண்டங்களுக்கு நாயகியாய் விளங்குபவள். இறந்தகாலத்திலுண்டானதும் இனி உண்டாகப் போவதுமான அண்டங்கள் கணக்கில் அடங்காதவையாகும். இந்த ஸம்ஸாரம் (பேதத்தோற்றம்) அநாதி. பேத ஞானத்தோடு கூடியுள்ளவர்கள் ஜீவர்களெனப்படுவர். இவர்கள் விஶ்வ தைஜஸாதியர்கள். ஒவ்வொரு அண்டத்திற்கும் ஸமஷ்டியாய் விராட்-ஹிரண்யகர்ப்பாதிகள் உண்டு. இங்ஙனம் பலகோடி அண்டங்களிலுள்ள வ்யஷ்டிஸமஷ்டிரூப ஜீவேஶ்வர உபாதிகளை அதிஷ்டானரூபமாகும் தனது ஸத்தையில் லயம் செய்விப்பவள்.

லக்ஷகோட்யண்ட நாயிகாயை நம: (70)

71. **लक्ष्यार्था**—ஜஹதஜஹல்லக்ஷணையால், வேதாந்த மஹாவாக்யங்களுக்கு எந்த அர்த்தம் விமர்சிக்கப்படுகின்றதோ அந்த அர்த்தஸ்வரூபமாய் விளங்குபவள். அல்லது யோகசாஸ்திரத்தில் பிரஸித்தமான பாஹ்யம் (வெளி),

ஆந்தரம் (உள்), ஊர்த்வம் (மேல்), அத: (கீழ்) என்னும் ப்ரதேசங்களில் மனம் விரும்பும்வகையாய் அதை (மனதை) ச்செலுத்தி மனோலய அப்பியாஸம் செய்து ஸுகத்தை அடையும் வகை கூறபட்டுள்ளது. அவை பஹிர்லக்ஷ்யம், அந்தர்லக்ஷ்யம் முதலியனவாகும். இத்தகைய லக்ஷ்யங்கள் ப்ரக்ருதிலய ஸுகத்தை யுண்டு பண்ணுவனவாகும். இத்த கைய லக்ஷ்யங்களை அப்பியஸிக்கும் விதத்தைக் குருவின் பால் விசாரித்துத் தெரிந்துகொள்ளுவது அர்த்தமாகும். ராஜயோகரீதியாய் மேற் கூறப்பட்ட பாஹ்யாதி லக்ஷ்யங் களும், அவற்றில் விளங்கும் சைதன்யமும், ஸாதனமும், பலமுமாகும் லக்ஷ்யமும் பரமாத்ம ஸ்வரூபமேயாகும் "**ब्रह्मैवेदममृतं पुरस्ताद्ब्रह्म पश्चाद्ब्रह्म दक्षिणतश्चोत्तरेण**" என்னும் ஶ்ருதிப்படி ப்ரஹ்மமே எங்கும் உள்ளதாகும்.

லக்ஷ்யார்த்தாயை நம: (71)

72. **लक्षणागम्या**—லக்ஷணையால் அறியமுடியாதவள். லக்ஷணையென்றால், வாசகமாகும் பதத்தோடு வாச்சியார்த் தத்திற்குப் பொருத்தம் ஏற்படாவிடின், அப்பதத்தின் அர்த்த வடிவ ஶக்ய ஸம்பந்தத்தைக்கொள்ளுதல் ஆகும். "கங்கை யில் ஆயர்பாடி" என்னும் வாக்கியத்தில் கங்கை என்னும் பதத்திற்கு அர்த்தம் ஜலப்ரவாஹமாகும். ஆயர்பாடி யென்பது இடையர்களின் கிராமம். ஜலப்ரவாஹத்தில் ஒரு கிராமம் எங்ஙனம் இருக்கும்? இராது. ஆகவே ஶக்தி யார்த்தத்தை விட்டுவிட்டு ஜலப்ரவாஹத்திற்குச் சம்பந்தப் பட்ட கரையைக்கொள்ளுதல் லக்ஷணையாம். இந்தலக்ஷணைக் கு வாசகமாகும் கங்காபதத்தோடும் வாச்சியமாகும் ஜலப்பிர வாஹத்தோடும் ஸம்பந்தம் உள்ளது. வாச்சியம், வாசகம்,

ஸம்பந்தம் என்பவை பரிச்சின்னங்களாகும். ஸக்கியஸம்பந்த ரூபமான எந்த லக்ஷணேயுண்டோ அதனல் ஏற்படும் ஞானம் ஸாவயவ (அவயவங்களோடு கூடிய) ஸபேத (பேதத்தோடு கூடிய) பரிச்சின்னமே யாதல்வேண்டும். நிரவயவமாயும், அபேதமாயும் அபரிச்சின்னமாயும் உள்ளதன்ருே சித் சக்தி? இத்தகைய சித்சக்தியானது, ஸபேத ஞானத்தை யுண்டுபண்ணும் லக்ஷணேயால் எங்ஙனம் அறியக்கூடும்? கூடவேகூடாது. அத்வைத மதத்தில், ஜஹதஜஹல்லக்ஷணே யால் தத்-த்வம் என்னும் இரண்டு பதங்களிலும் ஐக்கியத் திற்குப்பொருந்தாத (கல்பித) உபாதிகளின் நீக்கம் கூறப் படுவதால் அந்தலக்ஷணே பொருத்தமுடைய தாகின்றது. இந்தலக்ஷணேயும் உபாதி நீக்கத்தில் மாத்திரம் பொருந்துமே யன்றி அதிஷ்டானங்களின் ஐக்யத்திற்கன்று; அது நித்தியஸித்தம், ஸ்வயம் ப்ரகாச பிரஹ்மம் லக்ஷண அகோ சரமே யாகும். லக்ஷ்ணுகம்யாயை நம: (72)

73. **लब्धकामा**—காமா: = ஐஹிகமாயும், ஆமுஷ்மிக மா யுமுள்ள ஸுகஸாதனங்களும் அவற்ருல் அடையும் ஸுகங் களும்; யாருக்கு இவை அடையப்பட்டன வாகுமோ அவள்; அதாவது எல்லா காமனேகளேயும் அடையப்பெற்றவள்-"இது வேண்டும்" என்னும் எண்ணமும் அற்றவள். "**पर्याप्तकामस्य कृतात्मनस्तु इहैव सर्वे प्रविलीयन्ति कामाः**" என்பது ஶ்ருதி.

லப்த்தகாமாயை நம: (73)

74. **लतातनुः**—லதைகளென்பவை கல்பலதை முதலிய கொடிகளாகும்; ஸகலபுருஷார்த்தங்களேயும் கொடுக்கும் மஹிமைபெற்றவை; அவைகளேப்போன்ற மென்மையுடை யதும் அழகையுடையதுமான சரீரத்தோடு கூடியவள்.

லதாதனவே நம: (74)

75. **ललामराजदलिका**—கஸ்தூரிப்பொட்டினுல் ப்ரகா காசிக்கும் நெற்றியையுடையவள்.

லலாமராஜதலிகாயை நம: (75)

76. **लम्बिमुक्तालतांचिता** — தொங்குகின்றவையான முத்துமாலைகளால் மிக்க அழகையுடையவள். ஸ்வர்ண (தங்க)த்திஞல் செய்யப்பட்டு நவரத்தினங்கள் இழைத்த கிரீடத்தின் முன் பாகத்தினின்றும் நெற்றிப்பட்டத்தினின்றும் நாஸாக்கிரம் (மூக்கின் நுனி), குண்டலங்களின் கீழ்ப்பாகம், கழுத்து, நான்கு கைகள் (முழங்கைக்குமேல் தோளுக்குக் கீழ்) இவைகளினின்றும், பாதங்களின் நுனிகளினின்றும், இடுப்பில் பிரகாசிக்கும் ஒட்டியாணத்தினின்றும் கீழேதொங்கும்படியான முத்துமாலைகளால் விளங்குபவள்.

லம்பிமுக்தாலதாஞ்சிதாயை நம: (76)

77. **लम्बोदरप्रसुः**—மஹாகணபதியின் மாதாவாயுள்ளவள்.

லம்போதர ப்ரஸவே நம: (77)

78. **लभ्या**—ஸம்ஸார (அக்ஞான) தசையில் அக்ஞானத்தினுல் மறைக்கப்பட்டு நன்ருய் அறியக்கூடாதவளாகிப் பின் எல்லா ஸாதனங்களையும் பெற்ற (அதிகாரி) முமுக்ஷுக்களால் சிரவணம், மனனம், நிதித்தியாஸனம் முதலியவற்ருல் ஏற்பட்ட அகண்டாகார வ்ருத்தியில் விளங்குபவள். ஆத்மஸ்வரூபம் நித்தியஸித்தமாயிருப்பினும், கழுத்தில் இருக்கும் ஹாரத்தை மறந்து இங்குமங்கும் தேடிக்கிடைக்காமல் மறுபடியும் பிறரால் ஞாபகப்படுத்தப்பட்டுத் தன் கழுத்தில் தொட்டுப்பார்த்துக் கிடைத்த ஹாரம்போல், அடையப்படுபவள்.

லப்யாயை நம: (78)

79. **लज्जाढ्या**—லஜ்ஜையென்பது, நாணம். இது அந்தக்கரண தர்மங்களில் ஒன்றாகும். இதனால் உபலக்ஷணமாக எல்லாத் தர்மங்களையும் கொள்ளல்வேண்டும். "ஆட்யா" என்பது அத்தகைய தர்ம (வ்ருத்தி) வடிவ ஆகாரத்தை யுடையவள். லஜ்ஜையினால் தன்னை வெளிக்கு நன்றாய்க் காட்டாமல் மறைவாக நிற்பதுபோல் பரதேவதையும் திரோபவ சக்தியினால் தன்னை மறைத்துக்கொண்டு பக்தர்களுக்கு மாத்திரம் வரங்களை அருளிச் செய்கின்றவள்.

லஜ்ஜாட்யாயை நம: (79)

80. **लयवर्जिता**— "**अविनाशी वा अरेऽयमात्मा अनुच्छित्तिधर्मा**" என்னும் ஶ்ருதிப்படி நாசமின்றி அவிநாசியாய் இருப்பவள். அஸ்தி-ஜாயதே-வர்த்ததே-பரிணமதே-என்பனவாதி, ஷட்பாவ விகாரங்களும் இங்கு உபலக்ஷணமாம்; என்றால், நாசம் முதலிய எந்த பாவ விகாரங்களுமற்றவள் என்பது கருத்து "**सत्यं ज्ञानमनन्तं ब्रह्म**" என்பது ஶ்ருதி.

லயவர்ஜிதாயை நம: (80)

81. **ह्रींकाररूपा**—ஸ்ரீவித்யையின் ஐந்தாவதான பீஜாக்ஷரம் ஹ்ரீம் என்பதாகும்; இதனால் நிரூபணம் செய்யப்படுபவள்.

ஹ்ரீங்கார ரூபாயை நம: (81)

82. **ह्रींकारनिलया**—ஹ்ரீம் என்னும் அக்ஷரத்தையே நிலயமாக வுடையவள். எங்கும் வியாபகமாயுள்ள பரதேவதையை இந்த ஹ்ரீம் என்னும் அக்ஷரம் அவச்சேதப் படுத்துகின்றது. ஸமுத்திரஜலத்தில் கட்டப்பட்ட ஒரு வலயாகாரமான சுவறு தனக்குள் அடங்கிய ஜலத்தை ஒரு எல்லைக்குட்படுத்தி கிணறு என்னும் பெயரைப் பெறும்படி செய்

கின்றது. சுவறு அவச்சேதகம்; ஜலம் அவச்சேத்யம்; இங்ஙனமே ஹ்ரீம் என்னும் அக்ஷரம் அவச்சேதகம் ; வாச்சிய வாசகஸம்பந்தமும் பொருந்தும்; ஹ்ரீம் என்னும் வாசகத்தை யிருப்பிடமாகவுடையவள். சொல்லுக்கும் பொருளுக்கும் அபேதம். சொல் தனது அர்த்தமாயுள்ள பொருளை ஞாபகப்படுத்துகின்றது.

ஹ்ரீங்கார நிலயாயை நம: (82)

83. **ह्रींपदप्रिया**—எதனுல் ஒன்று அடையப்படுகின்றதோ அல்லது அறியப்படுகின்றதோ அது பதமென்று கூறப்படும். ஹ்ரீம் என்பது மந்த்ரத்தின் ஒரு அவயவம்; (அம்சம்); ஆதலின் மந்த்ரார்த்தஸ்வரூப அதிஷ்டான பரதேவதையை அறிவிக்குஞ்சக்தி அதற்கு உண்டு; **शक्तं पदं** என்னும் நியாயத்தினுல் மேற்கூறியபடி பொருள் செய்யப்பட்டது. **वर्णसमुदायः पदम्** என்னும் லக்ஷணத்தின்படி ஹ்ரீங்காரத்தில், ஹகாரம், ரேபம், ஈகாரம், அநுஸ்வாரம் என்னும் நான்கு வர்ணங்கள் உண்டு. ஆதலின் ஹ்ரீங்காரத்திற்குப்பதலக்ஷணம் பொருந்துகின்றது. இத்தகைய பதரூபமான ஹ்ரீம் என்னும் மந்த்ரத்தைப் பக்தர்கள் புரஸ்சர்யை செய்து ஸகலபுருஷார்த்தங்களையும் அடையலாம். ஸகல புருஷார்த்தங்களையும் பரதேவதையின் மூலமாய் அடைவிக்கும் சக்தி இந்த ஹ்ரீங்காரத்திற்கு எப்படி ஏற்பட்டது? அம்பாளுக்கு ஹ்ரீம் என்பது அதிகப்ரியமான மந்த்ரம் ஆதலின்.

ஹ்ரீம் பதப்ரியாயை நம: (83)

84. **ह्रींकारबीजा**—"ज्ञापकं देवतानां यत् बीजमक्षरमुच्यते" என்னும் வசனப்படி, ஹ்ரீம் என்பது பரதேவதையின் வாசகமான மந்த்ரத்தின் ஒருபாகமாகும். ஆதலின்

அது பரதேவதையின் ஸ்வரூபத்தை ஞாபகப்படுத்துவதா கும். எங்ஙனம் ஒரு ஆலம்விதையானது அதிஸூக்ஷ்மமா யிருப்பினும் தனக்குள் அடங்கியிருக்கும் பெரிய விருக்ஷத் தின் அபிவியஞ்சகமாயிருக்கின்றதோ அங்ஙனமே ஹ்ரீம் என்னும் பீஜாக்ஷரமும் மாயை, மாயாவச்சின்ன சைதன் யம், மாயாகார்யரூபப் பிரபஞ்சம் இவற்றின் அபிவியஞ்சக மாய் இருக்கின்றது. ஸத்கார்யவாதிகள் இங்ஙனம் கூறு கின்றனர் :—நாமரூபங்கள் வியக்தமாகாமலுள்ள காரணஸ் திதியைப் பீஜமென்கின்றனர். நாமரூபங்கள் வியக்தமாய்த் தோன்றும் நிலையைக் கார்ய மென்கின்றனர். ஆதலின் காரணமே விசேஷமான நாமரூபங்களோடு வியக்தமாதலைத் தான் காரியமெனப்படுகின்றது. ஹ்ரீங்காரமானது, ஹகா ரத்தினுல் மாயையையும், ரேபத்தினுல் மாயாவச்சின்ன சைதன்யத்தையும், ஈகாரத்தினுல் சுத்த சைதன்யத்தையும் ஞாபகப்படுத்துவதால் பீஜமாகின்றது. ஆதலின் ஸர்வாத் மகமாயுள்ள பரதேவதைக்கு ஹ்ரீங்காரம் பீஜமாகும்.

ஹ்ரீங்கார பீஜாயை நம : (84)

85. **ह्रींकारमन्त्रा**—ஹ்ரீம் என்னும் மந்த்ரஸ்வரூப மாய் விளங்குபவள். தன்னை மனனம் செய்யும் ஸாதகர் களைச் சோகத்தினின்றுங் காப்பாற்றுகின்றது ஹ்ரீம் என் னும் மந்த்ரமாகும். ஹ்ரீங்காரம் பரதேவதையின் வாசகம். வாச்சிய வாசகங்களுக்குப் பரஸ்பரம் அபேதமே உண்டு. ஹ்ரீம் என்பது தனது வாச்சியரூப பரதேவதையை அப ரோக்ஷம் செய்விக்கின்றது; ஹ்ரீங்காரத்தைப் பெற்ற மந்த்ரஸ்வரூபிணியாயுள்ளவளெனினும் ஒக்கும்.

ஹ்ரீங்கார மந்த்ராயை நம : (85)

86. **ह्रींकारलक्षणा**—ஹகாரம்=சிவன்; ஹகாரம் ஆகாச பீஜமாதலின் ஆகாசம்போல் எதிலும் ஒட்டாதவனுதலின் சிவமென்னும் பொருள் பொருந்தும். ரேபம் (ரகாரம்) அக்னிபீஜம். கார்யத்தை உண்டுபண்ணும் சக்தியோடு கூடிய ஈஶ்வரவாசகம்; ஆதலின் ஹகாரத்தோடு கூடிய ரேபம் காரணத்துவத்தினுல் விளைவுபட்ட சுத்தசைதன்னிய மேயாகும்; ஈகாரம் ஸ்திதிகாரணமான விஷ்ணு சைதன்னியம்; அநுஸ்வாரம், லயஸ்வரூபம்; ஆதலின் ஹ்ரீம் என்பது ஸர்வப்ரபஞ்சஉத்பத்தி, ஸ்திதி, லயகாரணமாகும் சைதன்னியமே என்று தெளிவாகின்றது. உபாதியை நீக்கி ஸ்வரூபத்தை அறிவிப்பது லக்ஷணத்தின் லக்ஷணம். ப்ரபஞ்சத்தின் உத்பத்தி ஸ்திதிலயகாரணத் தன்மையுடைமை சேதனத்தின் தடஸ்தலக்ஷணமாகும். ஹ்ரீங்காரத்தைத் தடஸ்த லக்ஷணமாகவுடையவள். ஹ்ரீங்கார லக்ஷணையை நம: (86)

87. **ह्रींकारजपसुप्रीता**—ஹ்ரீங்கார ஜபத்தினுல் மிகுந்த ஸந்தோஷத்தை யடைபவள்.

ஹ்ரீங்கார ஜபஸுப்ரீதாயை நம: (87)

88. **ह्रींमती**—ஹ்ரீம் என்னும் மந்த்ரத்தை (வாச்சிய வாசகங்களுக்குப் அபேதமாதலின்) வாசகமாகவோ, (லக்ஷ்ய லக்ஷகங்களுக்குப் பேதமின்மையின்) லக்ஷகமாகவோ உடையவள். ஹ்ரீம்மத்யை நம: (88)

89 **ह्रींविभूषणा**—கேவலம் ஜடமாயாவாசகமாகும் ஹ்ரீங்காரத்தையே ஆபரணமாகவுடையவள். ஹகாரம் வெளுப்புநிறமானது, ரேபம் சிவப்புநிறம், ஈகாரம் நீலநிறம்

ஆதலின் ஹ்ரீங்காரமானது ஸத்துவ ரஜஸ் தமோ குணாத்மக ப்ரக்ருதி வாசகமாகின்றது. இந்த ப்ரக்ருதி பரதேவதையைவிட வேறானதல்ல. ஆயினும் அது காலதேச வஸ்து பரிச்சேதங்களையுடைய அஸத் ஜடதுக்கப்ரபஞ்ச ரூபமாய்த் தோன்றுவதால் வேறாகக் காணப்பட்டுப் பிரகாச மற்றுத் தள்ளுதற்குறிய விஷயமாகின்றது. சித் சக்திரூப பரதேவதை அஸத் ஜடதுக்கரூப ப்ரக்ருதிக்கு அதிஷ்டானமாய் இருந்துகொண்டு அதை விளக்குகின்றது. ஹ்ரீங்காராவச்சின்ன பரதேவதைக்கு ஹ்ரீங்காரம் பூஷணமாகின்றது. அல்லது உச்சிமுதல் உள்ளங்கால் வரையில் பலநகைகளை யணிந்த ஒரு யௌவன ஸ்திரீயைப்போல், ஸ்வஸ்வரூப ஆநந்தத்தினால் ஹ்ரீங்காரத்திற்கு ஸத்தாஸ்பூர்த்தியைத் தந்து அஷ்டைஸ்வர்யங்களையும் தரும் சக்தியையும் தருதலால் ஹ்ரீங்காரத்திற்குப் பரதேவதையே ஒரு ஆபரணமாய் விளங்குகின்றனள் எனக்கூறலாம். இதனால், ஸஜாதீயமான இதர பீஜாக்ஷரங்களுக்கும் பரதேவதையே பூஷணம் ஆம் என்பதும் தொனிக்கின்றது.

ஹ்ரீம் விபூஷணாயை நம: (89)

90. **ह्रींशीला**—ஹ்ரீம் என்பதால் அதன் வாச்சியர்களான, ப்ரஹ்ம, விஷ்ணு, ருத்திரர்களைக் கொள்ளல்வேண்டும். இவர்களின் சீலம் = ஸ்வபாவம்-அதாவது பாரமார்த்திக ரூபம். அது ஸச்சிதாநந்தவடிவமே. இத்தகையஸ்வரூபத்தையுடையவள். அல்லது அவர்களின் தர்மமான ஸத்துவ, ரஜஸ் தமோ குணங்களும் சீலம் என்பதற்குப் பொருளாகலாம்; ஆதலின் த்ரிகுணாத்மக வடிவினள். "**शीलं स्वभावे धर्मे च**" என்பது பிரமாணம்.

ஹ்ரீம்சீலாயை நம: (90)

91. **ह्रींपदाराध्या**—ஹ்ரீம் என்னும் ஏகாக்ஷர மந்த்ரத்தி ைல் ஆராதிக்தற்குரியவள். "**ह्रींकारेणैव संसिद्धो भुक्तिं मुक्तिं च विन्दति**" என்னும் புவனேஸ்வரீகல்ப வசனத்தின்படி ஹ்ரீங்கார த்திைல் ஆராதித்து, புக்தி முக்திகளை யடைகின்றனர் என்று ஏற்படுகின்றது. ஹ்ரீம்பதாராத்யாயை நம: (91)

92. **ह्रींगर्भा**—ஹ்ரீம் சப்தத்தின் அர்த்தம் ஸகுணஸ்வ ரூப த்ரிமூர்த்திகள்-ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்கள்; இவர்களையும் இவர்களது சக்திகளாகும் வாமா ஜ்யேஷ்டா ரௌத்ரீக் களையும் தனது கர்ப்பத்தில் அடக்கி வைத்துக்கொண்டிருப் பவள். "**मम योनिर्महद्‍ब्रह्म तस्मिन् गर्भं दधाम्यहम्**" என்பது பிரமாணம். ஹ்ரீம்கர்ப்பாயை நம: (92)

93. **ह्रींपदाभिदा**—ஹ்ரீங்காரத்தையே அபிதான(நாம) மாகவுடையவள்; ஸமஷ்டிஸ்வரூப பரதேவதைக்கு ஸமஷ்டி ரூப்த (ஹ்ரீம்) வாச்சியத்தன்மை பொருந்தும்.

ஹ்ரீம்பதாபிதாயை நம: (93)

94. **ह्रींकारवाच्या**—மாயையை உபாதியாக வுடைய பிரஹ்ம ஸ்வரூபத்தில் கல்பிதமான தர்மங்களுள்ளனவால் சப்தங்களின் பிரவ்ருத்திஸம்பவிக்கும். ஹ்ரீம் என்னும் பதத்தை ரூடிவாசகமாயுடையவள் என்பது கருத்து.

ஹ்ரீம்கார வாச்யாயைநம: (94)

95. **ह्रींकारपूज्या**—"**मूलमन्त्रेण पूजयेत्**" என்னும் வசனப் படி மூலமந்த்ரம் என்பது அம்மந்த்ராதிஷ்டமான தேவதை யின் நாமமாகும். "**मूलमनुश्च देवतायः स्वकं नामम्**" என்னும் வசனரீதியினுல் கேவலம் அந்தர்முகப்பட்ட மனத்தினர் களே மூலத்தினுல் பூஜிக்கிறதற்கு அதிகாரிகள் என்று மந்த்ர

சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றது. "ஹ்ரீம் நம:" என்று ஸத்குருவின் உபதேசப்படி ஸ்ரீசக்ரத்தில் பூஜை செய்யலாம் என்பது ஆகம சாஸ்திர ஸித்தாந்தமாகும். இந்த பீஜம் பரதேவதைக்கு அதிகப்பிரியமானதாகையினால் இதனாலேமட்டும் பூஜித்தற்குரியவள்.

ஹ்ரீம்காரபூஜ்யாயை நம: (95)

96. ह्रींकारपीठिका—வாச்சியமான அர்த்தம் வாசகமான சப்தத்திற்கு ஸத்தையைக் கொடுப்பதால் இங்கு பீடம் என்னும் சப்தத்திற்கு ஆதாரம் என்று பொருள் கூற வேண்டியிருக்கின்றது. ஆதலின் ஹ்ரீங்காரத்திற்கு ஆதாரமாய் விளங்குபவள் பரதேவதை என்பதாகும். மந்த்ரத்திற்கும் தேவதைக்கும் பேதமில்லையாயினும், அர்த்தமாயுள்ள தேவதைக்குள்ள மஹிமை, வாசகத்தில் காணப் படுவதில்லை; ஆதலின் அவற்றிக்குப் பரஸ்பரம் கற்பிதமான சிறிது பேதம் உண்டு. இப்பேதத்தை யொத்துக்கொண்டே இங்ஙனம் கூறப்பட்டது. ஹ்ரீங்காரத்தின் விருத்திக்கு ஸ்தானமாயும் சக்தி விருத்தியினால் அறியப்படுபவளாயும் விளங்குபவள்.

ஹ்ரீம்காரபீடிகாயை நம: (96)

97. ह्रींकारवेद्या—பரதேவதையானவள் ஸ்வபாவமாக நிர்க்குண பரப்பிரஹ்மஸ்வரூபமாயிருப்பினும் ஸம்ஸார தசையில் அக்ஞானத்திற்கு ஆஶ்ரயமாயும் விஷயமாயும் இருக்கும் காரணத்தினால் அபரோக்ஷமாவதில்லை. ஆதலின் புருஷார்த்தத்தின் அடைவு ஏற்படுவதில்லை. புருஷார்த்தப் பிராப்தியின் பொருட்டுக் குருவையடைதல், அவரிடத்தில் வேதாந்த ச்ரவணம் செய்தல், முதலிய விதிகள் அப்பிராமாண்யங்களாகத் தோன்றுகின்றன. இவற்றை

நிவர்த்திக்கும் பொருட்டு ஒவ்வொருவராலும் விரும்பப் படும் ஆநந்தமே தனது சுத்தஸ்வரூபமாக வுடைத்தாய், ஶ்ரவணம், மனனம், நிதித்யாஸனம் முதலியவற்ருல் ஏற் பட்ட ஹ்ரீங்காரவடிவ அகண்டாகாரவிருத்தி வ்யாப்ய அப ரோக்ஷஞான விஷயமாக பரதேவதை யாகின்ருள். "ब्रह्मण्यज्ञाननाशाय वृत्तिव्याप्तिरितीर्यते" "मामेव ये प्रपद्यन्ते मायामेताम्" என்பன வாதி வசனங்களால் மேற்கூறிய பொருள் நன்கு விளங்கு கின்றது. குருமுகமாய் வெளிக்கிளம்பி உபதேசிக்கப்பட்ட ஹ்ரீங்காரத்தினல் பரதேவதை அறியப்படுகின்ருள். பரதேவ தையின் ஞானமே ஆநந்தப் பிராப்திரூப மோக்ஷமாகும்.

குறிப்பு :—ஸம்ஸாரதசையில் கற்பிதமான அக்ஞான மானது அதிஷ்டான பிரஹ்மாபின்ன பரதேவதையை ஆஶ் ரயித்து விளங்கி அப்பரதேவதையையே மறைக்கின்றது. பர தேவதை அக்ஞானத்தினல் மறைக்கபடுவதே அக்ஞானத் திற்கு விஷயமாதலாகும். இது தான் ஸ்வாஶ்ரயஸ்வ விஷய பக்ஷம். ஹ்ரீங்காரமாகும் அகண்டாகாரவ்ருத்தியினல் பர தேவதையை ஆஶ்ரயித்து மறைத்துள்ள அக்ஞானம் நசிக் கின்றது. அந்தக்ஷணத்திலேயே பரதேவதை அபரோக்ஷ மாகின்றனள். ஸ்வப்பிரகாச வடிவினளாதலின்.

ஹ்ரீங்காரவேத்யாயை நம: (97)

98. ह्रींकारचिन्त्या—ஹ்ரீங்காரமானது பஞ்சப் பிரண வங்களில் ஒன்ருதலால் ஓங்காரத்தைப்போலவே அது பிர ஹ்மோபாஸனைக்குக் காரணமாகின்றது. ஓங்காரத்திலும் ஹ்ரீங்காரத்திலும் நிர்க்குண பரஸ்வரூபமும் ஸகுண அப ரஸ்வரூபமும் உண்டு. இது யோக வேத மார்க்கங்களின் ரஹஸ்யம். இதில் யாதொரு விவாதமுமில்லை. ஹ்ரீங்கார

த்தில் இரண்டுவித பிரஹ்மஸ்வரூபங்களும் இருப்பதால் "அதனுல் சிந்திப்பதற்கு உரியவள் பரதேவதை" என்று ஏற்படுகின்றது.

ஹ்ரீங்காரசிந்த்யாயை நம: (98)

99. **ह्रीं—हृञ्-हरणे**-என்னும் தாதுவினுல் அதிஷ்டான ஸ்வரூபமாயுள்ள பரதேவதையினிடத்தில், ஸகல வித்யைகள் ஐஶ்வர்யங்கள் முதலியவற்றை யருளும் சக்தி ஆரோபிக்கப்பட் டிருக்கின்றது. இங்ஙனம் ஆரோபிதமா யுள்ள சக்தியை அப்வாதம் செய்வது மேற்படி தாதுவிற் குப்பொருளாம். ஆரோபங்களின் அபவாதமே அவசிஷ்ட பரமாநந்த வடிவ மோக்ஷமாகும்; இது ஹ்ரீங்காரத்தின் லக்ஷ்யார்த்தமாம்.

ஹ்ரீம் நம: (99)

100. **ह्रींशरीरिणि**—ஹ்ரீங்காரமே சரீரமாகவுடையவள். மூல மந்த்ராத்மிக ஸ்வரூபமானவள் என்பது கருத்து.

ஹ்ரீம் ஶரீரிண்யை நம: (100)

101. **हकाररूपा**—வித்யையின் ஆருவது வர்ணமான ஹகாரத்தையே வடிவமாக யுடையவள்.

ஹகாரரூபாயை நம: (101)

102. **हलधृक्पूजिता**—கலப்பையை ஆயுதமாகத் தரித்துள்ள ஸ்ரீபலராமனுல் பூஜிக்கப்பட்டவள். பூஜையென்பது ஆராதனே, அர்ச்சனே, தியானம் முதலியனவாம்.

ஹலத்ருக்பூஜிதாயை நம: (102)

103. **हरिणेक्षणा**—பெண் மானின் கண்களைப் போன்ற சஞ்சலமானதும் விசாலமானதுமான கண்களை யுடையவள். அல்லது எங்கும், எப்போதும், எல்லாவற்றை யும் பார்ப்பவள் என்பதுமாகும். "உண்மைப் பக்தர்களுக்கு நிச்சயமாய் அருள் புரிகின்றேன்" என்னும் குறிப்பைத் தெரிவிக்கும் பார்வையோடு கூடினவளென்பது பாவார்த்த மாகும். ஹரிணேக்ஷணையை நம: (103)

104. **हरप्रिया**—சிவனுக்குப் பத்தினியாயிருப்பவள்; "**शंकरस्यापि शंकरी**" என்னும் பிரமாணத்தின்படி பரமசிவ னுடைய ப்ரேமைக்கு விஷயமாயிருப்பவள் எனினும் பொருந்தும். ஹரப்ரியாயை நம: (104)

105. **हराराध्या**—பரமசிவனால் ஆராதிப்பதற்கு உரிய வள் பரதேவதை; ஸச்சிதாநந்த ஸ்வரூபிணியாதலின்.
ஹராராத்யாயை நம: (105)

106. **हरिब्रह्मेन्द्रवन्दिता**—லக்ஷ்மீபதியாலும், வாணீபதி யாலும், தேவபதியாலும், மற்றுமுள்ள இதரதேவதைகளா லும் நமஸ்காரம் செய்யப்பட்டவள்.
ஹரிப்ரஹ்மேந்த்ரவந்திதாயைநம: (106)

107. **हयारूढासेविताङ्घ्रिः**—அஶ்வஸேனைக்கு மாத்திரம் அதிபதியாயும் வஶ்யத்தைச் செய்யும் சக்தியாயுமுள்ள அஶ் வாரூடையால் பூஜிக்கப்பட்ட பாதாரவிந்தங்களை உடைய வள். ஹயாரூடா ஸேவிதாங்க்ர்யை நம: (107)

108. **हयमेधसमर्चिता**—அஶ்வமேதமென்னும் சிறந்த யாகத்தினால் அர்ச்சிக்கப்படுபவள். இளைமுதலியவர்கள்

புருஷத்வத்தை யடைவதற்காக இந்த யாகத்தைச்செய்து அம்பாளை திருப்தி செய்வித்து விரும்பியபலனை அடைந்தனர். இக்கதை தேவீபாகவதத்தில் உள்ளது.

ஹயமேதஸமர்ச்சிதாயை நம: (108)

109. **हर्यक्षवाहना**—யாருக்கு ஸிம்மம் வாஹனமாக உள்ளதோ அவள்; அதாவது மஹாலக்ஷ்மீரூப துர்க்கை யாகும். ஹர்யக்ஷவாஹநாயை நம: (109)

110. **हंसवाहना**—ஹந்தி=செல்வது என்னும் பொருளினால் **हंस** என்பதற்கு ஸூர்யன் என்னும் அர்த்தம் ஏற்படுகின்றது; பிராணனென்றும் கூறலாம்; ஆதாரரூபமாயுள்ள வாஹனம்போல் ஸூர்யனும் பிராணனும் சித்சக்தியின் அபிவ்யக்தி (ஸாக்ஷாத்காரத்திற்கு)க்கு ஸ்தானமாய் இருக்கின்றனர். "**स यश्चायं पुरुषे । यश्चासावादित्ये । स एकः**" என்னும் ஶ்ருதிகள் இதற்குப் பிரமாணங்களாம். அல்லது அன்ன வாஹனத்தை யுடைய பிராஹ்மீஸ்வரூபமாய் விளங்குபவள்.

ஹம்ஸவாஹநாயை நம: (110)

111. **हतदानवा**—அநேகவிதமான சக்திகளையுடைய பண்டாஸுரன், பந்தகாஸுரன், சண்டமுண்ட, மஹிஷாஸுராதி அஸுரர்களைச் சம்ஹாரம் செய்தவள்.

ஹததாநவாயை நம: (111)

112. **हत्यादिपापशमनी**—பிரஹ்மஹத்தியை முதலாகவுடைய ஸகலபாபங்களையும் தணிக்கச்செய்பவள். "**हरिर्हरति पापानि**" என்பது வசனம்.

ஹத்யாதி பாபஶமந்யை நம: (112)

113. **हरिदश्वादिसेविता**—மரகதம்போன்ற பச்சைக் குதிரையையுடைய தேவேந்திரன், அக்னி, யமன் முதலிய அஷ்டதிக்பாலகர்களால் ஸேவிக்கப்பட்டவள். அதாவது அம்பாளின் சரணங்களின் ஸந்நிதியில் திக்பாலகர் அனே வரும் வேலைக்காரர்கள் போன்று கைகட்டி வாய்புதைத்துக் கொண்டு பரதேவதையின் கட்டளைக்கு எதிர்பார்த்திருக் கின்றனர் என்பது கருத்து.

ஹரிதஶ்வாதிஸேவிதாயை நம: (113)

114. **हस्तिकुम्भोत्तुङ्गकुचा**—யானையின் மஸ்தகம்போல் பருத்த ஸ்தனங்களையுடையவள்.

ஹஸ்திகும்போத்துங்ககுசாயை நம: (114)

115. **हस्तिकृत्तिप्रियाङ्गना**—யானைத்தோலில் பிரீதியை யுடைய பரமசிவனுக்குப் பார்யையாய் இருப்பவள்.

ஹஸ்திக்ருத்திப்ரியாங்க நாயை நம: (115)

116. **हरिद्राकुंकुमादिग्धा**—மஞ்சள், குங்குமம், குங்கு மப்பூ, கஸ்தூரி முதலியவற்றால் பூசப்பட்ட திருமேனியை யுடையவள்.

ஹரித்ராகுங்குமாதிக்தாயை நம: (116)

117. **हर्यश्वाद्यमरार्चिता**—தேவேந்திரன் முதலிய தே வர்களால் பூஜிக்கப்பட்டவள்.

ஹர்யஶ்வாத்யமரார்ச்சிதாயை நம: (117)

118. **हरिकेशसखी**—தங்கநிறமாயுள்ள ஜடைகளை யுடைய பரமசிவனுக்கு ஸகியாயிருப்பவள். '**हिरण्यश्मश्रु-र्हिरण्यकेशः**' என்பது ஶ்ருதி. **सखी** என்றால் யாதொரு

பிரயோஜனத்தையும் எதிர்பாராமல் உதவிசெய்பவள். அல்லது, விஷ்ணுவுக்குச் சமானமான நீலநிற கேசங்களை யுடைய ஸர்வாங்கஸுந்தரனும், என்றும் மாருத யௌவன புருஷனும், சித்ரூபனுமான காமேஸ்வரனுக்குச் சகியாயிருப்பவள்.

ஹரிகேஶஸக்யை நம: (118)

119. **हादिविद्या**—லோபாமுத்ரையென்னும் நாரீமணியால் உபாஸிக்கப்பட்ட வித்யா (மந்த்ர) ஸ்வரூபத்தையுடையவள்.

ஹாதி வித்யாயை நம: (119)

120. **हालामदालसा**—திருப்பாற்கடலைக் கடைந்தபோது உற்பவித்த வாருணியின் மதஉல்லாஸத்தினுல் (ஆநந்தத்தினுல்) ஏற்பட்ட சிறிது சிவந்த கடைக்கண், மயிர்ச்சிலிர்ப்பு முதலிய குறிகளையுடையவள்.

ஹாலாமதாலஸாயை நம: (120)

121. **सकाररूपा**—மஹாவித்யையின் இரண்டாவது கண்டத்தின் இரண்டாவது வர்ணத்தினுல் அறியப்படுபவள்.

ஸகார ரூபாயை நம: (121)

122. **सर्वज्ञा**—குறையாததும் நாசமாகாததுமான ஞானவிசேஷரூபத்தால் எல்லாவற்றையும் ஸதா அறிந்து கொண்டிருப்பவள். '**यः सर्वज्ञः सर्ववित्**' என்பது ஶ்ருதி.

ஸர்வக்ஞாயை நம: (122)

123. **सर्वेशी**—தான் அந்தர்யாமியாய் இருந்து கொண்டு எல்லாக் கார்யங்களையும் பிரேரேபிக்கின்றவள்.

ஸர்வேஶ்யை நம: (123)

124. **सर्वमङ्गला**—ஸ்வபாவமாயுள்ள சுத்தசைதன்ய ஸ்வரூபத்தினுல் எல்லாவகைகளிலும் மங்கள வடிவமாயுள்ள வள்; அல்லது, எல்லோருக்கும் மங்களமாயிருப்பவள். அல்லது, மூடர்களுங்கூடத் தியானம், கீர்த்தனம், பூஜை, நமஸ்காரம், அர்ச்சனை முதலிய பக்திகளைச்செய்து, பரதேவதையைத் திருப்திசெய்வித்து விரும்பிய ஸௌக்கத்தை அடைகிறார்கள் என்பது பிரஸித்தம். ஆதலின் அவர்களுக்குக் கூட மங்களவடிவமாயிருப்பவள். அல்லது, எல்லாப் பிராணிகளுக்கும் ஆத்மஸ்வரூபமாய் விளங்கும் காரணத்தால் ஆநந்தரூப மங்களவடிவமாய் இருப்பவள். அல்லது, ஸர்வசப்தம் ஜகத்காரணுன பரமேஸ்வரனைக் குறிப்பதனுல், பரமேஸ்வருக்கும் ஸௌக்கரூபமாய் விளங்குபவள். '**सच्चिन्मयः शिवः साक्षात्तस्यानन्दमयी शिवा**' என்பது ஶ்ருதி. அல்லது, மங்களம் என்னும் பதமானது மங்களகாரணமானஸ்திரீகளைக் குறிப்பதாகும். ஆதலின் எல்லாப் பிராணிகளுக்கும் மங்களத்தைச் செய்பவர்கள் ஸ்திரீகளேயாவர்; இந்தஸ்திரீகள் ஸச்சிதாநந்தவடிவ பரதேவதாஸ்வரூபிணிகள்; என்ருல், அம்பாள் ஸௌவாஸினிகளின் வடிவினள். **सुवासिन्यैनमः ।** என்பது லலிதாஸஹஸ்ர நாமம். ஆநந்தஸ்வரூபிணி என்பது கருத்து "**एतस्यैवानन्दस्यान्यानि भूतानि मात्रामुपजीवन्ति**" என்னும் ஶ்ருதி இதே அர்த்தத்தையே குறிக்கின்றது. **अशुभानि निराचष्टे तनोति शुभसंततिम् । स्मृतिमात्रेण यत्पुंसां ब्रह्म तन्मङ्गलं विदुः ॥ अतिकल्याणरूपत्वात् नित्यकल्याणसंश्रयात् । स्मर्तॄणां वरदत्वाच्च ब्रह्म तन्मङ्गलं विदुः ॥** என்னும் வசனங்களினுல் பிரஹ்மாபின்ன சித்சக்தியே மங்களஸ்வரூபம் என்றேற்படுகின்றது.

ஸர்வமங்களாயை நம: (124)

125. **सर्वकर्त्री**—பரதேவதை எல்லாவற்றையும் தனது மாயாசக்தியின் மூலமாய்ச் செய்கின்றனள். **ईशत ईशनीभिः ।** என்பது ஶ்ருதி. ஸர்வகர்த்ர்யை நம: (125)

126. **सर्वभर्त्री**—எல்லாவற்றையும் பரித்துப் பரிபாலிப்பவள். ஸர்வபர்த்ர்யை நம: (126)

127. **सर्वहन्त्री**—எல்லாவற்றையும் ஸம்ஹரிப்பவள். மேற்கூறிய மூன்று நாமங்களினுலும் பரதேவதையினிடத்தில், சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார க்ருத்தியங்கள் கூறப்பட்டன. "**यतो वा इमानि भूतानि जायन्ते**" என்பது இதற்கு ஶ்ருதி; இதனுல் தடஸ்தலக்ஷணம் கூறப்பட்டதென்று அறியவும்.
ஸர்வஹந்த்ர்யை நம: (127)

128. **सनातना**—"**अजोनित्यः शाश्वतोयं पुराणः**" என்னும் ஶ்ருதிப்பிரமாணப்படி, நித்திய ஸித்தமான ஸ்வரூபத்தையுடையவள். ஸநாதநாயை நம: (128)

129. **सर्वानवद्या**—அவத்யை என்பது ஞானமில்லாத மித்தியா ஜடப்ரக்ருதியாகும்; இது ஒருகாலத்தில் பாதிக்கப்படும் தன்மையது. இதற்கு விலக்ஷணமாய் ஸத்து சித்து ஆநந்தவடிவமாய்ப்பரதேவதை விளங்குவதால், அநவத்யையாகும். அல்லது, எல்லாருக்கும் அவரவர்கள் விரும்பிய பலத்தைத்தருவதனுல் அவர்களால் ஸ்தோத்திரம் செய்யப்படுபவள். ஸர்வாநவத்யாயை நம: (129)

130. **सर्वाङ्गसुन्दरी**—ஸாமுத்ரிகா லக்ஷணப்படி எல்லா அங்கங்களும் ஸௌந்தரமாக அமையப்பெற்றவள்; அல்லது எல்லாருடைய சரீரங்களிலும், அத்யந்த பிரேமைக்கு விஷய

மான ஸுந்தரமென்னும் ஆநந்தஸ்வரூப ஆத்மவடிவாய் இருப்பவள்.

ஸர்வாங்கஸுந்தர்யை நம: (130)

131. **सर्वसाक्षिणी**—கார்யமாயுள்ள எல்லா ஜடவஸ்துக்களுக்கும் ஸத்தாஸ்பூர்த்தியைத்தருதலால், அவை பிரகாசிக்கின்றன. **तस्य भासा सर्वमिदं विभाति** என்பது ஶ்ருதி; அல்லது, ஸர்வத்தையும் பற்றற்று நேரேபார்ப்பதால் பரதேவதை ஸர்வஸாக்ஷிணி.

ஸர்வஸாக்ஷிண்யை நம: (131)

132. **सर्वात्मिका**—எல்லாவற்றிற்கும் ஆத்மஸ்வரூபமாய் விளங்குபவள். **यच्चाप्नोति यदादत्ते यच्चात्ति विषयानिह । यच्चास्य संततो भावस्तस्मादात्मेति गीयते ॥** என்பது ஆத்மலக்ஷணம்.

ஸர்வாத்மிகாயை நம: (132)

133. **सर्वसौख्यदात्री**—பிரியம், மோதம், பிரமோதம், ஆநந்தம் என்று கூறப்படுவனவான ஸர்வஸுக பாவங்களேயும் அருளிச்செய்பவள். இச்சித்தபொருளேப் பார்ப்பதால் ஏற்படும் ஸுகத்திற்குப் பிரியம் என்றும், இச்சித்த அப்பொருளே யடைவதாலுண்டான ஸுகத்திற்கு மோதம் என்றும், அதை யநுபவிப்பதாலுண்டாகும் ஸுகத்திற்கு பிரமோதம் என்றும், இவைகள் எல்லாம் சேர்ந்த ஸமஷ்டிக்கு ஆநந்தம் என்றும் கூறப்படும். இவற்றை யநுபவிப்பவன் ஜீவன். பிரஹ்மாமுதல் புழு, புல் ஈருகவுள்ள ஸர்வப்பிராணிகளுக்கும் அவரவர்கள் செய்த கர்ம உபாஸனேகளுக்குத் தக்கபடி ஞானம் ஐஶ்வர்யம் முதலியவற்ருேடு கூடிய ஸர்வ ஸௌக்கியங்களேயும் தருபவள். "**एष ह्येवानन्दयाति**" என்பது ஶ்ருதி.

ஸர்வஸௌக்யதாத்ர்யை நம: (133)

134. **सर्वविमोहिनी**—எல்லாவற்றையும் மோகிக்கச் செய்பவள்; அல்லது, ஸர்வஜீவர்களுக்கும் விபரீத உணர்ச்சியைத் தருபவள்; கயிற்றில் தோன்றும் பாம்பு விபரீத உணர்ச்சியாகும். "**अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः**" "**अनृतेन हि प्रत्यूढाः**" என்பன இதற்குப் பிரமாணங்களாம். யதார்த்தமாய் உள்ள வஸ்துவை மறைத்து அதுவல்லாத மற்றொன்றாகக் காட்டுவது ஆவரண விக்ஷேபாத்மக அஞ்ஞான மாயினும், அது சித்சக்தியின் ஸத்தையை ஆஶ்ரயித்தே விளங்கவேண்டும். ஆதலின் அதிஷ்டானமான நோக்கத்தில் இங்ஙனம் கூறப்பட்டதென்று அறிதல் அவசியம். "**ज्ञानिनामपि चेतांसि देवी भगवती हि सा । बलादाकृष्यमोहाय महामाया-प्रयच्छति**" என்பது ஸ்ம்ருதி.

ஸர்வவிமோஹிந்யை நம: (134)

135. **सर्वाधारा**—"**ब्रह्म पुच्छं प्रतिष्टा**" என்னும் ஶ்ருதியின்படி எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் விளங்குபவள். உபாஸகர்களுக்கு உபாஸ்யமான ஸ்வரூபமானது பிரத்யக்ஷமாய்த்தோற்றும் ஸ்தானம் அவர்களின் ஹ்ருதயமேயாதலின் அதுவே ஆதாரமாம். என்றால், எல்லாஜீவர்களின் **दहराकाश** ஸ்வரூபமாய் விளங்குபவள்.

ஸர்வாதாராயை நம: (135)

136. **सर्वगता**—"**अनेन जीवेनात्मनानुप्रविश्य**" என்னும் ஶ்ருதிப்பிரமாணப்படி எல்லாவற்றிலும் அந்தர்யாமிஸ்வரூபிணியாய் வியாபித்திருப்பவள்.

ஸர்வகதாயை நம: (136)

137. **सर्वावगुणवर्जिता**—அவமானத்திற்கு ஹேதுவாகும் குணங்கள் அவகுணங்களாகும்; இவையற்றவள்

என்றால், நல்ல குணங்களோடு கூடியவளோ எனின், அல்ல. நிர்க்குணஸ்வரூப சித்சக்திக்கு ஸகுணங்களும் துர்க்குணங்களும் அவமானத்திற்கு ஹேதுவானவைகளேயாகும். ஸத்வம், காமம் முதலியவைகள் அந்தக்கரணத்தின் தர்மங்களாகும். இவைகள், ஆத்மஸ்வரூபத்தில் ஆரோபிக்கப்பட்டு ஆத்மஸத்தையினால் விளங்குகின்றன. பரதேவதையானவள் எல்லா ஆரோபிதப்பொருள்களிலும் அந்தர்யாமியாய் இருப்பினும், இக்குணங்களோடு ஒட்டுவதில்லை. கடத்திற்கும் அதனுள் இருக்கும் ஆகாசத்திற்கும் ஸம்பந்தம் உண்டா? **सूर्यो यथा सर्वलोकस्य चक्षुः न लिप्यते चाक्षुषैर्बाह्यदोषैः। एकस्तथा सर्वभूतान्तरात्मा न लिप्यते लोकदुःखेन बाह्यः**' என்னும் ஶ்ருதி இதற்குப்பிரமாணமாகும்.

ஸர்வாவகுணவர்ஜிதாயை நம: (137)

138. **सर्वारुणा**—“**असौ यस्ताम्रो अरुणः**” என்னும் ஶ்ருதிப்படி செந்நிறத்தோடு கூடியுள்ள எல்லா அங்கங்களையுமுடையவள்.

ஸர்வாருணாயை நம: (138)

139. **सर्वमाता**—கார்யரூபமாயுள்ள ஸர்வப்பிரபஞ்சத்தினால் ஊகித்து அபேதமாய் அறியத்தக்கவள். எங்ஙனமெனின், பிரத்யக்ஷமாய் அறியப்படும் இந்த உலகம் பிரஹ்மாபின்னம் (பிரஹ்மத்தினின்றும் பேதப்படாதது). பிரஹ்மஸத்தையில் தோன்றிப் பிரஹ்மஸத்தையின் பிரகாசஞானத்திற்கு விஷயமாயிருத்தலின். எது எதன் ஸத்தையில் தோன்றிப் பிரகாசிக்குந் தன்மையதோ, அது அதற்கு அபின்னமானது; நூலினது கார்யமான வஸ்திரம்போல ஸர்வத்தையும் தனக்கு அபின்னமாய் அறிபவள்.

ஸர்வமாத்ரே நம: (139)

140. **सर्वभूषणभूषिता**— பரதேவதை ஸர்வாத்மக ஸ்வ
ரூபிணியாதலின் எந்த எந்த பிராணிகள் எந்த எந்த பூஷ
ணங்கள், அலங்காரங்கள் முதலிய போக்கியவஸ்துக்களைச்
சம்பாதித்து, அவற்றை அநுபவித்தாலும், அந்த அநுபவம்
அப்பிராணிகளின் ஆத்மாவின் பொருட்டேயாகும். "**आत्म-
नस्तु कामाय सर्वं प्रियं भवति**" என்பது ஶ்ருதி. ஆதலின்
எல்லாம் பரதேவதையினுடையதே. அல்லது பக்தர்கள்
தங்கள் தங்கள் இஷ்டதேவதைக்குப் பலவித பூஷணங்
களால் அலங்காரம் செய்வித்தாலும் ஸகலதேவதாஸ்வ
ரூபிணியாகும் பரதேவதையையே அப்பூஷணலங்காரம் சே
ருகின்றது; அல்லது எல்லாத் தேசங்களிலும் எல்லாக்காலங்
களிலுமுள்ள எல்லாஜனங்களாலும் அணியப்பட்ட, சிறந்
தனவாயும் தாழ்ந்தனவாயுமுள்ள எல்லாநகைகளும், விருக்ஷ
பங்கள், யானைகள், குதிரைகள் முதலியவைகளுக்குச்
செய்யும் அலங்காரங்களும் பரதேவதையையேசேரும். அல்
லது, "**प्रज्ञानंब्रह्म**" '**अहं ब्रह्मास्मि**' முதலிய மஹாவாக்கியங்களே
பூஷணங்களாகும். அவை ஸர்வோத்தமமான அபய ஸ்வ
ரூபத்தைப் பிரதிபாதிப்பதால் மஹா ஞானிகளால் நன்கு
பூஷிக்கப் (போற்றப்)படுவனவாகும். இத்தகைய மஹாவாக்
கியங்களால் பிரதிபாதிக்கப்படுபவள். அதாவது லக்ஷணே
யால் ஸமன்வயம் செய்யப்படும் ஸ்வரூபத்தை யுடை
யவள் என்பது கருத்து.

ஸர்வபூஷணபூஷிதாயை நம: (140)

141. **ककारार्था**—"**कं ब्रह्म**" என்னும் ஶ்ருதிப்படி பிரஹ்
மஸ்வரூபமாய் இருக்கின்றவள்.

ககாரார்த்தாயை நம: (141)

142. **कालहन्त्री**—"**हंस हंसेतिमन्त्रेण जीवोजपति सर्वदा**" என்னும் வசனப்படி ஹம்ஸ: என்னும் அஜபாஸ்வரூபமானது சந்திர ஸூர்யர்களென்னும் பிராணுபான வாயுக்களால் ஒரு மனிதனுக்கு ஸூர்யோதயம் முதல் மறுநாள் ஸூர்யோதயம் வரையில் 21600 ஶ்வாஸங்களையுண்டாக்குகின்றது. ஶ்வாஸம் என்பது காற்றை உள்ளுக்கு இழுப்பதும் அதை வெளியே விடுவதுமாகும். இந்த ஶ்வாஸங்களால் தான் ஒரு மனிதனுடைய ஆயுளும் தீர்மானிக்கப்படுகின்றது. பிராணவாயுவை அதிகமாய் உள்ளுக்கு இழுப்பதினுல் ஆயுள் விருத்தியும், அதிகமாய் வெளியே விடுவதால் ஆயுள் க்ஷீணமும் ஏற்படுகின்றன. பிராணநிரோதம் செய்து கும்பகசக்தியை விருத்திசெய்வதால் ஆயுள் விருத்தியாகின்றது. இதனேடு ஸர்வ இந்திரியங்களும் சித்த வ்ருத்திகளும் லயமடைகின்றன. சித்த வ்ருத்திநிரோதமே மனேன்மனி அவஸ்தையென்று ஶாஸ்திரங்கள் கூறும். "**पृथिव्यप्तेजोऽनिलखे समुत्थिते पञ्चात्मके योगगुणे प्रवृत्ते । न तस्य रोगो न जरा न मृत्युः प्राप्तस्य योगाग्निमयं शरीरं ॥**" என்பது ஶ்ருதி. "**अध्यात्मयोगाधिगमेन देवं मत्वा धीरो हर्षशोकौ जहाति**" என்னும் பிரமாணப்படி, சித்த வ்ருத்தி நிரோதம் செய்தபின்னர் யுஞ்சானயோகியானவன் அத்யாத்மயோகத்தினுல் ஜீவப்பிரஹ்ம ஐக்கிய ஸாக்ஷாத்காரத்தைப்பெற்று ஸுகதுக்கங்களை ஜயித்த தீரனுகின்றுன்: இங்ஙனம் பிரஹ்ம ஸ்வரூப ஞானியினிடத்திலிருந்துதான், க்ரியாஶக்தி வடிவ காலத்தின் உத்பத்தி, ஶ்ருதிகளில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது "**ततः संवत्सरोऽजायत**" என்பது ஶ்ருதி. இங்ஙனம் எந்த பிரஹ்மஸ்வரூபத்திலிருந்து காலம் உத்பத்தியாயிற்ருே அங்கேயே அது (காலம்) லயமாகின்றது; அதாவது நாசத்தை அடைகின்றது. ஆதலின், பிரஹ்மாபின்ன சித்

சக்தியாகும் பரதேவதை காலத்தை நாசம் செய்பவள். அதாவது காலதத்வத்திற்கு அதீதமானவளென்பது கருத்து.

காலஹந்த்ர்யை நம: (142)

143. **कामेशी**—போக்கியபதார்த்தங்களை ஜீவர்களின் அத்ருஷ்டத்திற்கிணங்க அவரவர்களுக்கு அடைவிக்கும்படி பிரேரணைசெய்கிறவள். காமேஶ்யை நம: (143)

144. **कामितार्थदा**—ஜீவர்கள் விரும்பும் புருஷார்த்தங்களைத்தருபவள். ஸம்ஸாரதசையில் நிஜஸ்வபாவமான ஆநந்தம் அக்ஞானத்தினல் மறைபட்டிருக்கின்றது; இக்காரணத்தால் ஆநந்தம் தன்னிடத்தில் இல்லையென்று நினைத்துக் கொண்டு அத்தகைய ஆநந்தரூபமோக்ஷம் எனக்கு உண்டாகவேண்டுமென்று ஒவ்வொரு ஜீவனும் விரும்புகின்ருன். இந்த நித்யாநந்தஸ்வரூப மோக்ஷந்தான் காமிதார்த்தம். பரதேவதை வித்யாஸ்வரூபிணியாதலின், ஜீவர்களிடமுள்ள அவித்யையை நாசம் செய்வதன் மூலமாய், அவர்களால் விரும்பப்பட்ட ஆநந்தநிலையை அவர்கள் அடையும்படி செய்கிருள். அதாவது நித்திய ஸித்தமான பரமபுருஷார்த்த வடிவ நித்யாநந்த நிலையைப் புதிதாய் அடைவதுபோல் அடைவிக்கின்ருள். பிரகாச விமர்ச ஸாமரஸ்யமே இந்நிலையாகும் என்றறிதல் அவசியம்.

காமிதார்த்ததாயை நம: (144)

145. **कामसंजीवनी**—பரமேஶ்வரனுடைய நெற்றிக் கண்ணின் தழலால் எரிந்து சாம்பலானவனும், பின்னர் பண்டாசுரன் வடிவத்தால் அநேககாலம் தேவலோகத்திற்கு விரோதியாயிருந்தவனுமான மன்மதனைக் காமஶாஸ்திரப் பிர

யோக ஸமயத்தில், அவனுடைய பார்யையான ரதிதேவி யானவள் அம்பாளைப் பிரார்த்தித்துத் துதித்துத் தவமியற் றியபோது அம்பாள் தனது கருணாரஸம் ததும்பும் கடைக் கண்பார்வையால் அம்மன்மதனைப் பிழைப்பித்தனள். பிழைப் பித்தது மாத்திரமன்றி அநேக வரங்களையும் அவனுக்கு அருளி அவனைச்சந்தோஷிப்பித்தனள்.

காமஸஞ்ஜீவந்யை நம: (145)

146. **कल्या**—தியானிப்பதற்கு யோக்யமானவள்: பரதேவதை ஸர்வோத்தம தேவதாஸ்வரூப ஆத்மாபின்ன பிரஹ்மஸ்வரூபமா யிருப்பதால் அம்பாளைவிட வேறாகவுள்ள எந்தப்பொருளும், அநாத்மத்தன்மையால், தியானித்தற்கு ரியதாகாது. அல்லது, இக்கலியில் நினைத்ததையருளும் காமதேனு ஸ்வரூபமாயிருப்பவள்.

கல்யாயை நம: (146)

147. **कठिनस्तनमण्डला**—மிகவும் ஸ்திரமானவையும் கடினமானவையுமான ஸ்தனங்களை யுடையவள்.

கடினஸ்தனமண்டலாயை நம: (147)

148. **करभोरुः**—கரபம் போலுள்ள தொடைகளையுடைய வள்; என்றால், மணிக்கட்டு முதல் சுண்டுவிரல்வரைக்கும் உள்ள கையினுடைய வெளிப்பக்கத்திற்குக் கரபம் என்று பெயர். "**मणिबन्धादाकनिष्ठं करस्य करभो बहिः**" என்பது பிரமா ணம். இதனால் தொடையின் மேற்பாகம் பருத்துக் கீழே வரவரச் சிறுத்துள்ள தென்று ஸூசிக்கப்படுகின்றது.

கரபோரவே நம: (148)

149. **कलानाथमुखी**—அறுபத்திநான்கு கலைகளையும் பிரேரணைசெய்கிற வதனத்தோடு கூடியவள். 'निश्वसितमेत-दृग्वेदो यजुर्वेदः सामवेदः' 'शास्त्रयोनित्वात्'—என்னும் ஶ்ருதியும் ஸூத்திரமும் இதற்குப் பிரமாணங்களாகும். அல்லது கலா நாதனுன சந்திரன் போன்ற முகத்தை யுடையவள்.

கலாநாதமுக்யை நம: (149)

150. **कचजिताम्बुदा**—கருமைநிறத்தினுல் மேகத்தைப் பழிக்கும்படியான கேசபாரமாகும் கூந்தலையுடையவள்.

கசஜிதாம்புதாயை நம: (150)

151. **कटाक्षस्यन्दिकरुणा**—எல்லாவகைகளிலும் சிறந்த தேவதைகளுக்கு, எல்லாவற்றிலும் தாழ்ந்த ஸ்திதியிலுள்ள தீனர்களை ரக்ஷிக்கவேண்டு மென்றுள்ள எண்ணத்திற்குக் கருணையென்று பெயர். இது கண்ணுக்குப் புலப்படாத தோர் ஆந்தரமான பாவமாகும்; இது நவரஸங்களில் ஒன்று. ரஸம் என்னும் பதமானது மதுரம் (இனிப்பு) என்பதை ரூடியாகத் தெரிவிக்கின்றது. மதுரரஸம், (கருப்பஞ்சாற் றின்ருசி) அநுபவத்தினுல்தான் அறியமுடியும்; இங் ஙனமே இக்கருணுரஸமும் புன்முறுவல், இனிமையான ஸம்பாஷணை, கடைக்கண் பார்வை, களிப்போடு கூடிய முகக்குறி முதலியவற்ருல்தான் அறியமுடியும். எங்ஙனம் மதுரரஸமானது இக்ஷுரஸ வடிவ ஜலபதார்த்தமாகக் கூறப்பட்டதோ, அங்ஙனமே கருணையும் திரவ பதார்த்த மாகக் கூறப்பட்டது. **स्यंदिकरुणा** = வெள்ளம்போல் பெருகுங் கருணையோடு கூடிய **कटाक्षा** = கடைக்கண் பார்வையையுடை யவள்; என்ருல், கருணைப் பிரவாஹத்தோடு கூடிய கடைக் கண் பார்வையை யுடையவள் என்பதாகும்.

கடாக்ஷஸ்யந்திகருணயை நம: (151)

152. **कपालिप्राणनायिका**—கபாலத்தையுடையவர் கபாலி; இவரே ஆநந்த பைரவர். இவரது பஞ்சப்பிராணன்களுக்கும் அதிஷ்டானமாயுள்ளவள். " **न प्राणेन नापानेन मर्त्यो जीवति कश्चन। इतरेण तु जीवन्ति यस्मिन्नेतावुपाश्रितौ ॥** " என்பது ஶ்ருதி. ஆநந்த பைரவருடைய ஹ்ருதயத்திற்குள் இருக்கும் பரமேஶ்வரஸ்வரூபமாயுள்ளவள். கபாலியாகும் பரமேஶ்வரருடைய பிராணவல்லபையாகும் பிரியை என்பதும் பொருளாகும். கபாலிப்ராணநாயிகாயை நம: (152)

153. **कारुण्यविग्रहा**—காருண்ய மென்பது முன்னர் விவரிக்கபட்ட க்ருபையாகும்; அதாவது அந்தக்கரணத்தின் (**भावं**) பாவமாகும் காருண்யமே விக்ரஹமாகவுடையவள். பக்தர்களுக்கு வேண்டிய வரங்களை யருள்புரிதற்குச் சரீரம் அத்தியாவசியம் வேண்டப்படுகின்றதாதலின் அந்தக்கரண பரிணமமாகும் புத்தி வடிவமாகவும், கடைக்கண்பார்வை, புன்முறுவலோடு கூடிய வார்த்தைகள் முதலியவற்றால் ஊகித்தறியக்கூடியதாகவுமுள்ள கருணையே பரதேவதைக்குச் சரீரமாக விருக்கின்றது. மாயோபாதிக பிரஹ்மத்திற்கு, ஜகத்தைச் சிருஷ்டிச் செய்யும் தனது இச்சையே நிமித்தமாயும், கர்மாவிற்குக் கட்டுப்படாததாயும், ஸச்சிதாநந்த கனமாயும், அநுக்கிரஹிக்கவே ஏற்பட்டதாயு முள்ள ஒரு சரீரத்தை அவசியம் கற்பித்தல் வேண்டும். இத்தகைய சரீரத்தை ஒப்பாவிடில் ஸாதகர்கள் தியானிப்பதற்கு வழியில்லை. ஆதலின் ஸகுணோபாஸனைக்குப் பங்கமுண்டாகும்; ஸகுணோபாஸனைதான் நிர்க்குணோபாஸனைக்குச் சாதனம். ஆதலால் தான், தேவதாதிகரணத்தில், " **वज्रहस्तः पुरन्दरः** " இந்திரன் வஜ்ரத்தைக்கையில் உடையவன்: இது முதலிய ஶ்வப்பிரமா

ண ஶ்ருதிகளினுல், மந்த்ரங்களினுல் பிரகாசிக்கப்படும் தேவதைகளுக்குச் சரீரமுடைமையில் பாதகம் இல்லையென்பது அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. அன்றியும் "**बहुशोभमानामुमां हैमवतीम्**" என்னும் கேனேபநிஷத்தின் வாக்கியத்தின் பாஷ்யத்தில் "தங்கத்தினுற் செய்யப்பட்ட ஆபரணங்களையுடைய உமை, அல்லது ஹிமவானுடைய புத்திரியாகும் உமை, மிகவும் பிரகாசத்தையுடையவள்" என்று கூறப்பட்டிருக்கின்றது. இதனுல் பரதேவதைக்குப் பிரகாசமே சரீரமாய் அமைந்திருப்பது பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. எங்ஙனமெனின், மஹாநுபாவர்களும், ஸ்வப்பிரகாச சைதன்ய வடிவினரும், எல்லாவகைகளிலும் சிறந்தவர்களும் அக்கினி, வாயு, இந்திரன் முதலிய தேவர்களும் தியானித்தற் பொருட்டு சரீரம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. இதனுல் அநீஶ்வர வாதிகளின் பிரஸங்கத்திற்குக் கொஞ்சங்கூட இடமில்லை.

காருண்யவிக்ரஹாயை நம: (153)

154. **कान्ता—कन दीप्तौ** என்னும் தாதுவினுல் பரதேவதை மிகவும் பிரகாசத்தோடு கூடிய மனேஹரவடிவத்தையுடையவள் என்று பொருள்படுகின்றது. அல்லது, மன்மதனைப்போன்ற அழகுவாய்ந்த கோபாலகிருஷ்ண வடிவத்தையுடையவள் என்றுங் கூறலாம். "**कदाचिदाद्या ललिता पुंरूपा कृष्णविग्रहा । वंशनादविनोदेन करोति विवशं जगत् ॥**" "ஒருகாலத்தில் ஆதிஶக்தியாகும் லலிதாதேவி, புருஷரூபமான கிருஷ்ணவடிவத்தைத்தாங்கி வேணுநாதஞ்செய்து ஸர்வப்பிரபஞ்சத்தையும் பரவசமாக்கினுள்" என்று திரிபுராதாபனீயத்தில் கூறப்படுவதிங்கு அறியத்தக்கது.

காந்தாயை நம: (154)

155. **कान्तिधूतजपावलिः**—பரதேவதையின் தேஹ காந்தியினுல் செம்பருத்தம் பூவின் கூட்டங்களும், மற்றும் உபலக்ஷணமாய்ச் சிவப்பு நிறமுள்ள இதர புஷ்பங்களின் கூட்டங்களும் தோற்கப்பட்டவையாகின்றன. என்ருல், சிவப்புநிறப் புஷ்பங்களைவிட பரதேவதையின் தேககாந்தி சிறப்புள்ளதென்பது கருத்து. பரதேவதையின் சரீரம் சிவப்பு நிறமுடையதென்பது **हरिगोपारूणांशुका, आरक्तवर्णा, जपापुष्पनिभाकृतिः, दाडिमीकुसुमप्रभा, बंधूककुसुमप्रख्या**, என்னும் ஸஹஸ்ரநாம வசனங்களால், ஏற்படுகின்றது. பரதேவதையின் செம்மைநிறம் ஆத்மகோசர அகண்டாகார வ்ருத்தியை ஸூசிப்பிக்கின்றது. காந்தியென்பது அப்ராக்ருதமாயும், ஸ்வயம் பிரகாசமாயும், ஆநந்தகனமாயு முள்ள விமர்சமாகும். ஜபாகுஸுமம், பூமாதுளைப்புஷ்பம், பந்தூக புஷ்பம் முதலிய சிவப்புநிறப் புஷ்பங்கள் ஜடப்பிரகாசமுள்ள ஸூர்யன் சந்திரன் - நக்ஷத்திரங்கள்-அக்கினி - மின்னல்-மனம் முதலிய வஸ்துக்களைக்குறிக்கின்றன. இவைகள் பிரக்ருதிப் பொருள்கள் ஆதலின் அற்பகாந்தியோடு கூடியனவாகுமென்பது ரஹஸ்யமாம்.

காந்திதூதஜபாவல்யை நம: (155)

156. **कलालापा**—அறுபத்திநான்கு கலைகளாகும் வித்யைகளையும் பரவச்செய்பவள். "**वेदाशास्त्रमयी वाणी यस्याः सा परदेवता**" என்னும் வசனம் இதற்குப் பிரமாணமாம். அல்லது, பிரயோஜனத்தோடும் புன்முறுவலோடுங் கூடிய ஸல்லாப வசனங்களையுடையவள் என்றும் ஆம்.

கலாலாபாயை நம: (156)

157. **कम्बुकण्ठी**—கம்பு என்பது சங்கத்திலுள்ள மூன்று ரேகைகளாகும். இத்தகைய மூன்று ரேகைகளோடு கூடிய கண்டத்தை யுடையவளென்பது பொருள். பரதேவதையின் கழுத்தைப் பேதித்துக்கொண்டு பிரணவம் வெளிப்பட்டதென்பது ஶாஸ்திரங்களில் மிகப்பிரஸித்தமாம். கழுத்து சங்கம்போன்றதென்று கூறப்பட்டது. சங்கமும் கழுத்தும் முறையே த்வனியையும், பிரணவத்தையும் வெளிப்படுத்தலால் உபமான உபமேயங்களாகக் கூறப்பட்டன. சங்கத்தின் அடியில் மூன்று ரேகைகளைப்போல் கழுத்திலும் உள்ள மூன்று ரேகைகள் அகார, உகார, மகாரங்களை யாவது, வைகரீ-மத்யமை-பஶ்யந்தீ வாக்குகளையாவது ஸூசிப்பிக்கின்றதென்று கூறத்தகும்.

கம்புகண்ட்யை நம: (157)

158. **करनिर्जितपल्लवा**—தனது உள்ளங்கைகளால் ஜயிக்கப்பட்ட இளந்தளிர்களையுடையவள்; அதாவது மினுமினுப்பாயும், ம்ருதுவாயும், சிவப்பாயும் உள்ள இளந்தளிர்களைவிடப் பரதேவதையின் உள்ளங்கைகள் பன்மடங்கு அதிகமான ம்ருதுத்துவம், வழவழப்பு, செம்மை முதலிய குணங்களோடு கூடியவை யென்பதாம்.

கரநிர்ஜிதபல்லவாயை நம: (158)

159. **कल्पवल्लीसमभुजा**—தேவேந்திரனது நந்தனோத்தியானத்தில் உள்ள தைவவிருக்ஷங்களில் ஒன்று கற்பவிருக்ஷமாம். இவ்விருக்ஷத்தின்மேல் படர்ந்துள்ள கொடிகளால் இவற்றின் அழகு அதிகரிக்கும். இக்கொடிகளுக்குச் சமானமாகவுள்ள புஜங்களையுடையவள் என்பது பொருளாகும். ஸ்திரீகளின் கைகளைக் கற்பகக்கொடிகளுக்குச்

சமானமாய்க் கூறுவது கவிகளது ஸம்பிரதாயமாகும். இங்கே "ஸம" என்னும் பதம் உபயோகிக்கப்பட்டிருத்தலால் கைகளுங்கூட அவற்றின் (கைகளின்) அதிஷ்டான சைதன்யமாகும் பரதேவதையைப் போல், ஜீவர்களுக்கு அவரவர்களின் பிராரப்தாநுஸாரமாய்ப் பயனை யுண்டுபண்ணுகின்றனவென்பது தொனிக்கின்றது. "एकस्तथा सर्वभूतान्तरात्मा रूपं रूपं प्रतिरूपो बहिश्च" என்னும் ஶ்ருதியினலும் "तत्तदेवावगच्छ त्वं मम तेजोंशसंभवम्" என்னும் ஸ்ம்ருதியினலும் மேற்கூறிய அர்த்தம் பொருத்தமாகின்றது. பரதேவதையின் கைகளுக்கு ஸாம்யம் கூறுவதற்கு இல்லை யென்னு மெண்ணத்தை நீக்க, ஸோபாதிக சைதன்யத் தோடு நிருபாதிக சைதன்யத்திற்கு ஒப்புமை கூறப்பட்டது.

கல்பவல்லீஸமபுஜாயை நம: (159)

160. **कस्तूरीतिलकाञ्चिता** —பரதேவதையானவள் தனது நெற்றித்தடத்தில் கஸ்தூரிப் பொட்டை அணிந்துள்ளவள் என்பதாம்.

கஸ்தூரீதிலகாஞ்சிதாயை நம: (160)

161. **हकारार्था**—ஆகாச பீஜமாகும் "ஹ" காரத்தின் அர்த்த ரூபமாய் விளங்குபவள். அதிஷ்டான ஸ்வரூப சைதன்யத்திற்கு அர்த்தமென்று பொருள். ஆதலின் ஆகாச பூதத்திற்கு அதிஷ்டானமாய் விளங்குபவள் என்பது கருத்து. "आकाशोह वै नाम नामरूपयोर्निर्वहिता ते यदन्तरा तद्ब्रह्म" என்பது ஶ்ருதி.

ஹகாரார்த்தாயை நம: (161)

162. **हंसगतिः**—ஜீவர்களின் பிராணஸஞ்சாரத்திற்கு ஹம்ஸமென்று பெயர். 'हकारेण बहिर्याति सकारेण पुनर्विशेत्'

என்னும் வசனத்தின்படி பாஹ்ய ஸஞ்சாரத்தினுல் ஹகார முமு் ஆந்தரப் பிரவேசத்தினுல் ஸகாரமும் ஏற்பட்டு "அஜபை" என்னும் ஒரு மந்த்ரஸ்வரூபமாகின்றது. இதுதான் ஆத்மமந்த்ரமும். இம்மந்த்ரவடிவாய் விளங்குபவள்.

அல்லது, ஹகார-ஸகாரங்களின் அபிமானி தேவதைகளாகும் அக்நீஷோமாத்மக ஸூர்ய சந்திரர்களின் கதிகளாகும் பகல், இரவுவடிவ காலரூபமாய் விளங்குபவள்.

அல்லது, செய்யப்பட்ட புண்ணிய பாபங்களுக்குத் தக்கபடி உயர்ந்ததும் தாழ்ந்ததுமான தேகங்களை யடையும் ஜீவர்கள் ஹம்ஸ: என்பதற்குப் பொருளாகும். கதி: = முடிவில் அடையும் இடம், மோக்ஷம்; ஆகவே ஜீவர்களுக்கு மோக்ஷரூபமாய் விளங்குபவள். "ब्रह्मविदाप्नोतिपरम्" "यद्गत्वा न निवर्तन्ते" என்னும் ஶ்ருதி ஸ்ம்ருதிகள் இதற்குப் பிரமாணங்களாம்.

அல்லது, தன்னுல் சிருஷ்டிக்கப்பட்ட கார்யவடிவப் பிரபஞ்சத்தில் பிரவேசித்த லென்பது "ஹம்ஸ:" என்பதன் பொருளாகும். **हंसस्तु परमेश्वरः**—பரமேஶ்வரனையே சரணமாய் அடைதல் சரணுகதியாகும். (1) ஆர்த்தர் (2) அர்த்தங்களை யிச்சிப்பவர் (3) ஜிக்ஞாஸு (4) ஞானியென்பவர்கள் நான்குவித பக்தர்கள்; இவர்களால் அடையப்படுபவள். பரமேஶ்வர வடிவமாயும் ஸர்வஶரண்யையாயும் விளங்குபவளென்பது திரண்ட பொருளாம். हंसः शुचिषत् ஶ்ருதி.

அல்லது, நான்முகப்பிரஹ்மனது வாஹநமாகும் ஹம்ஸத்தைப்போன்ற நடையை யுடையவள்.

அல்லது, பாதச்சிலம்புகளோடு கூடிய திருவடிகளையுடையவள்.

அல்லது, நித்தியாநித்திய, ஜடசேதன, ஸாராஸாராதி விவேகத்தோடு கூடி, ஒரு இடத்திலும் நிலையாய் நிற்காமல் ஸஞ்சாரம் செய்யும் ஸந்நியாஸிகள் என்பது ஹம்ஸா: என்பதன் அர்த்தமாகும். அவர்களால், அபரோக்ஷமாய் அறியப்படும் ஆத்மாபின்ன ஸ்வரூபிணி என்பது சிறந்தபொருளாம். "**सन्यासयोगाद्यतयः शुद्धसत्वाः**" என்பது ப்ருதி. "**ये पूर्वं देवा ऋषयश्च तद्विदुः ते तन्मया अमृता वैबभूवुः**" என்னும் பிரமாணத்தின்படி ஜீவன்முக்த புருஷர்களின் அநுபவைக வேத்யமான பரமாநந்த வடிவ முக்திஸ்வரூபிணியே பரதேவதையாவள் என்பது கருத்து.

ஹம்ஸகத்யை நம: (162)

163. **हाटकाभरणोज्ज्वला**—தங்கத்தினுற் செய்த ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவள்.

அல்லது, ஹாடகம் என்னும் ஹிரண்யம் பிரஹ்மாண்ட மென்னும் பொருளுடையதாகும்; பிரஹ்மாண்டத்திற்கு அலங்காரவடிவ ஆபரண ரூபமாய் இருப்பவள்; என்றால் பிரஹ்மாண்டத்திற்கு ஸத்தாஸ்பூர்த்தியைத் தருபவள்; ஸர்வப்பிரபஞ்ச அதிஷ்டான ரூபிணியாதலின்.

அல்லது, திருமங்கலியம் முதலிய தங்க ஆபரணங்களையணிந்துள்ள ஸுவாஸினிகளின் மத்தியில் பிரகாசிப்பவள்.

அல்லது, காரணரூப தன் ஸ்வரூபத்தையும், காரிய வடிவ ஆபரணுதி போக்கியங்களையும் பிரகாசிப்பிக்கச் செய்பவள். "**वसुरन्तरिक्षसत्**" என்னும் ப்ருதி இங்கு அறியத் தக்கது.

ஹாடகாபரணேஜ்வலாயை நம: (163)

164. **हारहारिकुचाभोगा**—ஈஶ்வரத்துவம்-ஆப்த காமத்துவம்-ஸர்வக்ஞத்துவம் முதலிய ஹர (பரமேஶ்வர) ஸம்பந்திகளுக்கு ஹாரா: என்று பெயர். இவற்றிற்கு விபரீதமாயுள்ள அவித்யை முதலியவற்றால் மேற்கூறிய ஈஶ்வர தர்மங்களை அபகரிக்கும் தன்மையோடு கூடிய ஸ்தனமண்டலங்களை யுடையவள் என்பது பொருள். ஆபோகம்= சுற்றளவோடு கூடிய மண்டலம். பரமேஶ்வரன் அம்பாளுடைய குசமண்டலங்களைப் பார்த்து, அவற்றில் பற்றிய மன முடையவனாய் அப்பற்றுக்குக்காரணமான அவித்யா விருத்தியினால், தனது ஈஶ்வரத்துவம் ஆப்தகாமத்துவம் முதலிய வற்றையும், வசீக்ருதமாயிகத்தன்மையையும் மறக்கின்றான். இங்ஙனம் பரமேஶ்வரனையே மோஹிக்கச் செய்யும் ஆற்றலுடைய ஸ்தனங்களோடு கூடியவள் என்பது திரண்ட பொருளாகும். இது அம்பாளுடைய ஸ்தனங்களை வர்ணிக்க எற்பட்ட உத்ப்ரேக்ஷாலங்காரமாகும்.

அல்லது, முத்துமாலை (ஹாரங்)களால் அலங்கரிக்கப்பட்டு, விளங்கும் ஸ்தன மண்டலங்களையுடையவளென்பதும் ஆம்.

ஹாரஹாரிகுசாபோகாயை நம: (164)

165. **हाकिनी**—ஜனன மரணங்களை நசிப்பிக்கின்றவள்; அதாவது பிறப்பும் இறப்பும் இல்லாத நித்யாநந்த வாழ்வை யளிப்பவள் என்பது பொருள்.

ஹாகின்யை நம: (165)

166. **हल्यवर्जिता**—கிருஷிமுதலியவற்றால் உண்டாகும் பயன் ஹல்யம் என்று கூறப்படும். இவைகள் அநித்தி

யமானவை; அநித்தியமான கர்ம பலன்களை யற்றவளாய்ச் சுத்த சைதன்யஸ்வரூபமாய் விளங்குபவள் என்று பொருள். ஹல்யம் என்பது கபடம்; இது ஒன்றை மறைத்து மற்றொன்றைக் கூறுதலாகும். கபடத்திற் சிறந்தது அவித்யை. இது அற்றவள்; அதாவது தத்துவம் பத லக்ஷ்யரூபமாய் விளங்குபவள். ஹல்யவர்ஜிதாயை நம: (166)

167. **हरित्पतिसमाराध्या**—ஹரித் என்னும் திக்குகளுக்குப் பதிகளான தேவேந்திரன் முதலிய அஷ்டதிக்பாலகர்களாலும் நன்கு ஆராதிக்கத்தகுந்தவள். தமக்கு எதிரிகளான அஸுரர்களைக்கொன்று தமக்கு வேண்டியவற்றை யெல்லாம் அருள்புரியும் தேவியாதலின் பரதேவதையே, இந்திராதி திக்பாலகர்களின் ஆராதனைக்கு உரியவளாகும்.

ஹரித்பதிஸமாராத்யாயை நம: (167)

168. **हठात्कारहतासुरा**—மஹிஷன்-பண்டன் முதலிய அஸுரர்களை அதி சீக்கிரமாய்க் கொன்றவள். உலகத்தில், ஸமபலமுடைய எதிரிகளுக்குத்தான், ஸாம-தான-பேத-தண்டங்கள், தன்பலம் எதிரிபலம் இவற்றையூன்றியறிதல் முதலியன அத்தியாவசியமாக ஏற்பட்டுள்ளன. பலபராக்கிரமங்களில் சிறந்த ஒருவன், துர்ப்பலமான எதிரியை ஒரு சிங்கமானது ஆட்டுக்குட்டியை யாதொரு யோசனையு மின்றி அதிசீக்கிரத்தில் கொன்று விடுதல் போல, வெகுசுலபமாய்க் கொல்லக்கூடு மென்பதில் என்ன ஆக்ஷேபம்?

ஹடாத்காரஹதாஸுராயை நம: (168)

169. **हर्षप्रदा**—முகவிலாஸம் முதலிய சின்னங்களால் ஊகிக்கத்தக்க ஆநந்தகாரகமும், ஸ்வயநலத்திற்காக

இதரர்களை வருத்தி அதனால் அவர்களின் துக்ககாரணமு மாகும் மனோவ்ருத்திவிசேஷத்திற்கு "ஹர்ஷம்" என்று பெயர். கார்ய காரணங்களுக்கு அவிநாபாவ ஸம்பந்த முண்மையின், காரணமாகும் ஸுகத்தைத் தருபவள் என்று பொருள்.

அல்லது, ப்ராரப்தாநுஸாரியாய்ப் புத்திரன்-பார்யை-பந்துக்கள் முதலானவர்களால், ஒருவனது தனம், யௌவனம் முதலியவற்றை அபகரிக்கின்றவள். प्रारब्धं भोगतो नश्येत् என்பது நியாயமாதலின்.

ஹர்ஷப்ரதாயை நம: (169)

170. हविर्भोक्त्री—"स ब्रह्मा स शिवः स हरिः सेन्द्रः सोऽक्षरः परमः स्वराट्" என்னும் ஶ்ருதிப்படி பரதேவதையே வஸு, ருத்ர, ஆதித்ய வடிவங்கொண்டு, யாகத்தில் யஜமானனால் அக்னியில் ஸ்வாஹாகாரத்தால் ஹோமம் செய்யப்பட்ட ஹவிஸ்ஸை புஜிக்கின்றவள் என்பது பொருள்.

அல்லது, கர்த்ருத்வ புத்தியோடு செய்யும் கர்மாக்களின் யஜமானனாகும் ஜீவனது அந்தக்கரணத்தில் அதிஸூக்ஷ்மமாயும், பின் காலாந்தரத்தில் பலன் தருவதற்கு நிமித்தமான அத்ருஷ்டம் என்னும் பெயர் பெற்றதுமாயும், வியஷ்டி ஈஶ்வர உபாதியாகும் மாயாஸ்வரூபமாயும் ஸமஷ்டி ஜீவ உபாதியாகும் அவித்யா வடிவமாயுமுள்ள அதிஸூக்ஷ்மமான ஒன்று ஹவிஸ் என்பதாகும். இதைப் பரதேவதை, ஜீவர்களின் முத்தி பரியந்தம் பரிபாலிக்கின்றனள். இங்ஙனம் அநாதியாய்ப் பரதேவதையால் பரிபாலிக்கப்பட்ட அதிஸூக்ஷ்மமான "ஹவிஸ்" என்னும் ஒன்றையங்கீகரிக்காமற்போனால் ஸம்ஸாரம் அநாதி யென்பது பொருந்தாது.

அதனுல் ஆதியான ஒரு சரீரத்தை யங்கீகரிக்க நேரும்; நேரவே பிரபஞ்சம் அகஸ்மாத்தாய்ச் சிருஷ்டிக்கப்பட்டதென்பதும் அக்ருதாப்யாகமம் அதாவது முன்னர் செய்யப்படாததான கர்மங்களின் பயனை அநுபவித்தலும், க்ருதநாசமும் அதாவது செய்த கர்மங்கள் பயனைத் தராமலே நாசமடைதலுமான தோஷங்கள் ஏற்படும்.

ஹவிர்ப்போக்த்ர்யை நம: (170)

171. **हार्दसंतमसपहा**—ஹ்ருதயத்தை அவச்சேதமாகவுடையது ஹார்த்தமெனப்படும். "**यो वेद निहितं गुहायाम्**" என்பது ஶ்ருதிப் பிரமாணமாம். ஹ்ருதயமாகும் குஹைக்குள், அதை ஆஶ்ரயித்ததாயுள்ளதும், "**तम आसीत्**" என்னும் ஶ்ருதிப்படி ஆத்மஸ்வரூபத்தை விஷயஞ்செய்வதாயும், அநர்த்தத்தை யுண்டுபண்ணக்கூடியதாயும், அவ்யாக்ருத ஆகாசம் என்னும் பெயரைப் பெற்றதாயுமான அக்ஞானமே ஹார்த்த ஸந்தமஸ் எனப்படும். இதை மஹாவாக்கிய ஶ்ரவணத்தினுல் உண்டான புத்திவ்ருத்தியில் அதாவது அகண்டாகாரவ்ருத்தியினுல் நிவர்த்திப்பவள் என்பது பொருள். **नाऽहं ब्रह्मास्मि संसरि ब्रह्म नास्ति न भाति च**-நான் பிரஹ்மமல்ல; ஸம்ஸாரிதான்; பிரஹ்மம் என்பது இல்லவே இல்லை; விளங்குவதுமில்லை; என்பது அக்ஞானமாம். **सोऽहं-ब्रह्मास्मि-सच्चिदानन्दलक्षणः**—அதுவே நான் நான் பிரஹ்மமாயிருக்கிறேன்; நான் ஸச்சிதாநந்த லக்ஷணமுடையவன்" என்னும் அகண்டாகாரவ்ருத்தியினுல் முற்கூறிய அக்ஞானம் நாசமாகின்றது. இத்தகைய அக்ஞான நிவர்த்தக அகண்டாகார வ்ருத்திக்கு அதிஷ்டானமாயுள்ளவள் பரதேதையாகும் என்பது தெளிந்த பொருளாம். "**नेह नाना**" இங்கு நாநா (பல) வென்பது இல்லை என்னும் ஶ்ருதி ஸித்தமான பிரஹ்மரூபிணி என்பது கருத்து.

ஹார்த்தஸந்தமஸபஹாயை நம: (171)

172. **ह्लीसलास्यसंतुष्टा**—ஹல்லீஸம் என்பது பெண்களின் கோலாட்டம். லாஸ்யம் என்பது ஆட்டம்; அதாவது, விசித்திரமான கோலாட்டக் கோல்களை வைத்துக்கொண்டு, ஒரே தாளத்தோடு கூடிய பாட்டுக்களோடு ஆடும் பெண்களின் ஒருவகை நிருத்தியம். இதனால் ஸந்தோஷப்படுபவள். இந்த நிருத்தியம் மண்டலாகாரமாய் செய்யப்படுவதாகும்.

ஹல்லீஸலாஸ்ய ஸந்துஷ்டாயை நம: (172)

173. **हंसमन्त्रार्थरूपिणी**—பரமஹம்ஸர்களால் உபாஸிக்கத்தக்க மந்த்ரமாகும் பிரணவத்தின் தத்வார்த்தஸ்வரூபிணி யென்பது பொருள்; பிரணவத்தின் வாச்யார்த்த ஸ்வரூபமாயும் லக்ஷ்யார்த்த ஸ்வரூபமாயும் விளங்குபவள். அல்லது, ஹம்ஸமென்னும் அஜபாமந்த்ரத்தின் அர்த்தமாய்ப் பிரகாசிப்பவளென்றும் பொருள் செய்யலாம். அஜபையில் "ஹ" காரம் தத்பதத்தையும் "ஸ" காரம் துவம் பதத்தையும் குறிக்கின்றன. தத்பதவாச்சியனை ஈஶ்வரன் பரோக்ஷன். துவம்பதவாச்சியனுகும் ஜீவன் நித்திய அபரோக்ஷன். தத்துவம் பதங்களின் ஸ்வரூப் ஹம்ஸ : என்னும் மந்த்ரத்தைப் பாகத்தியாக (ஜஹதஜஹல்) லக்ஷணையால் சோதிக்கின் நிஷ்பிரபஞ்ச நித்திய சுத்த முக்த புத்த ஸச்சிதாநந்தஸ்வரூபம் விளங்கும். இங்ஙனம் விளங்குபவள் என்பது கருத்தாம்.

ஹம்ஸமந்த்ரார்த்தரூபிண்யை நம : (173)

174. **हानोपादानिर्मुक्ता**—அநிஷ்ட (பிரதிகூல) ஸாதனங்களில் வெறுப்பும், இஷ்டஸாதனங்ளில் விருப்பும், முறையே ஹாநம்-உபாதானம் என்று கூறப்படும்; விருப்

பும் வெறுப்பும் அற்றவள் என்பது பொருள். விருப்பும் வெறுப்பும் அந்தக்கரணத்தின் தர்மங்களாம். "अप्राणो ह्यमनाः शुभ्रः" "अकायम्" "अशरीरं वाव सन्तं न प्रियाप्रिये स्पृशतः" என்னும் ஶ்ருதிகளால் பரதேவதைக்குச் சரீரமே இல்லை யென்று ஸித்திக்கின்றது. ஆதலின் அந்தக்கரணமும் இல்லை; அந்தக்கரணவிருத்திகளும் இல்லை; அன்றியும் எந்த சித்தவிருத்தியில் விருப்பும் வெறுப்பும் இருக்கின்றனவோ அம்மனத்தில் பரதேவதை விளங்குவதில்லை யென்பதும் ஊகமாம்.

ஹாநோபாதாநநிர்முக்தாயை நம: (174)

175. **हर्षिणी**—"**एष ह्येवानन्दयाति**" என்னும் ஶ்ருதிப்பிரமாணத்தின்படி ஸகலபிராணிகளையும் ஸந்தோஷிப்பிக்கின்றவள். பரதேவதையின் ஸ்வரூபம் ஆனந்தகனமாதலின்;

ஹர்ஷிண்யை நம: (175)

176. **हरिसोदरी**—கிருஷ்ணனுக்கு உடன் பிறந்தவள்; கிருஷ்ணபகவானுக்கும் பரதேவதைக்கும் உள்ள பேதம் மிகவும் சொல்பமானதாகும். அதிக அல்பமாயும் மித்தையே வடிவமாயுமுள்ள மாயையை உபாதியாகவுடைய சைதன்ய விசேஷ காரணேஶ்வர ஸ்வரூபமாகவுடையவள். "**अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम्। जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत्**" '**देवात्म शक्तिं स्वगुणैर्निगूढाम्**' என்னும் ஸ்ம்ருதி, ஶ்ருதி வசனங்களால் ஈஶ்வரனுடைய ரூபபேதங்கள்யாவும் பரதேவதையே என்பது ஸித்திக்கின்றன.

ஹரிஸோதர்யை நம: (176)

177. **हाहाहूहूमुखस्तुत्या**—கந்தர்வர்களில் ஶ்ரேஷ்டர்களான ஹாஹா ஹூஹூ என்பவர்களால் துதிக்கப் படுப

வள். ஸ்துதியென்ருல், குணியினிடத்துள்ள குணங்களை வர்ணிப்பதாகும்.

ஹாஹாஹூஹூ முகஸ்துத்யாயை நம : (177)

178. **हानिवृद्धिविवर्जिता**—அவயங்களின் வளர்ச்சிக்கு வ்ருத்தி (**वृद्धि**) என்றும், அவற்றின் தேய்வுக்கு ஹாநியென்றும் பெயர். வளர்தலும் தேய்தலும் அற்றவள் பரதேவதை. '**न कर्मणा वर्धते नो कनीयान्**' என்பது ஶ்ருதி. ஷட்பாவ விகாரங்களையும் இங்கே உபலக்ஷணமாய்க் கொள்ளுதல் அவசியம். ஷட்பாவ விகாரங்கள் கர்ம நிமித்தமாய்ச் சரீர தர்மமாய் ஏற்படுகின்றனவாதலின் அசரீரியாயும் நைஷ்கர்ம்ய மாயுமுள்ள பரதேவதைக்குப் பாவாதி விகாரங்கள் கிடையா. அதனல் நிர்விகாரியென்பது கருத்து.

ஹாநிவ்ருத்திவிவர்ஜிதாயை நம : (178)

179. **हय्यङ्गवीनहृदया**—நவநீதம் (வெண்ணெய்) போல் மிகவும் மிருதுவாயும், இலேசாய் உருகும் ஸ்வபாவமாயுமுள்ள ஹ்ருதயத்தில் ஸ்புரிப்பவள். ஜீவகாருண்ய முடைமையால் ஞானிகளின் ஹ்ருதயம் மிருதுவாயும் ஸுலபமாய் உருகும் தன்மையதாயுமுள்ளது. இத்தகைய ஹ்ருதயத்தில் கருணுரஸ ஸ்வரூபியாய் விளங்குபவள்; மிருதுவான ஹ்ருதயத்தையுடையவளெனினும் பொருந்தும். ஸர்வப்பிராணிகளும் பரதேவதை வடிவமாதலின் எல்லாவற்றின் ஹருதயமாய் விளங்குபவள்.

ஹய்யங்கவீநஹ்ருதயாயை நம : (179)

180. **हरिगोपारुणांशुका**—இந்திர கோபப் புழுவைப் போன்று மிகவும் செம்மையான வஸ்திரத்தையுடையவள்;

அல்லது, சிவந்த காந்தியையுண்டயவளென்பது அர்த்தமாம். இந்திரகோபமென்பது ஸூர்யன் திருவாதிரை-மகம் என்னும் நக்ஷத்திரங்களில் ஸஞ்சரிக்கும்போது பெய்யும் மழையினுலுண்டாகும் ஒருவகைப் புழு. இது எட்டுபாதங்களோடும், மிருதுவான சரீரத்தோடும், செம்மையான நிறத்தோடுங்கூடியதாம்.

ஹரிகோபாருணம்ஶுகாயை நம: (180)

181 **लकाराख्या**—லகாரத்தோடு கூடிய மூலவித்யையின் வாச்சிய ரூபமாய் விளங்குபவள். லகாரமென்பது இந்திர பீஜமாகும். **सेन्द्रः सोक्षरः परमस्वराट्** என்பது ஶ்ருதி. இந்திரன் முதலிய தேவர்களின் நாமரூபங்களுக்கு அதிஷ்டானமாய் விளங்குபவள். அல்லது, லகாரத்தோடு கூடிய மாயாபீஜமாகும் ஹ்ரீங்காரவாச்சியமாய் விளங்கி மாயையைத் தனக்குள் அடக்கிவைத்திருப்பவள் எனினுமாம்.

லகாராக்யாயை நம: (181)

182. **लतापूज्या**—சிறந்த பதிவிரதைகளான அருந்ததி முதலான ஸ்திரீகளால், தங்களுடைய மாங்கல்யம் நித்தியமாய் நிலைத்து விளங்குவதற்காக இஷ்டதேவதா ரூபமாய் பூஜிக்கப்படுபவள்; '**समाराध्य महेशानीं भुक्तिं मुक्तिं च विन्दति**' என்பது பிரமாணமாம்.

அல்லது, கேதாராதிகளில், கௌரீ முதலிய விசேஷ மூர்த்திகள் வடிவாய், கொடிகள்-தளிர்கள் முதலிய காட்டிலுண்டாகும் (வன்னிய) வஸ்துக்களைக் கொண்டு பூஜிக்கப்படுபவள். சபரீ, வனதுர்க்கை முதலியன காட்டில் விளங்கும் பரதேவதா ரூபங்களாகும். இத்தேவதா மூர்த்திகள் காட்டுப் புஷ்பங்கள், கொடிகள், இலை, தளிர், வேர் முதலிய

வற்றால் பூஜிப்பதனால் திருப்தி யடைகிறார்களென்பது புரா ணாதிகளில் மிகப்பிரஸித்தமாம்.

லதாபூஜ்யாயை நம : (182)

183. **लयस्थित्युद्भवेश्वरी**—காணப்படும் இக்கார்ய ரூபப் பிரபஞ்சத்தின் லயம்-ஸ்திதி-உத்பவம் இவைகளுக்குக் காரணமான ஈஶ்வரியாய் விளங்குபவள்; உத்பவம்-ஸ்திதி-லயம் என்று ஸாதாரணமாய்க் கூறுவது சாஸ்த்ரீய வழக்கமெனினும், இங்கே தலைகீழாய்க் கூறப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது. கார்யவடிவமாய்த் தோற்றுவதற்கு உத்பவமென்றும், அறிதற்கு விஷயமாய் அநுபவஸத்தையோடு கூடிய காலவிசேஷத்திற்கு ஸ்திதியென்றும், தோற்றிய காரியம் தோற்றுவாயாகுங் காரணவடிவாய் விளங்குவது லயமென்றும் சாஸ்திரம் கூறும். எங்ஙனம் குடம் முதலிய கார்யங்களில், குலாலன் முதலிய சேதனர்களின் நிமித்தம் காணப்படுகின்றதோ, அங்ஙனமே, அசேதனமாகும் பிரபஞ்ச கார்யமும் ஒரு சேதனமாகும் நிமித்தமின்றி ஸம்பவிக்காது. இத்தகைய நிமித்த காரணன், ஒருவனா? அல்லது ஒரு கோபுரங்கட்டுவதற்குப் பல சிற்பிகள் நிமித்தர்களாதல் போல ஜகத்ரூப கார்யத்திற்குப் பல நிமித்தகாரணர்களா? என்னும் சங்கை நிகழக்கூடும். இதற்குச் சமாதானமாவது :—“**यतो वा इमानि भूतानि जायन्ते**” என்னும் ஶ்ருதிப்படி “இந்தபூதங்கள் எந்த ஒன்றிலிருந்து உண்டாயிற்றோ” என்று ஒருமையில் கூறப்பட்டிருப்பதனால் நிமித்தகாரணனும் ஈஶ்வரன் ஒருவனேயாவன். எங்ஙனம் கார்ய கடமானது மண்ணிலிருந்து உண்டாய், மண்ணிலேயே ஸ்திதியை அடைந்து அம்மண்ணிலேயே லயத்தையும் அடைவதால் அக்கார்யமா

கும் கடத்திற்கு அம்மண் உபாதான காரணமாகின்றதோ அங்ஙனமே கார்யமாகும் பிரபஞ்சமும் ஈஶ்வரனிடத்திலிருந்து உண்டாய் அவனிடத்திலேயே நிலைபெற்று அவனிடத்திலேயே லயத்தையடைவதால் அவனே உபாதான காரணமுமாகும். எந்தக் காரியத்திற்கும் எது லயஸ்தானமோ அதுதான் அதற்கு உபாதான காரணமாகும் என்பது நியாயம். இதைக்குறிப்பிக்கவே முதலில் லயத்தை ஸூசனை செய்யப்பட்டது என்றறிதல் அவஶ்யம். உபாதானகாரணம் கார்யத்திற்கு அபின்ன மென்பது பிரஸித்தமே; ஆயினும் நிமித்த காரணன் கார்யத்தைவிட பின்னனே; கட, குலாலாதிகளைப் போல; எனின் இங்ஙனமன்று; கார்யாபின்ன நிமித்த காரணமும் உண்டென்பது,எட்டுக்கால் பூச்சியும் வலையும் போலப் பிரஸித்தமே. ஆதலின் ஈஶ்வரனே கார்யமாகும் இப்பிரபஞ்சத்திற்கு அபின்னநிமித்தோபாதான காரணனாகும் என்பது ஸித்தித்தது; இந்தப் பிரபஞ்சமானது அநாதி; இல்லாத பிரபஞ்சம் உண்டாகவில்லை; ஆனால் லயித்த பிரபஞ்சமே உண்டாயிற்று என்று அறிவுறுத்துதற்கும் "லயம்" என்னும் பதம் முன் கூறப்பட்டது எனினும் பொருந்தும். இப்பிரபஞ்சம் சிருஷ்டிப்பதற்கு முன் **"सदेव सोम्येदमग्र आसीत्"** என்னும் ஶ்ருதிப்படி ஸத்தா மாத்ரமாய் இருந்தது. இதோடு உபலக்ஷணமாய்ச் சித்தாயும் ஆநந்தமாயுமுள்ள பரதேவதையே இருந்தனள் என்று ஸித்திக்கின்றது; ஆதலின் கூடஸ்த சைதன்யமாத்ர அஸ்திபாதிப்ரிய ஸ்வரூப பரதேவதையானவள் அஸ்திபாதிப்ரிய நாமரூப வடிவப் பிரபஞ்சத்திற்கு அபின்னநிமித்தோபாதான விவர்த்தகாரணமாயிருக்கின்றனள் என்பது பரமஸித்தாந்தமாகும்.

லயஸ்தித்யுத்பவேஶ்வர்யை நம: (183)

184. **लास्यदर्शनसंतुष्टा**—எங்ஙனம் ஒருராஜனுனவன், எல்லாக்காமனைகளையும் அடைந்துள்ள தன்மையால் யாதொரு பிரயோஜனத்தையுங்கருதாது வேட்டையாடுதல், குழந்தைகளின் ஆட்டம் முதலிய லீலைகளைப்பார்த்து மகிழ்வானோ, அங்ஙனமே பரதேவதையானவள், அக்ஞர்கள், இஷ்டம்-அநிஷ்டம்-மிஶ்ரம்-உதாஸீனம் என்னும் நான்கு வித விஷயங்களை அநுபவிப்பதால் உண்டாகும் ஸந்தோஷம்-துக்கம் முதலியவற்ருல் ஏற்படக்கூடிய முகவேற்றுமைகள்-கைகால் முதலிய அங்க சேஷ்டைகள்-அபிநயங்கள் முதலியவற்ரோடு கூடிய ஆட்டத்தைப் பார்த்துச் சந்தோஷிக்கின்றனள். இங்ஙனம் ஸந்தோஷித்து அவரவர்களின் கர்மாக்களுக்குத்தக்க பலன்களையருளும் ஈஶ்வரியாதலின் பரதேவதை யாவரிடத்தும் ஸமபாவ முடையவளேயாகும். **नादत्ते कस्यचित्पापं न चैव सुकृतं विभुः** என்பது பகவத் வசனம். அல்லது, ரம்பை, ஊர்வசி முதலிய தேவதாஸ்திரீகளாலும், தேவரடியாரான ஸ்திரீகளாலும், தாளத்தோடும், ஸங்கீதத்தோடும் செய்யப்பட்ட பரதநாட்டியத்தைப் பார்த்துச் சந்தோஷப்படுபவள்; கருணமூர்த்தியாதலின்.

லாஸ்யதர்ஶந ஸந்துஷ்டாயை நம: (184)

185. **लाभालाभविवर्जिता**—கிடைக்காத பொருளின் அடைவிற்கு லாபமென்றும், ஒருபொருளைப் பெற எல்லாவகைகளிலும் முயற்சித்தும் அது கிடைக்காமைக்கு அலாபமென்றும் கூறப்படும். இவை இரண்டும் அற்றவள். எல்லாம் அடையப்பட்டதன்மையால் நித்திய திருப்தியோடு கூடியவளாதலின். “**न मे पार्थास्ति कर्तव्यं त्रिषुलोकेषु किंचन**” என்பது கீதாவசனம்.

லாபாலாபவிவர்ஜிதாயை நம: (185)

186. **लङ्घ्येतराज्ञा**—தான் ஜீவன் என்னும் மயக்கமுடையவர்களுக்கு அந்நிய, அதாவது தன்னைவிட வேறான, குணமூர்த்திகளை உபாஸிக்கவும், இஹத்திலும் பரத்திலும் விஷய ஸுகங்களையநுப்வித்தற்குச் சாதனமான லௌகிக வைதிக கர்மங்களைச் செய்யவும் விதிக்கப்பட்டிருக்கின்றன. இத்தகைய விதிகளுக்கு ஆக்ஞையென்று பெயர். பரதேவதையாகும் சித்சக்தி சுத்தசைதன்ய ஸ்வரூபிணியாதலின் நித்தியம், நைமித்திகம், காம்யம், பிராயஶ்சித்தம் முதலிய கர்மாக்களாலும், பேதகுண உபாஸனையாலும், அடையக்கூடாதவள்; விதிக்கு விஷயமாகுந்தன்மை ஸச்சிதாநந்த வியாபக சைதன்யத்திற்குக் கூடாதாதலின். அல்லது, "सर्वस्याधिपतिः सर्वस्येशानः" என்னும் ஶ்ருதிப்படி பரதேவதை எல்லாவற்றிற்கும் அதிபதியாயும், நாயகியாயும், நியந்தாவாயும் இருப்பதால் தன்னைக் கட்டளையிடுபவர் யாவருமில்லை; பிரஹ்மா விஷ்ணு முதலிய தேவர்களுங்கூட மீறமுடியாத ஆக்ஞையைத்தருபவள் பரதேவதை யென்று பொருளாகக் கூடிய '**सर्वानुल्लङ्घ्यशासना**' என்னும் ஸஹஸ்ரநாமம் இங்கு கவனிக்கத் தக்கது. லங்க்யேதராக்ஞாயை நம: (186)

187. **लावण्यशालिनी**—பரமாநந்த ஸ்வரூபிணியாதலின் அத்யந்தப் பிரீதிக்கு விஷயமான அழகோடு கூடியவள். ஸௌந்தர்யம் சரீரம் முழுமையும் வியாபித்து விளங்குகின்றதென்பது பொருள்.

லாவண்யஶாலிந்யை நம: (187)

188. **लघुसिद्धिदा**—மிகு ஸுலபமாய்த் தன் பக்தர்கள் வேண்டும் இஷ்டஸித்திகளைத் தருபவள். அல்லது, லகிமா முதலிய அஷ்டஸித்திகளையும் அருளிச்செய்பவள்; அல்லது,

அற்பமான, ஞானம், பாக்கியம், சரீரம், ரூபம் (வடிவம்), முதலியவற்ருேடு கூடிய மிகவும் தாழ்ந்த ஜந்துக்களுக்கும் பாரமார்த்திக ரூபமான ஸித்தியை அதாவது மோக்ஷத்தைத் தருதற்குச் சாதனமான தத்துவஞானம் முதலியவற்றையும் அவற்றின் காரியமான மஹிமைகளேயும் தருபவள்.

லகுஸித்திதாயை நம: (188)

189. **लक्षारससवर्णाभा**—செவ்வரக்குக் குழம்பிற்குச் சமானமான நிறத்தோடுகூடிய சரீரகாந்தியை யுடையவள்; அதாவது நல்ல சிவப்பான மேனியையுடையவளென்பது கருத்து. லாக்ஷாரஸஸவர்ணுபாயை நம: (189)

190. **लक्ष्मणाग्रजपूजिता**—முன்னே பிறந்தவர்களுக்கு அக்ரஜர் என்று பெயர்; லக்ஷ்மணனுக்கு முன்பிறந்தவர்கள் இராமனும் பரதனுமாவர். லக்ஷ்மணனும் சத்ருக்னனுங்கூட, யாவரினும் ஜ்யேஷ்டனுன இராமனது ஆசாரத்தைக் கடைப்பிடித்து ஒழுகுபவராதலின், தாசரதிகள் நால்வராலும் பூஜிக்கப்பட்டவள். " சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தவன் இராமன் " என்பது பிரஸித்தமாதலின் சிவனையும் சிவாவையும் பூஜித்தல் உசிதமேயாகும். இதனுல் சிவதம்பதிகளின் பூஜை இராமனது வம்சத்திற்கே ஸித்தித்திருப்பது த்வனிக்கின்றது.

லக்ஷ்மணுக்ரஜபூஜிதாயை நம: (190)

191. **लभ्येतरा**—விசேஷரூப கர்மாக்களாலும் உபாஸனைகளாலும் ஸித்திக்கக் கூடிய பலரூபமானது அடைவு அல்லது லப்பிய மென்று கூறப்படும். இவற்றைக்காட்டிலும் வேருக (விலக்ஷணமாக) உள்ளவள் பரதேவதையா

கும்; இங்ஙனம் கூறுவதால் கர்மோபாஸனைகளுக்குப் பல மாகாதவள் பரதேவதை யென்பது ஸித்திக்கின்றது. "तत्सत्यं स आत्मा" "नित्यो नित्यानां चेतनश्चेतनानां एको बहूनां यो विदधाति कामान्। तमात्मस्थम्" "यत्साक्षादपरोक्षाद्ब्रह्म" என்னும் ஶ்ருதிகளின்படி, ஆத்மஸ்வரூப பரதேவதை நித்தியப்பிராப்தம்; அதாவது எப்பொழுதும் அடையப்பட்டுள்ள தன்மையுடையவள் என்றேற்படுகின்றது. கழுத்திலேயுள்ள முத்தாரம் எங்கேயோ காணுமென்று தேடி அயர்ந்து ஆப்தனுல் தன் கழுத்திலேயே உள்ளதென்று அறிந்த காலத்தில் அந்த ஹாரம் புதிதாய் அடையப்பட்டதாகக் கருதுதல் மயக்கமேயாகும். அது, காணுமேயென்று மறந்து தேடுங்காலத்துங்கூடத் தன் கழுத்திலேயே நித்தியப்பிராப்தமாய் இருக்கின்றது. இங்ஙனமே பரதேவதாஸ்வரூப ஆத்மாவும் நித்திய ஸித்தமாயிருக்கின்றது. அறிவால் விமர்சிக்கப்படுவது நித்திய ஸித்த பிரஹ்மாபின்ன ஆத்மஸ்வரூப பரதேவதையேயாகும்; இதுதான் மோக்ஷஸ்வரூபம். ஸ்தூல ஸூக்ஷ்மங்களாகும் கர்மோபாஸனைகளால் பெறக்கூடிய பலன்கள் நான்கு வகையாகும். அவை உற்பத்தி நாசங்கள், அடைவு (ஆப்பியம்), விகாரம், ஸம்ஸ்காரம் என்பனவாம். கமன (நடத்தல்) ரூப கர்மத்தினுல் ஒருகிராமத்தின் அடைவும், பாக (சமையல்) ரூப கர்மத்தினுல் அன்னத்தின் விகாரமும், வஸ்திரத்தைத் தோய்த்தல் ரூபகர்மத்தினுல் வஸ்திரத்திலுள்ள அழுக்கு நீங்குதல் ரூப ஸம்ஸ்காரமும் உண்டாகின்றன.

மோக்ஷரூப பரதேவதாஸ்வரூபம் நித்திய ஸித்தமாய் இருக்கின்றதாதலின் உற்பத்தி இல்லை; நித்தியமாதலின் நாசமும் கிடையாது. வியாபகமாதலின் அடைதல் தொழிலுக்கு விஷயமல்ல. அவிகாரியாதலின் விகாரியன்று. அஸ

ங்கம், அமலம், நிரஞ்சனமாதலின் ஸம்ஸ்காரத்திற்கும் விஷயமாகாது என்பது திரண்டபொருளாம்.

அல்லது, தர்மம், அர்த்தம், காமம் என்னும் த்ரிவர்க் கங்களாகும் ஐஹிக-ஆமுஷ்மிகபலன்கள் எந்த பரதேவதை யினின்றும் ஸாதகர்கள் பெறுகின்றார்களோ அவள்.

லப்யேதராயை நம: (191)

192. **लब्धभक्तिसुलभा**—ஸாமான்யம், விசேஷம் என்று பக்தி இரண்டு வகைப்படும். முதலாவதான ஸாமான்ய பக்தி, ஆர்த்தன், ஜிக்ஞாஸு, அர்த்தார்த்தி என்னும் மூன்று அதிகாரிகளாலும் செய்யப்படுவதாகும். ஆர்த்தன் தனது ரோகம், கஷ்டம் முதலியவை நீங்குவதற்காகவும், ஜிக்ஞா ஸு பரமேஶ்வரனை அறிதற்காகவும், அர்த்தார்த்தி தனம், பூமி முதலியவற்றை யடைதற்காகவும் பக்தி செய்கின்று ராதலின் அந்த பக்தி ஸாமான்யமானது; மேற்கூறிய பக் தர்களுக்கு, அவரவர்களது பிராரப்தத்தை யநுஸரித்து அவரவர் வேண்டும் பலன்களை அருளுபவள்; இரண்டாவ தாகும் விசேஷ ரூபபக்தியோவெனின் பிரஹ்மஸாக்ஷாத் காரமுடைய ஞானிகளால் செய்யப்படுவதாகும். அதனுல் அநந்யமாய் அடையப்படுபவள். **'एकभक्तिर्विशिष्यते'** என்பது ஸ்ம்ருதி. அத்தகைய அநந்யபக்திக்கு ஸுலபையானவள்; ஸ்வாத்மரூபமாகவே ஸதா அறியப்படுபவளாதலின். **'ज्ञानी त्वात्मैव मे मतम्'** என்பது கீதாவசனம்.

அல்லது, ஸுகமாயும், யாதொரு கஷ்டமுமின்றி மிகச்சுலபமாய்ப் பராபக்தியால் அடையப்படுபவள். பரா பக்தியென்பது பிறழ்ச்சியின்றிய அநந்யபக்தியாகும். கண்

ட (கழு)த்திலுள்ள சாமீகர நியாயம்போல் நித்யஸித்தமா யுள்ள ஸ்வஸ்வரூபாநுஸந்தானமாகும் பரா பக்தியால் மிகச் சுலபமாய் ஸாக்ஷாத்காரமாகக் கூடியவள். **'भक्त्या मामभिजानाति'** என்பது ஸ்ம்ருதிவாக்கியம்.

லப்தபக்திஸுலபாயை நம: (192)

193. **लाङ्गलायुधा**—கலப்பையை ஆயுதமாக வுடையவள்; ஆதிசேஷ ஸ்வரூபிணி. **"अनन्तश्चास्मि नागानाम्"** என்பது பகவத் வசனம்.

லாங்கலாயுதாயை நம: (193)

194. **लग्नचामरहस्तश्रीशारदापरिवीजिता**—கைகளில் பிடித்துக்கொண்டிருக்கின்ற சாமரங்களோடு கூடியவர்களான லக்ஷ்மியாலும் ஸரஸ்வதியாலும் வீசப்பட்டவள்; அநாதிகாலம் முதல் திருமகளாலும் நாமகளாலும் சாமரை வீசும் பணிவிடையின் மூலமாய் உபாஸிக்கப்படுபவள்.

லக்னசாமரஹஸ்தஸ்ரீஸாரதாபரிவீஜிதாயை நம: (194)

195. **लज्जापदसमाराध्या**—லஜ்ஜையென்பது அந்தக்கரணத்தின் தர்மமாகும். ஜுகுப்ஸைக்கு ஹேதுவான குணம். இதனால் உபலக்ஷணமாய் எல்லாமனோதர்மங்களையுங் கொள்ளல் வேண்டும். லஜ்ஜை முதலிய மனோதர்மங்களுக்கு ஆஶ்ரயமாகிய அந்தக்கரணத்தினால் அதாவது சுத்தஸத்வப் பிரதான அந்தர்முக மனத்தினால் நன்கு ஆராதிக்கப்படுபவள்; என்றால், அநுஸந்தானம் செய்யப்படுபவள். காமம், ஸங்கல்பம், விசிகித்ஸை, ஶ்ரத்தை, அஶ்ரத்தை, த்ருதி:, அத்ருதி:, ஹ்ரீ:, தீ:, பீ:, முதலியவை அந்தக்கரண தர்மங்களாகும். இவற்றில் ஹ்ரீ: என்பது லஜ்ஜையாகும். இவற்றால் நன்கு சிந்திக்கப்படுபவள். **"य आत्मनि तिष्ठन्नन्तरो यम-**

यति'' ''गुहाहितं गह्वरेष्टं पुराणम्'' ''तमात्मस्थं येऽनुपश्यन्ति धीराः'' என்னும் ஶ்ருதி வாக்கியங்கள் இதற்குப் பிரமாணங்களாம்.

அல்லது, லஜ்ஜாபதம் ஜீவசக்ரம். அதில், அதன் அதிஷ்டானஸ்வரூப ஆநந்தத்தின் அபிவியக்தியின் பொருட்டு, பஹிர்யாகக்கிரமத்தின்படி பூஜிக்கத் தகுந்தவள்.

லஜ்ஜாபதஸமாராத்யாயை நம: (195)

196. **लंपटा**—'' லம் '' என்னும் ப்ரித்வீ பீஜத்தினல் ஜகத்து உபலக்ஷிக்கப்படுகின்றது ; '' பட '' என்னும் பதத்தினல், ஆவரிக்கும் அதாவது மறைக்கும் தன்மைத்தான அவித்தை கொள்ளப்படுகின்றது. ஆகவே லம்படா என்பது ஜகத்தை மறைக்கின்ற அக்ஞானத்தைத் தன்வசமாய் வைத்துக் கொண்டுள்ளவள் என்னும் அர்த்தமுடையதாகின்றது. ''मायिनं तु महेश्वरं'' ''य एको जालवान्'' என்பது ஶ்ருதிப் பிரமாணங்கள். अज्ञानेनावृतं ज्ञानम्'' என்பது ஸ்ம்ருதி.

அல்லது, லம்பட: என்பது ஆலஸ்யமாம் ; ஜீவர்கள் சிறந்ததாயுள்ள கர்மங்களேயும் உபாஸனைகளேயும் செய்தாலும், அவர்களுக்குப் பலதடைகளுள்ள காரணத்தினுல், பரமேஶ்வரன் சீக்கிரமாய்ப் பலன் தருதற்குத் தயாராயிருப்பதில்லே. இங்ஙனம் பரமேஶ்வரனைப் பலன் தருவதில் ஆலஸ்யம் செய்விப்பவள் பரதேவதையேயாம்.

லம்படை முதலிய அந்தக்கரணதர்மங்களேயும் அந்தக்கரணஅவச்சின்னசைதன்யத்தில் அத்தியாஸ வசத்தினுல் தோன்றும் ஸத்துவ ரஜஸ் தமோகுணங்களின் காரியங்களேயும் தோற்றுவிப்பதற்கு ஆதாரபூதமாயுள்ளவள்.

லம்படாயை நம: (196)

197. **लकुलेश्वरी**—**कुः** என்னும் ப்ரிதிவீ பீஜத்தினல் உபலக்ஷிதமான ஜகத்தானது எங்கே லயமாகின்றதோ அது குலம் என்பதாகும். அது பிரளயத்திற்கு அதிஷ்டானமும் மாயையை உபாதியாகவுடையதுமான சைதன்யமே. "**यत्प्रयन्त्यभिसंविशन्ति**" என்பது ஶ்ருதி. மாயை ஒருகாலத்தில் லயமாதற்குரியது. மாயோபாதிகத்துவம், நிருபாதிக சைதன்யத்தில் லயமாகுந் தன்மையது. ஆதலின் அது லகுலம். நிருபாதிகஸ்வரூப லகுலமாயும் ஈஶ்வரியாயுமுள்ளவள்.

அல்லது, லகுலமென்பது ஒரு ஸ்தான விசேஷமாகும்; அது ஸ்வாதிஷ்டானமோ அல்லது, மணிபூரகமோ ஆம்; அதற்கு ஈஶ்வரி; விஷ்ணு அல்லது ருத்திரஸ்வரூபிணி என்பது பொருள். பூதசிருஷ்டியைக் கூறும் ஶ்ருதிகளில், ப்ரிதிவீ ஜலத்திலும் ஜலம் தேஜஸ்ஸிலும், தேஜஸ் பரமாத்மாவிலும் லயமாவதைக் கேழ்க்கப்படுவதால், அவை **सदायतनाः सत्प्रतिष्ठाः** ஸத்தையே இருப்பிடமாயும், ஸத்திலேயே நிலை பெற்று விளங்குவனவாயும் இருக்கின்றன; அத்தகைய ஸத்ரூப ஈஶ்வரமஹிமை அல்லது விபூதியையுடையவள்.

லகுலேஶ்வர்யை நம: (197)

198. **लब्धमाना**—"**अभिमानात्मकस्तद्वदहंकारः प्रकीर्त्यते**" என்னும் ஸ்ம்ருதி வசனப்படி, தானல்லாத ஒன்றில் தானென்னும் மயக்கபுத்தியே அஹங்காரம் அல்லது அபிமானமெனப்படும்; ஸர்வப் பிராணிகளும் இந்த அத்தியஸ்த அபிமானத்தோடு கூடியவர்களேயாவர். இத்தகைய அத்தியஸ்த அஹங்காரத்திற்கு அதிஷ்டானமாய் விளங்குபவள்.

அல்லது, "**मान पूजायाम्**" என்னும் வசனத்தின்படி மானம் என்பது பூஜ்யதை யெனப்படும். பூஜ்யதை யென்பது வித்தை, ஐஶ்வர்யம், உயர்ந்தகுலம், அழகு முதலிய வற்றின் ஆதிக்கியத்தால் ஏற்படுவதாகும். இதரர்கள் தன்னைக் கௌரவிப்பதனால் ஜீவர்களுக்கு மகிழ்ச்சி யுண்டாகின்றது. இத்தகைய ஸுகஹேதுவாகிய மானம், ஆனந்தமே வடிவமாயுள்ள பரதேவதைக்கு ஸ்வபாவமாயும் ஸ்வதஸ்ஸித்தமாயுமிருக்கின்றது.

அல்லது, மானம் என்பது பரிமாணமெனப்படும். அது அணு-மஹத்து, தீர்க்கம் (நெடில்)-ஹ்ரஸ்வம் (குறில்) என்னும் பேதத்தினால் வழங்கப்படுவதாகும். "**स वा एष महानज आत्मा महान् प्रभुर्वै पुरुषः ; अणोरणीयान् महतो महीयान्**" என்னும் ஶ்ருதிப் பிரமாணங்களின்படி எங்ஙனம் ஸூர்யன், ஜலோபாதியில் பிரதிபிம்பித்தகாரணத்தால், அப்பரிமாணத்தை யுடையவன்போற் காணப்படுகின்றானோ, அங்ஙனமே பரிமாணங்களுக் கதீதமான சித்சக்தியானது யானை, புழு, கொசுகு, பாம்பு முதலியவற்றில் அந்தர்யாமியாய் இருக்குங் காரணத்தால் அவற்றின் எல்லாவித பரிமாணங்களையும் அடைந்தவளாயிருக்கின்றனள் என்பதாம்.

லப்தமாநாயை நம: (198)

199. **लब्धरसा**—"**रसो वै सः**" என்னும் உபநிஷத் வாக்கியப்படி ரஸம் என்பது பரமப்ரேமைக்கு விஷயமான ஆநந்தம் எனப்படும்; இதைத்தனது ஸ்வரூபமாகவே யுடையவள். அல்லது, ரஸம் என்பது நவரஸங்களிற் சிறந்ததான சிருங்கார ரஸத்தைக் குறிப்பதாகுமெனினும் பொருந்தும்; சிருங்கார ரஸத்தை யுண்டாக்கி அதைப் போஷிக்கும் ஆபரணங்

கள், புஷ்பாலங்காரம்; வாஸனைச்சந்தனப்பூச்சு முதலிய மங்களப் பொருள்களை நித்தியஸித்தமாய் அடைந்துள்ளவள் என்பது கருத்து.

அல்லது, "रस्याः स्निग्धा स्थिरा हृद्या आहाराः सात्विकप्रियाः" என்னும் கீதாவசனத்தின்படி, பரதேவதை சுத்த ஸத்துவப் பிரதான மாயோபாதியை உடைமையால், ஸத்துவாஹார மாகிய மதுர ரஸத்தை எப்பொழுதும் அடைந்துள்ளவள். தேவதைகளுக்குக் கசப்பு, காரம், உவர்ப்பு முதலிய ரஸமுள்ள பண்டங்களை நைவேத்தியம் செய்யக்கூடாதென்பது பிரஸித்தமாம்.

லப்தரஸாயை நம: (199)

200. **लब्धसंपत्समुन्नतिः**—ஸத்தியகாமம் ஸத்திய ஸங்கல்பம் ஸச்சிதாநந்தங்கள் முதலிய ஸம்பத்துக்களின் உயர்ச்சி, ஸ்வஸ்ரூபமாகவே விளங்கும் உத்க்ருஷ்டத்தன்மையையுடையவள். சித்சக்தி யபின்ன பிரஹ்மத்திற்கு, மாயையென்னும் உபாதி மாத்திரத்தினாற்றோன்றுங்குணங்கள் கர்மத்தினாற் றோன்றுவனவல்ல வாதலின், ஆகஸ்மிகங்கள், அதாவது எப்பொழுதும் தோன்றுவன வல்ல; உபாதியுள்ள வரையில் தோன்றுவன; ஆதலின் ஸர்வோத்க்ருஷ்டமானது அறியப்படுகின்றது. "**तमीश्वराणां परमं महेश्वरं तं देवतानां परमं च दैवतम् । पतिं पतीनां परमं पुरस्ताद्विदाम देवं भुवनेशमीड्यम्**" "**सत्यकामः सत्यसंकल्पः**" "**एष सर्वेश्वर एष सर्वज्ञ एषोऽन्तर्याम्येष योनिः सर्वस्य**" இது முதலான ஶ்ருதி வாக்கியங்களினாலும் "**गतिर्भर्ता प्रभुः साक्षी**" என்னும் ஸ்ம்ருதி வாக்கியத்தினாலும், பிரஹ்மாபின்ன பரதேவதையின் உத்க்ருஷ்டத்தன்மையில் யாதோரையமுமின்று. "**एष नित्यो महिमा ब्राह्मणस्य**" என்னும் வாக்கியம் இதற்குப் பிரமாணமாம்.

லப்தஸம்பத்ஸமுந்நத்யை நம: (200)

201. **ह्रींकारिणी**—இரண்டாவது கூடத்தினிறுதியிலு ள்ள அவயவமாகும் ஹ்ரீங்கார வடிவமாய் விளங்குபவள்; ஹ்ரீங்காரத்திற்கும் பரதேவதைக்கும் வாச்சிய வாசக ஸம்பந்தமுண்டென்பது அறியத்தக்கது.

ஹ்ரீங்காரிண்யை நம: (201)

202. **ह्रींकाराद्या**—வேதாதியான ஹ்ரீம் என்னும் பிரணவத்தின் காரியம் வேதங்கள். வேதமூலபூத ஹ்ரீங்காரத் திற்கும் ஆதியாய் விளங்குபவள். சப்தங்களுக்கெல்லாம் அர்த்த விஷயகமாகவே பிரவ்ருத்தி ஏற்படுவதாலும், காவ் யம் முதலியவற்றில் சக்திவிருத்திரூப அர்த்தஞானத் துடனேயே எல்லாச் சப்தங்களும் பிரயோகிக்கப் படுவதா லும், சப்தத்திற்கு முன், அர்த்தம் ஏற்பட்டிருத்தல் வேண்டு மென்பது சித்திக்கின்றது. ஆகவே ஹ்ரீம் என்னும் விமர் சப் பிரணவத்திற்கு ஆதிரூப அர்த்தமாய் அதாவது ஸ்வ ரூபமாய் விளங்குபவள்.

ஹ்ரீங்காராத்யாயை நம: (202)

203. **ह्रींमध्या**—ஹ்ரீம் பீஜமானது, இதர ஜகத்திற்கு அபின்ன நிமித்தோபாதானமாகும் மாயாவிசிஷ்டசேத னத்தின் வாசகமாயிருத்தலினால், மாயாவிசிஷ்ட சித் சக்தியின் பிரதீகமாகும் ஹ்ரீங்கார உபாஸனையினால், சக்தி நிஷ்டகுணங்களெல்லாம் பிரகாசிக்கின்றன. இன்றேல் ஹ்ரீங்கார மந்த்ர புரஶ்சர்யை முதலியவற்றால் அபீஷ்ட ஸித்தி ஏற்படாதென்று கூறவேண்டிவரும்.

இதற்குமுன் கூறப்பட்ட "ஹ்ரீங்காராத்யா" வென் னும் நாமத்தில் அவ்யக்தஸ்வரூபமான சப்த ஜாலங்களுக்கு,

ஹ்ரீம் பீஜம் அர்த்தமானதால் அர்த்தம் முன்னல் உண்டா யிற்று என்று கூறப்பட்டது. வியக்தமாகக் கூறப்படும் இந்நாமாவில், விவர்த்தவாதத்தை யாஶ்ரயித்துச் சப்தம் அர்த்தம் என்னும் நாமரூபங்கள் கூறப்படுகின்றன. **वाचारंभण** என்னும் ஶ்ருதி இதற்குப் பிரமாணமாம். ஹ்ரீம் பீஜத்தின் அர்த்தமானது அந்தசப்தத்தினல் லக்ஷிக்க (குறிப் பிட) ப்படுகின்றது. அதாவது சக்தி விருத்தியினல் அல் லாமல் லக்ஷண விருத்தியினல் கூறப்படுவதுதான் ஸரியான அர்த்தமாம். பிரபஞ்சத்தில் ஸ்திதிகாலமாகிய மத்திய விவகார காலத்திலுங் கூட அதன்காரணமாய்ப் பிரகாசிக் கின்றவள். கடம் படம் முதலிய பொருள்களில் நாமரூப விவகார காலத்திலுங்கூட ஸச்சிதானந்தப் பிரதீதியுண்மை யின், சித்சக்தியபின்ன பிரஹ்மம் விளங்குகின்றது; இதுதா ன் ஜகத்காரணம். "**सदेव सोम्य इदमग्र आसीत्-एकमेवाद्वितीयं ब्रह्म**" என்பன இதற்குப் பிரமாணங்களாகும். இதனல், அசேதன பரிணம ஆரம்பவாதங்கள், அப்பிராமாண்யத் தன்மையா லும், யுக்தி முதலியவற்றின் ஆபாஸத் தன்மையாலும் தள் ளப்பட்டனவென்றறிதல் அவசியம்.

ஹ்ரீம் மத்யாயை நம: (203)

204. **ह्रीशिखामणिः**—எங்ஙனம் சிரஸில் தரிக்கப்படும் சூடாமணியென்னும் ஆபரணமானது, மற்ற அவயவங்களி ல் தரிக்கப்படுகின்ற ஆபரணங்களைக் காட்டிலும் சிரேஷ்டமா கக் கருதப்படுவதோடு அது தன்னைத்தரிக்கின்ற புருஷனைப் பெருஞ் செல்வவான் என்று தெரிவிக்கின்றதோ, அங்ஙன மே ஸர்வ சப்த ஜாலங்களுக்கும் அவற்றின் வாச்சியார்த்தங் களான சித்-ஜடஸம்பந்த ரூப ஸர்வப் பிரபஞ்சங்களுக்கும்

வாசகமாயும் அதிஸூக்ஷ்மமாயுமுள்ள ஹ்ரீம் பீஜமானது, ஸ்ரீவித்யையின் சிரஸில் ராஜ பீஜமாய் விளங்குவதோடு அது தன்னை ஜபம் செய்யும் உபாஸகர்களுக்கு அவரவர் வேண்டும் அபீஷ்டங்களை யருளிப் பின் பரமைஸ்வர்யமாகும் ஸச்சிதா நந்த அகண்டஸ்திதியையும் அருளுகின்றதென்று அறிவிக் கின்றது. சிகாமணியாகும் ஹ்ரீங்காரரூபிணியே பரதேவ தை யென்பது பாவார்த்தமாம்.

ஹ்ரீம்சிகாமணயே நம : (204)

205. **ह्रींकारकुण्डाग्निशिखा**—ஹ்ரீங்காரமே அக்கினி குண்டம்; வாச்சியவாசக சம்பந்தத்தினால் பரப்பிரஹ்மத்தின் அவச்சேதகம் ஹ்ரீங்காரமாகும். இது தக்ஷிணாக்கினி, கார்ஹ பத்யம், ஆஹவநீய மென்னும் த்ரேதாக்னி ஸ்வரூபமானது; இவ்வக்கினிகுண்டமாகிய ஹ்ரீங்காரத்தின் ஜ்வாலா ரூப மாய் விளங்குபவள் பரதேவதை. "**उद्दीप्तेऽग्नौ जुहोति**" (ஜ்வாலை யோடு பிரகாசிக்கும் அக்கினியில் ஹோமம் செய்) "**आहवनीये जुहोति**" என்னும் விதி வாக்கியங்களின்படி ஹோமத்தின் ஆதாரத்துவம் ஜ்வாலைக்கே ஏற்படுகின்றது. யஜனக்கிரியை அத்ருஷ்டம் என்னும் ஒன்றன் மூலமாய் ஸ்வர்க்க ஸம்பந்தி யாயிருக்கின்றது. ஆதலின் தர்ம புருஷார்த்த ஸம்பந்தித் துவம் ஜ்வாலையோடு கூடிய அக்கினிக்கே யுண்டு என்று ஏற்படுகின்றது. "**मन्त्रैरुपासीत**" என்னும் வாக்கியத்தின்படி, மந்த்ர பதத்திற்குப் பரப்பிரஹ்ம வாசகமான ஸ்ரீவித்யாத்மக ஹ்ரீங்காரமே பொருளாகும்; அது ஞானாக்னி ஸ்வரூபமா னது; அதன் ஜ்வாலையே பரதேவதையாகும் பிரஹ்மாபின்ன சித் சக்தியாம்.

ஹ்ரீங்காரகுண்டாக்நிசிகாயை நம : (205)

206. ह्रींकारशशिचन्द्रिका—ஹ்ரீங்காரமே சந்திரன். சந்திரனைவிட பின்னமல்லாத சந்திரிகையைப் போலுள்ள ஹ்ரீங்கார சித் சந்திரஸ்வரூப பிரகாச சைதன்யமாய் விளங்குபவள். எங்ஙனம் சந்திரனிடத்திலிருந்து பிரவகிக்கும் அம்ருத கிரணங்கள் ஸ்வர்க்கரூப தெய்வலோகம் முதலிய எல்லா உலகங்களுக்கும் பிராணுதாரமாய் விளங்குகின்றனவோ அங்ஙனமே, பரதேவதையானவள் மிகவும் திடமான பக்தியில் பரவசப்பட்ட புருஷ சிரேஷ்டர்களுக்கு, ஹ்ரீங்கார வாச்சியார்த்தத்தினுல் அதற்கு அபேதமாயிருந்து கொண்டு விவர்த்த காரணத்தன்மையால் ஸச்சிதாநந்த வடிவ அம்ருத ஸ்வரூப மோக்ஷத்தைத் தருகின்றனள்.

ஹ்ரீங்காரசசிசந்த்ரிகாயை நம: (206)

207. ह्रींकारभास्कररुचिः—ஸூர்யன் தனது காந்தியினுல் லோகோபகாரமாய்ப் பிரகாசிக்கின்றனன். இந்த ஸூர்யனுடைய உக்கிரமான கிரணரூபமாய் விளங்குபவள் பரதேவதை; மழைக்காலத்தில் மேகங்கள் காடாந்தகாரமாய்ச் சூழ்ந்துகொண்டு மழை பெய்யும்போது பகலாயிருந்தாலும் மறைபட்டுள்ள காரணத்தால் சூரியன் எங்ஙனம் கண்ணுக்குப் புலப்படுவதில்லேயோ அங்ஙனமே, ஞானமார்க்கத்திற்கு அதிகாரமில்லாத அக்ஞானிகளுக்கு மோக்ஷ ஸாதனமான ஹ்ரீங்காரரூப பரதேவதாராதனம் விளங்குவதில்லே. ஆயினும், ஒரு பெருங்காற்றுல் மேகங்கள் சிதறி ஒழிந்த காலத்தில், ஸூர்யன் எங்ஙனம் பிரகாசிப்பானே அங்ஙனமே, அவ்வக்ஞானிகளின் பூர்வ ஜன்மங்களிற் செய்த புண்ணிய விசேஷத்தால் அவர்கள் ஸத்குருவைத் தரிசித்து அவருடைய கிருபைக்குப் பாத்திரராகி அவரது கடாக்ஷரூபமான

தீக்ஷையைப் பெறுவதனல் பிரதிபந்தகங்களாகும் தடைக ளெல்லாம் அறவே ஒழிகின்றன ; இங்ஙனம் ஒழியவே ஸாக ஸாதனமாகும் பரதேவதாரூப ஹ்ரீங்காரமானது, புரஶ்சர ணையினல் ப்ரத்தியக்ஷ ஞானத்திற்குக் காரணமாகின்றது. இங்ஙனம் இடைவிடாது நெடுநாள் விஶ்வாஸத்தோடு செய் யப்படுகின்ற பாவனு விசேஷத்தால் ஹ்ரீங்கார லக்ஷ்யார்த்த ரூப பரமாநந்த சித்கலையானது அபரோக்ஷப்படும். இது தான் நித்தியாநந்த நிலையாகும்.

ஹ்ரீங்காரபாஸ்கரருச்யை நம: (207)

குறிப்பு :—மேலே கூறப்பட்ட மூன்று நாமங்களாலும், அக்னி-ஸோம-ஸூர்ய மண்டலங்களை யுபாதியாய் உடைய து பிரகாசரூப சிவ மென்றும், ஜ்வாலை-சந்திரிகை-கிரணங் கள் இவைகளை யுபாதியாய் உடையது விமர்சரூப சக்தி யென்றும் தெளிவாகின்றது.

208. **ह्रींकाराम्भोदचञ्चला**—ஹ்ரீங்காரமாகின்ற மேகத் திற்கு மின்னல் கொடிபோன்றவள். மேகங்கள் ஜலத்தை வர்ஷிப்பது போல், ஹ்ரீங்காரமும் உபாஸகர்களின் அபீஷ் டங்களை வர்ஷிக்கின்ற காரணத்தால் மேகத்திற்கு ஒப்புமை கூறப்பட்டது. எங்ஙனம், மேகங்களில் மின்னல் கொடி மறைவாயிருந்து கொண்டு அந்த மேகங்களைப் பிரகாசிப்பித் து, மழை பெய்யும்படி செய்து, அதனுல் பயிர் பச்சைகளை செழிக்கச் செய்கின்றதோ அங்ஙனமே பரதேவதையும், ஹ்ரீங்கார மேகத்தில் அந்தர்யாமிவடிவ மின்னலைப்போ லிருந்து உபாஸகர்களுக்குப் புருஷார்த்தங்களை யளிக்கின் றனள். மேகத்திற்கு அபின்னையாயிருப்பது வாச்யார்த்த மென்றும், மின்னலாய் விளங்குவது லக்ஷ்யார்த்த மென்றும் அறிதல் அவசியம்.

ஹ்ரீங்காராம்போதசஞ்சலாயை நம: (208)

209. **ह्रींकारकन्दाङ्कुरिका**—ஹ்ரீங்காரமாகும் கிழங்கிற்கு முளையாயிருப்பவள். முளையானது, கிழங்கு, விதை முதலியவற்றிலுள்ள உத்பாதக சக்தியை மறைக்காமல், விருக்ஷத்தின் அடிமரம், கிளை, இலை, புஷ்பம், காய், பழம் முதலியவற்றின் வளர்ச்சிக்குத்தானே காரணமாகின்றது. இங்ஙனமே, ஹ்ரீங்காரக் கிழங்கானது சிவ சக்திகளின் ஸாமரஸ்ய காமகலாஸ்வரூபமாகும். இதினின்றும் ஏற்பட்ட, ஞானத்திற்கு விஷயமாகும் தன்மையுடையதும், நாநாவாய்த் தோன்றும் ஜகத்பரிணாமத்திற்கு ஹேதுவானதும், (**अघटित घटना पटीयसी**) ஸம்பவிக்கக்கூடாததையும் ஸம்பவிக்கும்படி செய்யும் ஆற்றலுள்ளதுமான மாயையை உபாதியாய்க் கொண்டு விளங்கும் விமர்ச சக்தி ஹ்ரீங்காரத்தின் வாச்யார்த்தமாகும். இது தான் அங்குரரூபம். முளையின் ஒரு பாகம் மேல் நோக்கி வளர்ந்து விருக்ஷமாகின்றது. மற்றொரு பாகம் கீழ் நோக்கிப் பூமிக்குள் வளர்ந்து வேர் என்னும் பெயரைப் பெறுகின்றது. இந்த வேர்தான் மரத்தின் ஸ்திதிக்கும் வளர்ச்சிக்கும் ஆதாரம். இது தான் ஹ்ரீங்காரக்கிழங்கின் லக்ஷ்யார்த்தம். **बीजाङ्कुररूपिणी पराशक्तिः** என்னும் காமகலா விலாஸ வசனம் இங்கு அறிதற்பாலது.

ஹ்ரீங்காரகந்தாங்குரிகாயை நம: (209)

210. **ह्रींकारैकपरायणा**—ஹ்ரீங்காரம் ஒன்றற்கே தர்மார்த்த காம மோக்ஷங்களென்னும் சதுர்வித புருஷார்த்தங்களையும் சாதிப்பிக்கச் செய்யும் வல்லமை யுண்டு; மற்றெதற்கும் இத்தகைய ஆற்றல் இல்லை. ஆதலால் அநிதரஸாதாரணமாய் இருக்கின்றது. ஆதலால் சிரேஷ்டமானது. இத்தகைய ஹ்ரீங்காரத்தையே பரமப் பிரமாணமாகவுடையவள்

பரதேவதை. அல்லது, ஹ்ரீங்காரத்திற்கு ஆஶ்ரயமாக இருப்பவள் எனினும் பொருந்தும். ஹ்ரீம் பீஜத்திற்கு மாயை யென்பது பொருள். இந்த மாயை, சித்சக்தியை ஆஶ்ரயித்து விளங்கி அச்சித்தையே மறைக்கின்றதென்பது உபநிஷத் ஸித்தாந்தமாகும்; ஸ்வாஶ்ரய ஸ்வவிஷய நியாயம்.

ஹ்ரீங்காரைகபராயணாயை நம: (210).

211. **ह्रींकारदीर्घिकाहंसी**—தீர்க்கிகை யென்பது அரசனது உத்தியான வனத்திலுள்ள கிரீடைக்குரிய நடைவாவியாகும். ஹ்ரீங்காரமே இத்தகையவாவி. இவ்வாவியில் ஸஞ்சரிக்கும் அன்னப்பக்ஷியே பரதேவதையாவள். ஹ்ரீங்காரமானது ஸம்ஸாரமாகும் காட்டில் அலைந்துழலும் ஜனங்களது விஶ்ராந்தி ஸ்தானமாய் விளங்குங் காரணத்தினாலும், உபாஸகர்களுக்குப் பரமாநந்தரூப பரம விஶ்ராந்தியைத் தருதலாலும் நீரோடைக்கு உவமித்துக் கூறப்பட்டது. "அஸாரமிது, ஸாரமிது" என்று பகுத்தறியக்கூடிய அன்னப்பேடுகளும் தங்கத்தாமரை மலர்களும் கூடிய ஓடையானது சக்கிரவர்த்திக்கு உரியதாகுமென்று எங்ஙனம் அறியப்படுகின்றதோ, அங்ஙனமே வாச்யார்த்தத்தினால் விளங்கும் ஹ்ரீங்காரமும் பரதேவதையைச் சம்பந்தித்தது; ஆதலின் நித்தியாநந்த மோக்ஷத்திற்குக் காரணமானது என்று அறிதல் அவசியம்.

ஹ்ரீங்காரதீர்க்கிகாஹம்ஸ்யை நம: (211)

212. **ह्रींकारोद्यानकेकिनी**—ஹ்ரீங்காரமாகும் உத்தியானவனத்திற்கு (அழகைத்தரும்) பெண் மயிலாய் இருப்பவள். தர்மார்த்த காமரூப பலவித பலன்களைத் தருதலால் ஹ்ரீம் பீஜத்தை யுத்தியானத்திற்கு உவமையாகக் கூறப்பட்டது. உத்தியானத்தில் அநேகவித பக்ஷிகள் இருந்தாலும், மயிலா

னது தனது ரூபத்தாலும் த்வனியாலும் எங்ஙனம் ஸுகத்தை யுண்டாக்குகின்றதோ அங்ஙனமே, இந்த பீஜவாச்சியமும், ரூபத்தாலும் த்வனியாலும் ஐஹிக ஆமுஷ்மிக பலன்களையும், லக்ஷ்யார்த்தத்தினுல் பரமபுருஷார்த்தரூப ஸச்சிதாநந்த ஸ்திதியையும் தருகின்றது. மற்றும், மயிலானது எங்ஙனம் உத்தியானத்திலுள்ள மரங்கள், கொடிகள், கொடிவீடுகள், கற்கள், மணல்மேடுகள் முதலிய மேன்மையும் தாழ்மையுமுடைய ஸ்தலங்களில் தன்னிஷ்டம் போல் ஸஞ்சரிக்கின்றதோ, அங்ஙனமே இந்த பீஜவாச்சியமும் பிரஹ்மா, விஷ்ணு, ருத்ரன், இந்திரன், மனுஷ்யர்கள், திர்யக்ஜந்துக்கள், முதலியவர்களின் உடல், இந்திரியம், பிராணன் முதலியவைகளிலும் ஜடஸ்வரூப ஸர்வபூதங்களிலும் வியாபித்துப் பரமப் பிரேமைக்குக் காரணமான அஹமாகாரமாயும் இதமாகாரமாயும் விளங்குகின்றது. ஜட சேதனாத்மக ஸர்வப் பிரபஞ்சமும் ஹ்ரீங்காரமாகும் உத்யானவனமென்றும், அதில் ஸ்வேச்சையாய் ஸஞ்சரிக்கும் மயூரமே பரதேவதை யென்றும் கூறப்பட்டது.

ஹ்ரீங்காரோத்யானகேகின்யை நம: (212)

213. **ह्रींकारारण्यहरिणी**—ஹ்ரீங்காரமாகும் காட்டில் (ஸஞ்சரிக்கும்) பெண்மானாய் இருப்பவள். காடானது, சிறுத்தை முதலிய துஷ்ட ஜந்துக்கள் வசிக்கும் காரணத்தினுல் பிரவேசிப்பதற்கு முடியாததாயும் பய ஹேதுவாயும் இருப்பது போல, ஹ்ரீங்காரமும் தனது வாச்யார்த்தத்தின் (உபாதிரூப) ஏகதேசவடிவ மாயை, அவித்யைகளின் கார்யமான பந்த ஸ்வரூபமாயும், பய காரணமாயும் இருத்தலினுல் காட்டிற்கு ஒப்புமை கூறப்பட்டது. இத்தகைய பய

ஹேதுவாகிய காட்டில் பல மான்கள் புலப்படுமேயாயின், "அக்காட்டில் புலி முதலிய துஷ்ட மிருகங்கள் இல்லை; இருந்தால் பரம ஸாதுஸ்வரூப மான்கள் நிர்ப்பயமாய் ஸஞ்சரிக்கா" என்று நிச்சயிக்கலாமன்றோ ? இங்ஙனமே, ஹ்ரீம்பீஜ வாச்சியார்த்தத்தின் மற்றொரு பாகமாகிய அதிஷ்டானரூப சைதன்ய மானின் ஞானத்தினால், உபாதிரூப மாயை, அவித்தையைகள் இல்லவே யில்லை என்று ஏற்படும். உபாதியால் ஏற்பட்ட அத்தியாஸ நாசத்தால் ஸம்ஸாரரூப ஸகல அநர்த்தங்களும் நீங்கி, அபயஸ்வரூப மோக்ஷம் தானாகவே ஸித்திக்கின்றது. "**तमेवं विदित्वाऽतिमृत्युमेति**"—அதிஷ்டான ஸ்வரூபத்தையறிவதினாலேயே ம்ருத்யுவிற்கு அதீதமான அம்ருத ஸ்வரூபத்தையடைகின்றான் என்பது ஶ்ருதி.

ஹ்ரீங்காராரண்யஹரிண்யை நம: (213)

214. **ह्रींकारवालवल्लरी**—ஹ்ரீங்காரமாகும் பாத்தியில் வளர்ந்தொளிரும் கொடி போன்றவள். ஹ்ரீங்கார வாசகத்திற்கு வாச்சியை பரதேவதை. பரதேவதையும் ஹ்ரீங்காரமும் வாச்சிய வாசக ஸம்பந்தமுடையனவாகும். ஹ்ரீங்காரத்தை உபாஸிப்பவர்களுக்கே பரதேவதாஸாக்ஷாத்காரரூப பலன் ஏற்படுகின்றது. ஆதலின் ஹ்ரீங்காரத்தைப் பாத்திக்கும் பரதேவதையைக்கொடிக்கும் உவமிக்கப்பட்டது. பாத்தியில் இதரமுட்செடிகள் முளையாமல் களை கொத்தி எருவிட்டு ஜலம் வார்த்து ஸம்ரக்ஷிப்பதால் அதில் வளரும் கொடி எங்ஙனம் செழித்து வளர்ந்து பலன் தருமோ, அங்ஙனமே ஹ்ரீம் பீஜ மந்த்ரத்தையும் இதர எண்ணங்கள் வராமல் ஏகாக்கிரத்தோடு ஜபித்து, விஶ்வாஸத்தோடும் அர்த்தாநுஸந்தானத்தோடும் இடைவிடாமல் நெடுநாள் உபாஸித்துவரின் ஸ்வாத்மரூப

பரதேவதா ஸாக்ஷாத்கார மஹா பலன் ஸித்திக்கின்றதென்பது சிதையாத ஸித்தாந்தமாம்.

ஹ்ரீங்காராவாலவல்லர்யை நம: (214)

215. **ह्रींकारपञ्जरशुकी**—ஹ்ரீங்காரமாகும் கூண்டில் பிரகாசிக்கும் கிளிபோன்றவள். கிளிதான், கிளிக்கூண்டிற்கு அழகையும் ஸாபல்யத்தையையும் தருவது. கிளியற்ற கூண்டு பயனற்றதாகும். எங்ஙனம் கிளிக்கூண்டானது சிறு குழந்தைகளின் விளையாட்டிற்கும் சந்தோஷத்திற்கும் விஷயமாயிருக்கின்றதோ, அங்ஙனமே, ஹ்ரீங்காரமும் மந்தாதிகாரிகளுக்குப் பார்வதி, லக்ஷ்மி முதலிய தேவதைகளின் பிரதீகோபாஸனைக்கு விஷயமாயிருத்தலால், ஹ்ரீம் பீஜத்தைக் கிளிக்கூண்டிற்குச் சமமாய்க் கூறப்பட்டது. கூண்டிலுள்ள கிளி மனிதர்கள்பேசுவது போல் பேசி மனத்தை ரஞ்சிக்கச் செய்கின்றது. இங்ஙனமே, பரதேவதையும் உபாஸகர்களின் அதிகாரத்தை யநுஸரித்தும், அவரவர்களின் அத்ருஷ்டத்திற்குத் தக்கபடியும், கர்மோபாஸனுபலன்களையும் ஞானத்தையும் தந்து ஸர்வ ஜீவர்களையும் ஸந்தோஷிப்பிக்கின்றனள்; ஆதலின் கிளியோடு உவமிக்கப்பட்டதென்றறிதலவசியம்.

ஹ்ரீங்காரபஞ்சரஶுக்யை நம: (215)

216. **ह्रींकाराङ्गणदीपिका**—ஹ்ரீங்காரமென்னும் முற்றத்திலுள்ள விளக்கு போன்றவள். ஒரு வீட்டில் முற்றமென்பது நல்ல வெளிச்சமும் காற்றும் உள்ள விடமாகும். இது வீட்டிலுள்ளவர்கள் வெளியே சென்று அலைந்து வந்தால் அவர்களது சிரம பரிகாரத்திற்காக இளைப்பாறும் படியான சிறந்த ஸ்தானமாயிருக்கின்றது. இங்ஙனமே, ஹ்ரீம் என்னும் மந்த்ரமும், பாஹ்யப் பிரவ்ருத்தியாலேற்

பட்ட, ஆத்யாத்மிக, ஆதிபௌதிக, ஆதிதைவிக தாபங்களினின்றும் விஶ்ராந்தியடைதற்குரிய ஸ்தானமாயிருப்பதனால் அங்கணத்தோடு உவமிக்கப்பட்டது. அன்றியும், முற்றத்தில் வைக்கப்பட்ட தீபமானது வீடுமுழுமையும் பிரகாசித்து, வீட்டிலுள்ள எல்லாவஸ்துக்களையும் ஒளிரச் செய்கின்றது. இதைப்போலவே ஹ்ரீம் பீஜத்தையுபாதியாயுடைய சேதனமாகும் பரதேவதையும், உபாஸிப்பவர்களின் ஈடேற்றத்திற்கு வேண்டிய கர்மம், பக்தி, விவேகம், வைராக்கியம், சமதமாதிகளின் அடைவு, மோக்ஷேச்சை, குரூபஸதனம், சிரவணம், மனனம், நிதித்தியாஸனம் முதலிய ஸாதனங்களை யவரவர்களின் மனத்தில் பிரகாசிக்கச்செய்து ஆநந்திக்கச் செய்கின்றனள். ஆதலின் பரதேவதையைத் தீபத்தோடு உவமித்துள்ளது.

ஹ்ரீங்காராங்கணதீபிகாயை நம: (216)

217. **ह्रींकारकन्दरासिंही**—ஹ்ரீங்காரமாகும் குஹையில் வஸிக்கும் பெண் சிங்கம் போன்றவள். உயர்ந்த மலையின் உச்சியிலுள்ள குஹைக்குக் கந்தரம் என்று பெயர். நாட்டில் கிராமாந்தரங்களில் வஸிப்பவர்களுக்குக் குஹைக்குச் செல்லுதல் சற்றும் முடியாத காரியம். இதைப்போல் வேதங்களின் முடிகளாய் விளங்கும் உபநிஷத்துக்களில் ஹ்ரீங்காரம் மிகவும் ரஹஸ்யமாய்க் கூறப்பட்டிருப்பதாலும், விஷய இன்பங்களை யாஶ்ரயித்துள்ள (க்ஷுத்ர) பேத வ்ருத்தியோடு கூடிய ஜீவர்களால் அடைதற்கரிதாயுள்ளதாலும் இதைக் குஹைக்கு ஒப்பிட்டுக் கூறப்பட்டது. குஹையில் வஸிக்கும் சிங்கமானது மற்ற அற்பப் பிராணிகளைத்தன் குஹைக்குள் பிரவேசிப்பதற்கு இடந்தராமல் பயத்தையுண்டுபண்ணக் கூடிய கர்ஜனை, பிடரிமயிர், கோபதிருஷ்டி

முதலியவைகளால் அவைகளை விரட்டித் தான் மட்டும் ஏக மாய் இருக்குந்தன்மையைத் தெரிவிக்கின்றது; ஆனால் தைர்யவான்களாகும் மஹாவீரர்கள் தனது இருப்பிடமாகிய குஹையை அடைவார்களே யாயின் அவர்களுக்குத் தனது நகங்களிலிருந்து உதிரும் படியான (விலையில்லா) முத்துக் களைக் கிடைக்கும்படி செய்கின்றது. இங்ஙனமே பரதேவதை யும், மந்தபக்தி, ஆலஸ்யம், போகங்களில் இச்சை, முதலிய வற்றோடுகூடிய (கலங்கிய) சித்தத்தோடுள்ள ஜீவர்களுக்கும், த்வைத பாவத்தோடு கூடிய தேவதாந்தர உபாஸகர்களுக் கும் அடைய முடியாமலிருக்கின்றனள். பாஹ்யப் பிர விருத்தியோடு கூடிய இந்திரியங்களையும் மனத்தையும் அடக்கி அந்தர்முக விருத்தியோடு கூடிய ஏதோவொரு தீரபுருஷனுக்கு, ஹ்ரீங்கார உபாஸனையையும், அதனால் உபா ஸ்ய உபாஸக அபேதரூப தத்துவ ஞானத்தையும், அபீஷ்ட மாகிய பரமாநந்த நிலையையும் வெகுஸுலபமாய்த் தருகின் றனள். ஆதலின் பரதேவதையைச் சிங்கமாக உருவகம் செய்யப்பட்டது.

ஹ்ரீங்காரகந்தராஸிம்ஹ்யை நம: (217)

218. **ह्रींकाराम्भोजभृङ्गिका**—ஹ்ரீங்காரமாகின்ற தாம ரைப் புஷ்பத்தில் பெண் வண்டாயிருப்பவள். தாமரைப்பூவா னது மனோஹரமான சிவப்பு வெண்மை நிறங்களோடு கூடிக் கேஸரங்களில் மகரந்தங்கள் நிரம்பி அதிகமான தே னோடும், வாஸனையோடுமுள்ளது. இங்ஙனமே, ஹ்ரீம் பீஜமும் அஷ்டைஶ்வர்யாத்மக சதுர்வித புருஷார்த்தங்களையும் அரு ளும் ஆற்றலுடையதாய்ப் பலவர்ணங் (எழுத்துக்) களோடு கூடி ஞானவாஸனையும் பரமாநந்தவடிவ மோக்ஷஸாதனத்

துவமும் கூடியுள்ள காரணத்தினுல் தாமரைப் புஷ்பத்திற்குச் சமானமாய்க் கூறப்பட்டிருக்கின்றது. வண்டுகள் தேன் ஒன்றையே கோரிப் பல புஷ்பங்களிலும் சென்று ஸர்வ ஸமமாகும் தேனைப் பருகுகின்றன. ஆயினும் அதிகமான தேன் தாமரைப் புஷ்பத்தில் இருப்பதனுல் இங்கே இந்த புஷ்பத்தைச் சிறப்பாய்க் கூறப்பட்டது; வண்டுகளுக்கும் தாமரைப் புஷ்பத்தில் பிரியம் அதிகம். இங்ஙனமே, பரதேவதையும் ஸர்வ மந்த்ர பீஜாக்ஷரங்களின் வாச்யையாயிருப்பினும், ஹ்ரீங்காரமானது ஸர்வப் பிரபஞ்ச அபின்ன நிமித்தோபாதான ஸகுணப் பிரஹ்மமாகும் காரணேஶ்வரப் பிரதீகமாயும், அவனது தடஸ்த லக்ஷணமாயும், ஸர்வ ஶப்த ஜாலங்களுக்கும் பிரக்ருதியாயு மிருப்பதனுல் அந்த ஹ்ரீம் பீஜத்தோடு ரூடியாகவும், லக்ஷணையாகவும் ஸம்பந்தப் பட்டிருக்கின்றனள். ஹ்ரீம்பீஜ வடிவ ஆப்த மந்த்ர உபாஸகர்களுக்குத் தான் அதிஷ்டானவடிவாய் விளங்கிப் பரமாநந்த நிலையயருளுகின்றனள். ஆதலின், பெண்வண்டுக்கு உவமிக்கப்பட்டனள்.

ஹ்ரீங்காராம்போஜப்ருங்கிகாயை நம: (218)

219. **ह्रींकारसुमनोमाध्वी**—ஹ்ரீங்காரமாகும் புஷ்பத்திற்குத் தேனைப் போன்றவள். ஹ்ரீங்காரமானது விரும்பிய பயனைத் தருதலினுல் புஷ்பங்களுக்கு உவமிக்கப் பட்டது. புஷ்பங்கள் பழங்களுக்குக் காரணமன்ருே? அன்றியும், புஷ்பங்கள் மிகவும் மிருதுவானதன்மை யுடையவை யாதலின் அவற்றை யுபயோகிக்கும் பொழுது அவை கசங்கிவிடாமல் ஜனங்கள் வெகு ஜாக்கிரதையாயும் பூஜ்ய புத்தியோடு மிருப்பதவசிய மென்பது யாவருமறிந்ததே. இதைப்

போலவே ஹ்ரீங்காரமும் பரப் பிரஹ்மத்தைக் குறிக்கும் வாசகமாயிருப்பதனுல், அதை உபாஸிக்குங் காலத்தில் உபாஸகர்கள் வெகு சிரமப்பட்டு ஏகாக்கிர சித்தத்தோடு உபாஸ்ய தேவதையைத் தமக்கபின்னமாய்த் தியானித்தலவசியம். ஆதலின், ஹ்ரீங்காரத்திற்குப் புஷ்பத்தோடு ஒப்புமை கூறப்பட்ட தென்றறிக. தேனற்ற சிலபுஷ்பங்கள் பழங்களை யுண்டாக்குஞ் சக்தியற்றனவாய்க் காய்ந்துபோய்க் காற்ருல் உதிர்ந்து விடுகின்றன; தேனுள்ள புஷ்பங்கள் தான் பழங்களை யுண்டுபண்ணுந் தன்மையுடையன வாயிருக்கின்றன. புஷ்பத்திலுள்ள தேனுனது, பூமிதத்துவத்திற்குக் காரணமான ஜலதன்மாத்திரையின் ஸ்வரூபமான (மாதுர்ய) ரஸமாதலால், இனிமைச் சுவையோடு கூடியதாயும், பழங்களைத் தருதற்குரிய சக்தியோடு கூடியதாயும் இருக்கின்றது. இதுபோலவே அம்பாளும் ஹ்ரீங்காரத்திற்கு ஸர்வ சக்திகளையும் தருபவளாயும் ஸச்சிதாநந்த ஸ்வரூபியாயும் உபாஸகர்ளுக்கு அவரவர் வேண்டும் இஷ்டஸித்திகளையருள்பவளாயும் இருப்பதால், மதுவுக்குத்துல்யமாய்க் கூறப்பட்டது.

ஹ்ரீங்காரஸுமமேமாத்வ்யை நம: (219)

220. **ह्रींकारतरुमञ्जरी**—ஹ்ரீங்காரமாகின்ற விருக்ஷத்திற்குப் பூங்கொத்தைப் போன்றவள். விருக்ஷமானது தன்னை ஆஶ்ரயித்த ஜனங்களைப் பயத்திலிருந்துங் காப்பாற்றித் தன்னிடமுள்ள பழங்களையும் கொடுத்து அவர்களைக் களிக்கச் செய்வது போல், கற்பகவிருக்ஷத்திற்குச் சமானமான ஹ்ரீங்காரமும் தன்னைச் சரணமடைந்த உபாஸகர்களின் ஜனனமரண ரூப ஸம்ஸார பயத்தைப் போக்கி அவர்கள்

இச்சிக்கும் நித்தியாநந்த மோக்ஷத்தையுங் கொடுத்து ஆநந்திக்கச் செய்கின்றது.

பெருங்கிளை, சிறுகிளைகள், மலாறுகள் இவைகளுக்கு உச்சியில் பிரகாசிக்கும் பூங்கொத்துக்கள் எங்ஙனம் பழங்களுக்குக் காரணமாயிருக்குந் தன்மையைத் தெரிவிக்கின்றனவோ, அங்ஙனமே, பரதேவதையும் தர்மார்த்த காம மோக்ஷங்களென்னும் புருஷார்த்த ரூப பலன்களைக் கோரும் ஜனங்களுக்கு, ஸத்குருவின் கருணையால் அடையப் பெற்ற வித்யாரூபமாயும், தேவதாரூபமாயும் விளங்கி அவர்களுக்குற்ற சந்தேக விபரீதங்களை யெல்லாம் நீக்கி அபரோக்ஷமாகி தானே தானாய் விளங்கும் மஹாபலனைத் தருகின்றனள்.

ஹ்ரீங்காரதருமஞ்சர்யை நம: (220)

குறிப்பு:—வித்யையின் ஸூர்யகண்டமாகிய இரண்டாவது கூடத்தின் இறுதியிலுள்ள ஹ்ரீம் பீஜத்தை மேலே கூறப்பட்டபடி அக்கினி குண்டம், சசி, பாஸ்கரன், அம்போதம், (க) கந்தம், தீர்க்கிகை, உத்யானம், ஆரண்யம், ஆவாலம், பஞ்சரம், அங்கணம், கந்தரம், அம்போஜம், ஸூமந:, தரு என்பனவற்றிற்கும், அப்பீஜத்தின் அதிஷ்டானமான பரதேவதையை அக்கினிசிகை, சந்திரிகை, ருசி, சஞ்சலை, அங்குரிகை, ஹம்ஸி, கேகினி, ஹரிணி, வல்லரி, சுகி, தீபிகை, ஸிம்ஹி, ப்ரிங்கிகை, மாத்வி, மஞ்சரி என்பன வற்றிற்கும் உவமித்துக் கூறியதைச் சற்று ஆழ்ந்து நோக்கின் உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களும் ஹ்ரீங்காரமாயும், அவ்வவற்றிற்கு ஏற்பட்ட சக்தியும் பயனும், பரதேவதாரூபமாயும், விளங்குகின்றன வென்பது புலப்படாமற் போகாது. இயற்கையை

யுற்றுணர்ந்து பராசக்தியின் விலாஸத்தையுணர்வதே உபாஸனையின் பரமரஹஸ்யமாகு மென்றறிதல் அவசியம்.

221. **सकाराख्या**—ஸகாரத்தோடு கூடியுள்ள "ஸ்ரீவித்யை" யென்னும் பெயரையுடையவள்; அல்லது, ஸகாரத்தைத் தனது வாசகமாயுடையவள் என்று பொருள். ஸ்ரீவித்யையின் மூன்ருவது கூடமானது ஸாதிவித்யாஸ்வரூபமானது. அந்த வித்யையைத் தனது நாமமாயுடைவளெனினும் பொருந்தும்.

ஸகாராக்யாயை நம: (221)

222. **समरसा**—ஏகரஸமாயிருப்பவள். கற்கண்டும் மதுரமும் போல காரியரூப இந்தப் பிரபஞ்சத்தில் விளங்குபவள்.

அல்லது, அக்ஞான ஸாம்ஸாரிக தசையில், கிஞ்சிக்ஞன், ஸர்வக்ஞன் என்னும் பேதத்தினுல் வெவ்வேறு ஸ்வபாவமாய்த் தோன்றும் ஜீவேஶ்வரபாவங்களை, உபாஸகனுக்கு வேதாந்த சிரவண மனனுதிகளால் ஏற்படும் அகண்டாகார விருத்தியால் "**अहं ब्रह्मास्मि** நான் பிரஹ்மமாயிருக்கிறேன்" என்னும் அபேத அநுபவ நிலையாலொன்று படுத்தி அவ்வநுபவ நிலையில் ஏகரஸமாய் விளங்குபவள். "**रसो वै सः**" ரஸமென்பது பரப் பிரஹ்மமாகும். பிரஹ்மாபின்னமாய் விளங்குபவள்.

ஸமரஸாயை நம: (222)

223. **सकलागमसंस्तुता**—ஆகமம் என்ருல் வேதமாம். **आ समन्तात् गमयतीति आगमः** எங்கும் (அகண்டமாய்) வியாபித்திருப்பது ஆகமம். ஸகல பதார்த்தங்களேயும் விளக்கும்

ஸவிகல்பக ஞானத்தையுண்டு பண்ணுவது. அல்லது, ஸகல மான ஸ்ம்ருதிகள், புராணங்கள், இதிஹாஸங்கள், அங் கோபாங்கங்களோடு விளங்கும் வேதங்கள் எனினும் ஆம். இவற்ருல் நன்கு துதிக்கப்படுபவள். "பரதேவதையை விட அன்னியமும் மேலானதுமான மற்ருென்று இல்லவே யில்லை" யென்னும் நிச்சய புத்தியோடு ஸ்வரூபாநுஸந்தா னம் செய்வதே ஸ்துதியாகும். ஸகலத்தையும் தெரிவிக்கும் வேதத்திற்கு ஸர்வக்ஞத்துவம் உண்டு. இத்தகைய ஸர்வ க்ஞ வேதமே பரதேவதையைத் துதிக்குமாஞல் அம்பாளின் மஹிமையை அளவிட்டுக் கூறமுடியுமோ? பரதேவதை சுத்த சைதன்ய ஸ்வரூபமாயும், மோக்ஷ காரண தத்துவ ஞானஸ்வரூபிணியாயுமிருப்பதால், அவளே யாவராலும் விசாரித்து அறியத் தக்கவள் என்பது திரண்ட பொருளாம்; "**साऽवश्यं विज्ञेया—आत्मा वा अरे द्रष्टव्यः**" என்பன இதற்குப் பிர மாணங்களாம்.

ஸகலாகம ஸம்ஸ்துதாயை நம : (223)

224. **सर्ववेदान्ततात्पर्यभूमिः**—வேதங்களின் முடிவு வேதாந்தங்கள். அவற்றின் தாத்பர்யம், "தத்துவமஸி, பிரக் ஞானம் பிரஹ்ம, அயமாத்மா பிரஹ்ம, அஹம் பிரஹ்மா ஸ்மி" என்னும் மஹாவாக்யார்த்த அத்வைதமேயாகும். இத் தகைய அகண்டைகரஸ மஹாதாத்பர்யத்திற்குப் பூமியாய் அதாவது விஷயமாய் விளங்குபவள். **उपक्रमोपसंहारावभ्यासोऽपूर्वता फलम्। अर्थवादोपपत्ती च लिङ्गं तात्पर्यनिर्णये॥** வேததாத்பர்யமா னது (1) உபக்கிரமம், உபஸம்ஹாரம் (2) அப்பியாஸம் (3) அபூர்வதை (4) அர்த்தவாதம் (5) உபபத்தி (6) பலம் என் னும் ஆறு வித லிங்கங்களால் நிர்ணயிக்கப்படுவதாகும். பிர

ஹ்மாபின்ன சித்சக்திதான் ஸர்வ வேதாந்த வாக்கியங்களின் பரம தாத்பர்யமாகுமென்பது ஸமந்வயாதி கரணத்தில் "**तत्तु समन्वयात्**" என்னும் பிரஹ்மஸூத்திரத்தில் நன்கு பிரதிபாதிக்கப்பட்டுள்ளது. இந்த தாத்பர்யம் சக்தி விருத்தியினல் எற்படுவதல்ல; மற்ருே லக்ஷணுவிருத்தியினல் ஸித்திப்பதாகும். ஆதலின் கர்மசேஷமுமன்று, உபாஸனு விதிசேஷமுமன்று. வேதாந்த வாக்கியங்கள் யாவும், பிரஹ்மாபின்ன சித்சக்தியோடு, ஸாமாநாதிகரண்யம், விசேஷண விசேஷ்யத்துவம், லக்ஷ்ய லக்ஷணபாவம் என்னும் மூன்று விதமான ஸம்பந்தங்களோடு கூடியுள்ளனவாயிருக்கின்றன. **सामानाधिकरण्यं च विशेषण विशेष्यता । लक्ष्यलक्षणभावश्च पदार्थप्रत्यगात्मनाम् ॥** என்பது இதற்குப் பிரமாணமாம். இந்த மூன்று வித ஸம்பந்தங்களாலும் அகண்டார்த்தமே போதிக்கப் படுகின்றது. இத்தகைய அகண்ட நிலையை யடைதற்குக் கர்மமும் உபாஸனையும் பரம்பரா ஸாதனங்களேயாகும். மறந்த வொன்றை ஞாபகப்படுத்துவது ஞானமாதலின் அதுவே ஸாக்ஷாத் ஸாதனமாம். பரதேவதையே பிரஹ்ம வித்யா ஸ்வரூபிணி.

ஸர்வவேதாந்ததாத்பர்யபூம்யை நம: (224)

225. **सदसदाश्रया**—ரூபாதிகளோடு கூடி, "இருக்கின்றது" என்னும் பிரதீதிக்கு விஷயமாய் வியாவஹாரிக ஸத்தையை ஆஶ்ரயித்து வியவகரிக்கப்படும் பிரிதிவி, அப்பு, தேஜஸ் என்னும் மூன்றும் ஸத்கார்ய மாதலின் ஸத்து என்று கூறப்படும். இவற்றிற்கு வேருய்ப் பரோக்ஷ ஞானத்திற்கு விஷயமாய்ச் சப்தாதி குணங்களுக்கு ஆஶ்ரயமான வாயு ஆகாசங்கள் அஸத் எனப்படும்; ஸத்தாயும் அஸத்தாயுமுள்ள பிரபஞ்சத்திற்கு ஆஶ்ரயமாய் அதாவது, அதிஷ்டானமாய்

விளங்குபவள் பரதேவதையாவள். ஆரோபிதமானவைகளு க்கு அதிஷ்டான ஸத்தையைத்தவிற வேறு ஸத்தை கிடையாது. அதிஷ்டானமானது ஆரோபிதங்களுக்கு ஸத்தாஸ்பூர்த்தியைத் தருதற்கு அவற்ரோடு அநுஸ்யூதமாய் விளங்குவது மிகப் பிரஸித்தமாம்.

ஸதஸதாஶ்ரயாயை நம: (225)

226. **सकला**—கலைகளோடு கூடியவள். கலைகள் உபாஸனையின் பொருட்டுக் கற்பிக்கப்பட்டவையாகும். சாந்தோக்ய உபநிஷத்தில் ஷோடஶகலாபுருஷோபாஸனப் பிரதிபாதகப் பிரகரணத்தில், கலை யென்பது அவயவமாகக் கூறப்பட்டிருக்கின்றது. சதுஷ்ஷஷ்டிகலை (வித்யை) களோடு கூடியவளென்ருவது, அல்லது, மகிழ்ச்சியைத்தரத்தக்க காந்தியோடுள்ள (சந்திர) கலையோடு கூடியவளென்ருவது பொருளாகும்.

ஸகலாயை நம: (226)

227. **सच्चिदानन्दा**—ஸத்து, சித்து, ஆநந்த ஸ்வரூபமாயுள்ளவள். முக்காலத்திலும் பாதிக்கப்படாதது ஸத்து. தன்னைவிட இதர ஜடப்பிரகாசத்தால் பிரகாசிக்காதது சித்து. பரமப் பிரேமைக்கு விஷயமாயிருப்பது ஆனந்தம் "**सत्यं ज्ञानमनन्तं ब्रह्म; विज्ञानमानन्दं ब्रह्म; आनन्दो ब्रह्मेति व्यजानात्; आनन्दं ब्रह्मणो विद्वान्न बिभेति कुतश्चन**" என்னும் ஶ்ருதிகள் இதற்குப் பிரமாணங்களாகும். வேதாந்த சாஸ்திரங்களால் கூறப்படும் பிரஹ்மத்தின் ஸ்வரூபலக்ஷணத்திற்கு லக்ஷ்யமாய் விளங்குபவள்.

ஸச்சிதானந்தாயை நம: (227)

228. **साध्या**—அடைதற்குரியவள். கர்மோபாஸனைகளின் **फल** (பயன்) ரூபமாயும், ஸாதன சதுஷ்டய ஸம்பத்தி

யுடைய அதிகாரிகளுக்கு பிரஹ்மவித்யாஸ்வரூப மஹா வாக்கிய ஶ்ரவண மநநாதிகளால், தனக்கு அபேதமாய் அடைதற்குரிய ஸ்வரூபமாயும் விளங்குபவள். **साध्वी** என்னும் மற்றொரு பாடரீதியாய், ஸாதுத்தன்மையை யுடையவளுக்கு ஸாத்வீயென்று பெயர். ஸகலசாஸ்திர பாரங்கதனுய் இருந்தாலும் ஸத்துவ குணத்தோடு கூடிய தைவிக ஸம்பத்துடையவன்தான் ஸாது அல்லது ஸதாசாரமுடையவனுவான். இவனே பரமேஶ்வரன். பரமேஶ்வரனுக்குத்தான் பதிவிரதையாயிருந்து கொண்டு ஸ்திரீலோகத்திற்குப் பாதிவ்ரத்ய ஸம்பிரதாயத்தைக் காட்டிக் கொடுப்பவள் என்பது பொருள்.

ஸாத்யாயை நம : (228)

229. **सद्गतिदायिनी**—புனராவ்ருத்தி (மறுபடியும் திரும்பி வருதல்) இல்லாது அகண்டாநந்தமாய் விளங்கும் நிலை ஸத்கதியாகும். அறியப்படுவதே கதியாம். “**ब्रह्मविदाप्नोति परम्**”; “**ब्रह्म वेद ब्रह्मैव भवति**”; “**ये पूर्वं देवा ऋषयश्च तद्विदुः ते तन्मया अमृता वै बभूवुः**” என்னும் ஶ்ருதிகளின்படி, பரதேவதையின் ஸ்வரூபமே முக்தி நிலையாமென்பது ஸித்தாந்தமாகும். **दायिनी** = தருபவள். ஸ்வஸ்வரூபத்தை மறைத்துள்ள (கற்பித) அக்ஞானத்தை நசிப்பிக்கச் செய்வதன் மூலமாய் ஸ்வப் பிரகாச ஆனந்தத்தை வெளிப்படுத்துதலே தருதல் என்பதன் பொருளாம். “**तदात्मानं स्वयमकुरुत**” என்னும் ஶ்ருதியின்படி கதி (**गति**) தானம் (**दानं**) இவைகளுக்கு அபேதமே ஸித்திக்கின்றது. அல்லது, ஸத்துவ குணப் பிரதானமான தேவயானம் முதலிய ஸத்கதிகளைத் தருபவள்.

ஸத்கதிதாயின்யை நம : (229)

230. **सनकादिमुनिध्येया**—ஸநகர், ஸநந்தனர், ஸநா தனர், ஸநத்குமாரர் என்னும் முனிகளால் தியானிக்கப் படுபவள். முனிகள் என்றால் ஜீவப் பிரஹ்மைக்கியத்தைச் சதா மனனம் செய்பவர்கள் என்று பொருள்; அபரோக்ஷ ஸாக்ஷாத்காரமடைந்தவர்களென்றும், லக்ஷணையால் பொருள் கொள்ளலாம். ஸநகாதிகள் ஞான வைராக்கியாதி ஸாதனங்கள் நிரம்பிய பிரஹ்மமானஸபுத்திரர்களாவர்; இவர்கள் மோக்ஷமார்க்கப் பிரவர்த்தகர்கள். "**त्वं वा अहमस्मि भगवो देवते अहं वै त्वमसि ; क्षेत्रज्ञं चापि मां विद्धि; आत्मानं चेद्विजानीयादहमस्मीति पूरुषः ; अथ योऽन्यां देवतामुपास्तेऽन्योऽसावन्योऽहमस्मीति न स वेद यथा पशुः ; मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति**" என்னும் ஶ்ருதி வாக்கியங்கள் அபேத ஞானஸாதன மனனத்தின் பிரமாணங்களாகும்.

ஸநகாதிமுனித்யேயாயை நம: (230)

231. **सदाशिवकुटुम्बिनी**—ஸதாசிவனைப் பர்த்தாவாக அடைந்தவள்.

ஸதாசிவகுடும்பின்யை நம: (231)

232. **सकलाधिष्ठानरूपा**—ஸகலத்திற்கும் அதிஷ்டான ஸ்வரூபமாயிருப்பவள். "**अथात आदेशो नेति नेति ; नेह नानास्ति किंचन**" என்னும் நிஷேத ஶ்ருதி வாக்கியங்களால் ஆரோபங்களை யபவாதம் செய்யின் அதிஷ்டானம் விளங்கும். "**सर्वं खल्विदं ब्रह्म**" என்னும் **बाध** பாதஸாமாநாதிகரண்யத்தாலும் அதிஷ்டானம் ஸித்திக்கும். காரிய காரணங்களுக்குள்ள பேத ஞானந்தான் பாதை யெனப்படும். ஒன்று மற்றொன்றாய்த் தோன்றுவது மயக்க வுணர்ச்சியாகும். " இது வல்ல; இது வல்ல" வென்று நிஷேதித்துக்கொண்டு சென்

ருல் ப்ரக்ருதியும் நிவர்த்தியாய் ஸ்வஸ்வரூப சித்சக்தி ஸர்வாதிஷ்டானமாய் அநுபவிக்கப்படும்.

ஸகலாதிஷ்டானரூபாயை நம : (232)

233. **सत्यरूपा**—ஸத்தியமே வடிவமாயிருப்பவள். பொய்யும் ஜடமுமல்லாதது ஸத்தியமாகும்; என்ருல், ஸச்சிதானந்த ஸ்வரூபமாயிருப்பவளென்பது பொருள். பரிணமவாதத்தை யநுஸரித்து தேஜஸ், அப்பு, அன்னம் என்னும் ஸத்ரூபமாயும், பரோக்ஷ ஞானவிஷயங்களால் அநுமேய பதார்த்தங்களாயும் விளங்குபவள். "**सच्च त्यच्चाभवत्**". என்பது ஶ்ருதி.

ஸத்யரூபாயை நம : (233)

234. **समाकृतिः**—ஸமமாகிய ஆக்ருதியை (ரூபத்தை) யுடையவள். ஸமம் என்ருல் அபின்னமாம்; ஸச்சிதானந்த பரப் பிரஹ்மத்திற்குச் சமமான ஸ்வரூபமுடையவள். அல்லது, கூடுதல் குறைவு இல்லாமல் சாஸ்திரத்தில் கூறப்பட்ட வடிவத்தையுடையவள். அல்லது, குணம், அழகு, வலிவு, வீர்யம், புகழ், காம்பீர்யம், தைர்யம், இங்கிதம் முதலியவற்றில் ஸதாசிவனுக்குச் சமமாய்ச் சிறந்து விளங்குவதோடு ஸர்வக்ஞத்வாதி குணங்களோடுள்ள மூர்த்தியாய் விளங்குபவள்.

அல்லது, ஜராயுஜாதி நான்குவித பிராணிகளிலும் அவ்வவற்றின் பிராரப்தத்தை யநுஸரித்து அவ்வச் சரீரங்களில் ஸமமாய் வஸிப்பதனுல் ஸமமானரூபத்தை யுடையவளாகும்.

அல்லது, என்றைக்கும் மாறுபாடின்றிய யௌவனத்தோடு கூடிய ரூபத்தையுடையவள்.

அல்லது, கர்ம ஸாக்ஷிணியாயிருப்பதால், அவரவர் செய்யும் கர்மாக்களுக்குத் தக்கபடி, ஸமமாய் அதாவது பக்ஷபாதமின்றி பலத்தைத் தருபவள். "समः सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम्; अङ्गुष्ठमात्रः पुरुषोऽन्तरात्मा सदा जनानां हृदये संनिविष्टः" என்னும் ஶ்ருதி ஸ்மிருதிகள் இங்கு கவனிக்கத்தக்கவையாம்.

ஸமாக்ருதயே நம: (234)

235. **सर्वप्रपंचनिर्मात्री**—ஸர்வப் பிரபஞ்சத்தையும் நிர்மாணம் செய்பவள்; இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் முக்காலத்திலும் இருப்பதாலும், அநாதியாயுள்ளதாலும், மோக்ஷபரியந்தம் விளங்குவதாலும் ஸர்வஶப்தவாச்சியமாயுள்ளது பிரபஞ்சமாகும். நன்ருய் விஸ்தரிக்கப்பட்டது பிரபஞ்சமாம். அல்லது "எல்லாப் பிரபஞ்சங்களையும்" எனப் பொருள் செய்யின், அவித்யாப் பிரபஞ்சம், வித்யாப் பிரபஞ்சம் என்பனவாதி பிரபஞ்சங்கள் சித்திக்கும்; இவற்றை நிர்மாணம் செய்பவள். நிர்மாணமென்பது தோற்றுவித்தலாகும். சித்சக்தியாயிருந்து ஞானப் பிரபஞ்சத்தையும், ஜடசக்தியாயிருந்து அவித்யாப் பிரபஞ்சத்தையும் நிர்மிக்கின்றனள் எனினும் பொருந்தும்.

ஸர்வப்ரபஞ்சநிர்மாத்ர்யை நம: (235)

236. **समानाधिकवर्जिता**—தனக்கு ஒப்பும் உயர்வுமற்றவள். குலம், சீலம், ஜாதி, குணம் முதலியவற்றில் ஸமானத் தன்மைக்கு ஒப்புமை யென்று பெயர். 'न तस्य प्रतिमास्ति; विश्वाधिको रुद्रो महर्षिः'; என்றும், "सर्वाधिपत्यं कुरुते महात्मा"; "एकमेवाद्वितीयं ब्रह्म"; "न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो लोक-

त्रये" என்றுமுள்ள ஶ்ருதி ஸ்ம்ருதிகள் இங்கு அறியத்தக்கன. பரதேவதையால் கௌரவிக்கப்படுதற்குரிய ஸமான வஸ்துவும் இல்லை; பூஜிக்கப்படுதற்குரிய அதிக (உயர்ந்த) வஸ்துவும் இல்லை யென்பது கருத்து. "**एकमेवाद्वितीयं**" ஆதலின்.

ஸமாநாதிகவர்ஜிதாயை நம: (236)

237. **सर्वोत्तुङ्गा**—காரியத்தின் அபேக்ஷையால் காரணத்திற்கு மேன்மையுண்டு. எல்லாவற்றையும் அபேக்ஷித்துப் பரதேவதைக்கு ஆதிக்யமுண்டு. ஆதலின் எல்லாவற்றையும் விட மேன்மையானவள். "**पादोऽस्य विश्वा भूतानि । त्रिपादस्यामृतं दिवि**" என்பது ஶ்ருதி.

ஸர்வோத்துங்காயை நம: (237)

238. **संगहीना**—பரதேவதையானவள் நிரவயவியாதலினாலும், தனக்கொரு காரணமில்லாததாலும், நிர்க்குணியாதலாலும், தனக்கொரு ஆஶ்ரயமின்மையாலும், நித்திய, சுத்த, புத்த, முக்த ஸ்வரூபிணியாதலாலும், (அநாத்ம ஜட வஸ்துக்களோடு) ஸம்பந்த மற்றவளாயிருத்தலினாலும் அஸங்க ரூபியாவள். அதாவது, ஸங்கமற்றவளென்பது கருத்து. "**असंगो न हि सज्जते**" என்பது ஶ்ருதி.

ஸங்கஹீநாயை நம: (238)

239. **सगुणा**—ஸத்யகாம ஸத்யஸங்கல்பாதி குணங்களோடு கூடியவள். "**गुणी सर्वविद्यः**" அல்லது, த்ரிமூர்த்தி ஸ்வரூபமான ஸத்துவ ரஜஸ் தமோ குணங்களோடு கூடியவள் எனினும் பொருந்தும்.

ஸகுணாயை நம: (239)

240. **सकलेष्टदा**—விரும்பும் யாவற்றையும் தருபவள். அன்றேல், ஜீவனைப்போல் பரதேவதைக்கு ஒரு விஷயத்தில் ஸாமர்த்தியமில்லை போலும் எனும் சங்கை நிகழக்கூடும். ஸர்வக்ஞத்வம், ஸர்வஶக்தித்வம் முதலியவை பரதேவதையின் ஸ்வபாவமாதலின் அம்பாளால் முடியாத காரியம் ஒன்று மில்லை யென்பது தீர்மானம். ஒரு வஸ்துவைப் பலர் இச்சித்தாலும், பல வஸ்துக்களை யொருவன் இச்சித்தாலும் ஜீவர்களது கர்மங்காரணமாக அவ்வவற்றை அடைவிப்பவள். ஜீவர்களது இச்சைக்கு அவர்களது முன் வினையன்றோ காரணம்? முன் ஜன்மத்தில் பாப கர்மம் செய்தவனுக்கு இந்த ஜன்மத்தில் ஸத்கர்மங்களில் இச்சையுண்டாகுமா? ஆதலின் இச்சை கர்மாதீனம். பரதேவதை இச்சிப்பனவற்றை மாத்திரம் கொடுக்கின்றாளே தவிர அதிகம் தருவதில்லை. அல்லது, யாகத்தினால் ஆராதிக்கப்பட்டு அதற்குத் தக்க பலத்தைக் கொடுப்பவள். "**अहं च सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च**" "**एष ह्येव साधु कर्म कारयति यमेभ्यो लोकेभ्य उन्निनीषति**" என்னும், ஸ்ம்ருதி ஶ்ருதி வாக்கியங்கள் இதற்குப் பிரமாணங்களாம். கர்மாக்களை ஈஶ்வரார்ப்பண புத்தியோடு நிஷ்காமமாய்ச் செய்யின் அது முக்திக்குக் காரணமாகின்றது; ஒரு காமனையை யுத்தேசித்துச் செய்யப்படும் காம்ய கர்மாவானது அற்பப் பயனைத்தந்து ஜனன மரணரூப பந்தத்திற்குக் காரணமாகின்றது. ஆதலின் காம்ய கர்மாக்கள் புத்திமான்களால் ஆதரிக்கப்படுபவை யன்று. அல்லது, மேல் கீழ் என்னும் பேதத்தோடு கூடியனவாயும் இச்சித்து அடைய விரும்பும் இஷ்ட ஸ்வரூபமானவையாயுமுள்ள மநுஷ்யாநந்தம் முதல் பிரஹ்மாநந்த மீறாகவுள்ள (ஸாங்குஶ) ஸுகங்களைத் தருபவள்.

ஸகலேஷ்டதாயைநம: (240)

241. **ककारिणी**—மூன்ருவது கண்டத்தின் இரண்டாவது வர்ணரூப க கார மென்னும் அவயவத்தை வாசகமாயுடையவள்.
ககாரிண்யை நம: (241)

242. **काव्यलोला**—ஸ்ரீ வால்மீகி, வேதவியாஸர் முதலிய மஹர்ஷிகளால் இயற்றப்பட்ட மஹாகாவ்யங்களில் வாச்சியார்த்த லக்ஷ்யார்த்த ஸம்பந்தமாய் விளங்குபவள். அல்லது, பக்திப் பெருக்கினுல் கவிகளால் செய்யப்பட்ட ஸ்தோத்திரங்களில் பிரீதி யுடையவள்.
காவ்யலோலாயை நம: (242)

243. **कामेश्वरमनोहरा**—மஹாகாமேஶ்வரருடைய மனத்தை ஹரிப்பவள்.
காமேஶ்வரமநோஹராயை நம: (243)

244. **कामेश्वरप्राणनाडी**—ஸ்ரீ காமேஶ்வரருக்குப் பிராணநாடி வடிவாய் இருப்பவள். நாடிகளில் பிராணன் எவ்விதம் ஸஞ்சரிக்கின்றதோ அவ்விதம் பரதேவதையாகும் நாடியில் காமேஶ்வரரது ஜீவிகை அதாவது இருப்பு இருக்கின்றது என்பது கருத்து. பஹிர்யாகத்தில் விஶஸனம் செய்யப்படும் பசுவினது ஹ்ருதயமானது மாம்ஸத்தினுல் செய்யப்பட்ட ஒரு தாமரைப் புஷ்பம் போல் இருக்கும். இதனடிப்பாகத்தில், எட்டு தளங்களோடுகூடியதாயும், கட்டை விரல் பிரமாணமுடைய வொரு துவாரத்தோடு கூடியதாயுமுள்ள ஒரு கர்ணிகையுண்டு. இக்கர்ணிகையின் துவாரத்திற்குச் சம்பந்தப்பட்டதா யுள்ள "புரீதத்" என்னும் ஒரு நாடியுண்டு. இந்த புரீதத் நாடியின் துவாரத்திலிருந்து இக்கர்ணிகைக்குக் கேஸரங்கள் போல் நூற்றெருரு நாடிகள்

புறப்படுகின்றன. ஸுஷும்நை யென்னும் பெயருடைய ஒரு நாடியானது மூலாதாரம் முதல் பிரஹ்மரந்த்ரம் வரையில் செல்லுகின்றது. இந்நாடியில் மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை யென்னும் ஆறு சக்ரங்கள் விளங்குகின்றன. யோக சாஸ்திரத்தில் பிரதிபாதிக்கப்பட்டபடி மேற்கூறிய சக்கிரங்களில் தளங்களும் அக்ஷரங்களும் உள்ளன. இங்ஙனம், ஷட்சக்கிரங்களோடு கூடிய ஸுஷும்நை யென்னும் பிரஹ்ம நாடியின் அடியில், ப்ரிதிவிக்கு அதிஷ்டான தேவதையும், தாமரைக் காம்பின் நூல்போல் அதிஸூக்ஷ்மமான சரீரத்தையுடையவளும், ஆவரணசக்தியுமான குண்டலினீ அதோமுகமாய்த் தூங்குகின்றனள். இதற்கு வலது பக்கத்தில் இளை (இடை) யென்னும் நாடியானது புறப்பட்டு புருவநடுவரை செல்கின்றது. இடது பக்கத்தில் பிங்களை யென்னும் நாடியானது புறப்பட்டு புருவ நடுவரை செல்கின்றது. இடை, பிங்களை வடிவ இவ்விரண்டு நாடிகளும் தம்பதி வடிவமாய் நேத்திரங்களில் விளங்கி ஜாக்கிராவஸ்தையை யுண்டுபண்ணுகின்றன. மனத்தை யுபாதியாய்க்கொண்டு ஸ்வப்னமும், அக்ஞானத்தை யுபாதியாய்க் கொண்டு ஸுஷுப்தியும் உண்டாகின்றன. ஜாக்கிராவஸ்தையில் ஸ்தூலசரீரத்தை யபிமானிக்கும் புருஷன் விஶ்வனென்றும், ஸ்வப்னத்தில் ஸூக்ஷ்ம சரீராபிமானி தைஜஸனென்றும், ஸுஷுப்தியில் காரண சரீராபிமானி பிராக்ஞனென்றும் கூறப்படுகின்றனர். ஸ்தூல, ஸூக்ஷ்ம சரீரங்களின் அவஸ்தைகளாகும் ஜாக்கிர ஸ்வப்னங்களின் போகங்களுக்கு ஸாதனமான கரணேந்திரியங்கள், காரணமான அக்ஞானத்தில் லயமடைந்திருக்கின்றன. இங்ஙனம் லயமாவது பிராரப்த வசத்தினுல் தான்

என்றறிதல் அவஶ்யம். "पुनश्च जन्मान्तरकर्मयोगात् स एव जीवः स्वपिति प्रबुद्धः" என்னும் பிரமாணத்தின்படி அதே பிராரப்த கர்மங்காரணமாக, ஜீவஸ்வரூபமானது புரீதத் என்னும் நாடியின் மூலமாக வெளிப்பட்டு அந்தந்த கோளகங்களை யடைகின்றது. இங்ஙனம், பிராரப்தத்தின் லயரூபமும் உத்போதரூபமுமாகும் இருவகை அவஸ்தைகளிலும் விளங்கும் ஜீவனது நிலையை, ஒரு அரசன் பல்லக்கிலிருந்து இறங்கித் தனது அரண்மனையில் புகுந்து, படிகளின் மேலேறி மெத்தைக்குச் சென்று, அந்தப்புரத்திலுள்ள தன்படுக்கை மேல் சயனித்துக் கொள்வதையும், அங்ஙனமே, படுக்கையினின்றும் எழுந்து வெளியே செல்வதையும், உவமித்துக்கூறலாம். ஸுஷுப்தியில், ஜீவனானவன் பிராக்ஞன் என்னும் பெயரையடைந்து, தன் ஹ்ருதயத்தை யுபாதியாகவுடைய பரமாத்மாவோடு ஐக்கியமாகின்றான். இதை அக்ஞானத்தினால் அவன் அறிவதில்லை; லிங்க சரீரமானது காரண வடிய அக்ஞானத்தில் லயமடைகின்றது. இங்ஙனமே, பிராணாதிகளும் ஸூக்ஷ்ம வடிவமாய் "ஆயுஸ்" என்னும் பெயரைப் பெற்றுச் சரீரத்தைக் காப்பாற்றுகின்றன. இங்ஙனம், இனிமேல் வரப்போகும் ஜாக்கிர ஸ்வப்னங்களின் போகங்களுக்கு அநுகூலமான கர்மங்களின் அநுபந்தத்தினால் பிராணதாரணமானது ஸுஷுப்தியில் ஸோபாதிக சைதன்யத்தால் "தான்" என்று அறியப்படுகின்றது. இந்த சைதன்ய ஸத்தையால்தான் பிராணன்கள் நாடிகளில் ஸஞ்சரிக்கின்றன. "न प्राणेन नापानेन मर्त्यो जीवति कश्चन । इतरेण तु जीवन्ति यस्मिन्नेतावुपाश्रितौ" ॥ என்னும் ஶ்ருதியை யநுஸரித்துப் பிராணநாடீ என்னும் பதம் லக்ஷணா வ்ருத்தியால் பரமாத்மாவை அறிவிக்கின்றது. காமேஶ்வரனுக்குப் பிராரப்த

கர்மத்தினுல் ஏற்பட்ட இத்தகைய சரீரமானது இல்லை யெனினும், உருக்கிய நெய்யானது உறைந்து கெட்டியாய்க் காணப்படுதல் போலப் பக்தர்களுக்கு அநுக்கிரஹம் செய்யும் பொருட்டுத் தான் லீலையாய் ஒரு சரீரத்தைக் கொள்ளுகின்றுனென்பது சாஸ்திர ஸம்மதமாகும். இந்த லீலாரூப சரீரத்திற்குப் பிராணநாடி வடிவமாய்ப் பரதேவதை இருக்கின்றனள் என்பது திரண்ட பொருளாம்.

காமேஶ்வர ப்ராணநாட்யை நம: (244)

245. **कामेशोत्संगवासिनी**—காமேஶ்வரனது இடது தொடையின் மேல் வஸிப்பவள். "**अनेकमन्मथाकारकामेशोत्संग-वासिनी**" என்பது லலிதாதாபநீய வாக்கியம்.

காமேஶோத்ஸங்கவாஸின்யை நம: (245)

246. **कामेश्वरालिङ्गिताङ्गी**—காமேஶ்வரனுல் அங்கீகரிக்கப்பட்ட அங்கத்தையுடையவள்.

காமேஶ்வராலிங்கிதாங்க்யை நம: (246)

247. **कामेश्वरसुखप्रदा**—காமேஶ்வரனுக்குச் சுகத்தைத் தருபவள். அல்லது, ஸச்சிதாநந்த பிரஹ்ம ஸாக்ஷாத்கார வடிவ காமேஶ்வர ஸுகத்தைச் சாதகர்களுக்குத் தருபவள். "**देवो भूत्वा देवानप्येति**" என்னும் நியாயத்தின்படி தனது பக்தர்களுக்குக் காமேஶ்வர அபேத ஞானம் தந்து, அதனுல் ஸச்சிதாநந்தகனவடிவ மோக்ஷமாம் நித்தியாநந்தத்தைத் தருபவள் என்பது பொருள்.

காமேஶ்வரஸுகப்ரதாயை நம: (247)

248. **कामेश्वरप्रणयिनी**—பரமாநந்தகனமான ஸ்வஸ்வரூபத்தில் காமேஶ்வரனுக்குப் பரமப் பிரேமையுண்டு.

இந்த பிரேமைக்கு விஷயமாய் விளங்குபவள் பரதேவதை யாவள். காமேஶ்வர ப்ரணயிந்யை நம : (248)

249. **कामेश्वरविलासिनी**—விலாஸம் என்பது தோற்ற மாகும். காமேஶ்வரனைக் கார்யரூபப் பிரபஞ்சமாய்த் தோற்றும்படி செய்பவள். பிரபஞ்சத் தோற்றம் ஜட சக்தியாகிய மாயையால் ஏற்படுவதாகும். இம்மாயைக்கு ஆஶ்ரயம் சித்சக்தியாகும்பரதேவதையே. “**विद्यांचाविद्यांच स्वयमेव भवति**” என்பது ஶ்ருதி.

காமேஶ்வரவிலாஸின்யை நம : (249)

250. **कामेश्वरतपस्सिद्धिः**—தபஸ் என்பது ஆலோசனையாகும். காமேஶ்வரன், சிருஷ்டிக்கு முன், ஸ்ருஷ்டவ்வியமான பிரபஞ்சத்தைப் பற்றி ஆலோசித்துச் சிருஷ்டி செய்தார். விசாரணையால் ஏற்பட்ட ஞானத்திற்குச் சித்தி யென்று பெயர். ஸ்திரீ புருஷ வடிவ கற்பித பேதத்தினால் ஜகத் சிருஷ்டிக்கு ஸாதனமாய் விளங்குபவள்.

காமேஶ்வரதபஸ்ஸித்த்யை நம : (250)

251. **कामेश्वरमनःप्रिया**—காமேஶ்வரனது மனத்திற்கு எல்லையில்லாத பிரேமை வடிவமானவள்.

காமேஶ்வரமன: ப்ரியாயை நம : (251)

252. **कामेश्वरप्राणनाथा**—காமேஶ்வரனது பிராண ரூபம் ஹிரண்யகர்ப்பனாகும். இத்தகைய ஹிரண்யகர்ப்பனைப் பரிபாலிப்பவள் ; அல்லது, காமேஶ்வரனது மஹிஷி (பத்னி)யாய் விளங்குபவள் என்றுவது பொருள் செய்யத் தகும். காமேஶ்வரப்ராணநாதாயை நம : (252)

253. **कामेश्वरविमोहिनी**—காமேஶ்வரனை நன்ருய் மோஹிக்கச் செய்பவள். பரதேவதை காமேஶ்வரரை விட வேருன வடிவத்துடன் விளங்கித் தம்பதிகள் என்னும் எண்ணமுண்டாகும்படி செய்கின்றனள். அபேத ஞான முடையவனுக்குப் பேத ஞானமுண்டாதல் மோஹமாகும். **ज्ञानिनामपि चेतांसि देवी भगवती हि सा । बलादाकृष्य मोहाय महामाया प्रयच्छति ॥** என்னும் தேவீ மஹாத்மியப் பிரமாணத்தின்படி மோஹத்தைச் செய்பவள் பரதேவதையேயாகும்.

அல்லது, ஒரு முகப்பட்டு விளங்கும் வ்ருத்தியை மறு முகமாய்த் திருப்புதலுக்கு மோஹமென்று பெயர். காமே ஶ்வரன் ஆவரணரஹிதஞய் ஸ்வஸ்வரூப பராஹந்தா வடிவ பரதேவதா ஸ்வரூப பரமாநந்த ஸாக்ஷாத்காரத்தில் ஸ்தாணு வைப் போல் ஸதா நிலைத்திருப்பதால் அவருக்கு விக்ஷேபரூப மோஹம் உண்டாகவே உண்டாகாது. ஜீவர்களின் போக்ய ரூபப் பிரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி லயங்களுக்குத் தான் ஆஶ்ரயமாய் இருப்பதால் காமேஶ்வரனிடத்தில் மோஹம் உபசாரமாகக் கூறப்பட்டதாகும். அந்தப்புரத்திற்குள் செ ன்ற ராஜனிடத்தில் பெண்ணுசையைக் கற்பிப்பது போல வென்பது கருத்து.

காமேஶ்வரவிமோஹிந்யை நம: (253)

254. **कामेश्वरब्रह्मविद्या**—காமேஶ்வரராகும் பிரஹ்ம ஸ்வரூபத்தை அறிவிப்பவள். "**यः साक्षादपरोक्षाद्ब्रह्म**" என்பது ஶ்ருதி.

காமேஶ்வரப்ரஹ்மவித்யாயை நம: (254)

255. **कामेश्वरगृहेश्वरी**—கிரஹிக்கப்படும் ஞானத்திற் குக் க்ருஹம் என்று பெயர். ஸர்வ ஞானங்களுக்கும் ஈஶ்

வரியாகி விஷயாதிஷ்டானமாய் விளங்கி யாவற்றையும் நிய மிப்பவள். அல்லது, காமேஸ்வரனையே தனக்கு ஈஸ்வரனாக (பதியாக) வுடையவள்.

காமேஸ்வர க்ருஹேஸ்வர்யை நம: (255)

256. **कामेश्वराह्लादकरी**—திருப்தியாலுண்டாகும் ஸு கத்திற்கு ஆஹ்லாத மென்று பெயர். பரமேஸ்வரன் நித்திய திருப்தன். நித்திய திருப்தித்துவம் பரதேவதா ஸ்வரூபம். ஆதலின் காமேஸ்வரனை நித்திய திருப்தனாய்ச் செய்பவள் பரதேவதையே.

காமேஸ்வராஹ்லாதகர்யை நம: (256)

257. **कामेश्वरमहेश्वरी**—உபாதியற்ற ஐஸ்வர்யத்தோடு கூடியவள் மஹேஸ்வரியாகும். காமேஸ்வரனை மஹேஸ்வர னாய்ச் செய்பவள் பரதேவதையே. "**भगश्शक्तिः भगवान् काम ईशः**" என்னும் ஶ்ருதிப்படி அம்பிகையே பகவதியாகும். "**ऐश्वर्यस्य समग्रस्य वीर्यस्य यशसः श्रियः । ज्ञानवैराग्ययोश्चैव षण्णां भग इतीरणा ॥**" "**तमीश्वराणां परमं महेश्वरं**" "**महान्प्रभुर्वै पुरुषः**" என் பவை ஈண்டு விசாரிக்கத் தக்க பிரமாணங்களாகும்.

காமேஸ்வரமஹேஸ்வர்யை நம: (257)

258. **कामेश्वरी**—மன்மதனாலுபாஸிக்கப்பட்ட காதி வித்யா ஸ்வரூபிணி.

காமேஸ்வர்யை நம: (258)

259. **कामकोटिनिलया**—தொண்ணூற்றாறு பீடங்களின் மத்தியில் விளங்குவது காமகோடி யென்னும் ஸ்ரீசக்கிரமா கும். ஸ்ரீசக்கிரத்தையே தனது நிலையமாக வுடையவள். காஞ்சீ நகரத்தில் விளங்குவது காமகோடி பீடமாகும்.

குறிப்பு:—ஶக்தி பீடங்கள் பதினெட்டு, இருபத்தி நான்கு, இருபத்தெட்டு, ஐம்பத்தொன்று, அறுபத்தி நான்கு, தொண்ணூற்ருறு, நூற்றெட்டு எனப் பலவகைப்படும். காஞ்சி காமகோடி பீடம் எல்லாப் பீடங்களிலும் சிறந்த தென்பது மிகப் பிரஸித்தமாம். இக்காமகோடி பீடத்தையே இருப்பிடமாகவுடையவள்.

காமகோடிநிலயாயை நம: (259)

260. **काङ्क्षितार्थदा**—பக்தர்கள் விரும்பியவற்றை யருள்பவள். அல்லது, பக்தர்கள் தன்னை யுபாஸித்துப் பிரஸன்னமாக வேண்டுமென்று தீவிரமாய் இச்சிப்பார் களேயாயின், பரதேவதை யவர்களுக்குப் பிரத்யக்ஷமாகித் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்னும் நான்கு புரு ஷார்த்தங்களையும், அவர்களது விருப்பமின்றியே அவர் கட்குத் தருபவள்.

காங்க்ஷிதார்த்ததாயை நம: (260)

261. **लकारिणी**—மூலவித்யையின் மூன்ருவது கண் டத்தின் மூன்ருவது வர்ணத்தின் வாச்சியமாய் இருப்பவள்.

லகாரிண்யை நம: (261)

262. **लभ्यरूपा**—சித்ரூப பரதேவதையின் ஞாபகத்தை யுண்டுபண்ணுபவற்றிற்கு ரூபங்கள் என்று பெயர். இவற் றிற்கு லக்ஷணங்கள் என்றும் வேறு பெயருண்டு. லக்ஷ ணம் ஸ்வரூபம், தடஸ்தம் என்று இருவகைப்படும். ஸகுண ரூப தடஸ்த லக்ஷணத்தையும், நிர்குணரூப ஸ்வரூப லக்ஷண த்தையும் உடையவள். அல்லது, ரூபத்தையும், உபலக்ஷண மாக நாமத்தையும் அடைந்தவள். முதலில் சித்சக்தி

மாயையை உபாதியாய்க்கொண்டு ஶப்த வடிவத்தைப் பெற்றுப் பின்னர் அர்த்தவடிவ ரூபத்தை யடைந்தனள் என்பது ஶாஸ்திரப் பிரஸித்தமாகும்.

லப்தரூபாயை நம: (262)

263. **लब्धधीः**—விகல்பத்தோடு கூடிய அந்தக்கரண வ்ருத்தியின் நிச்சய வடிவத்திற்கு "தீ" (புத்தி) யென்று பெயர். அந்த புத்திக்கு அதிஷ்டானமாய் விளங்குபவள்; என்றால், புத்தி தனக்கு அதிஷ்டானமாய்ப் பரதேவதையைப் பெற்றதென்பது கருத்து. அல்லது, ஞானத்தை வ்ருத்தியில் ஆரூடமான சைதன்ய மென்றுவது, சைதன்யத்தினுல் வியாப்தமான வ்ருத்தியென்றுவது கூறுவது வேதாந்த சாஸ்திர ஸித்தாந்தமாகும். ஜடமாயுள்ள வ்ருத்திக்கு ஜடவிஷயங்களைக் கிரஹிக்கும் ஸாமர்த்தியம் இன்மையின், சேதனஸம்பந்தமின்றேல் இந்த ஜகத்து ஒரே இருட்டாய்விடும்; அந்தக்கரணோபஹிதமான ஸ்வரூப சைதன்யமே வ்ருத்தியில் ஆரூடித்துப் பல (**फल चैतन्यं**) சேதனமாய் விளங்கிப் பிரகாசிக்கின்றது; "**ब्रह्मण्यज्ञाननाशाय वृत्तिव्याप्तिरिहेष्यते**" என்னும் நியாயத்தின்படி அடையப்பட்ட புத்தி வ்ருத்தியை யுடையவள். தத்துவமஸி முதலிய மஹாவாக்கியங்களின் சிரவணத்தினுல் உண்டான அகண்டாகார வ்ருத்தியினுல் அடையப்படுபவள். அல்லது 'தீ' என்னும் பதம் ஸர்வக்ஞத்துவம் முதலியவைகளைக் குறிப்பதாகும்: அத்தகைய ஸர்வக்ஞத்துவாதி ஈஶ்வர குணங்கள் யாரால் அடையப்படுமோ அவள்; "**यः सर्वज्ञः सर्ववित्**" என்பது ஶ்ருதி.

லப்ததியே நம: (263)

264. **लब्धवाञ्छिता**—பரதேவதை எல்லாக் காமனை களையும் அடைந்தவளாதலின் ஆப்தகாமை; அவளுக்கு இனி அடைய வேண்டியது ஒன்றுமில்லை யென்பது கருத்து.

லப்தவாஞ்சிதாயை நம: (264)

265. **लब्धपापमनोदूरा**—பாபம் நிறைந்துள்ள மனத்திற்குப் பாப மனமென்று பெயர். இத்தகைய மலின மனத்தைப் பெற்ற அதமாதிகாரிகட்கு அதிக தூரமானவள்; என்றால், அவர்களால் பரதேவதை அடைய முடியாதவள் என்று பொருள். அறியமுடியாதவள் என்பது கருத்து. "**अन्यत्र धर्मादन्यत्राधर्मादन्यत्रास्मात्कृताकृतात्**" என்பது ஶ்ருதி. "**तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति**" என்னும் பிரமாணத்தின்படி அந்த அந்த வர்ணாஶ்ரமங்களுக்கு விகிதமான கர்மாக்களை ஈஶ்வரார்ப்பண புத்தியோடு நிஷ்காமமாய்ச் செய்யின் அவை சித்த சுத்தி அதாவது, மனத்திலுள்ள மலமாகும் பாபத்தை நிவர்த்தித்தல் மூலமாய் ஆத்ம ஞானத்திற்குச் சாதனமாகின்றதென்பது உண்மை; இங்ஙனமன்றி இதற்கு மாறாக ஸகாமனையோடு செய்யப்படுமேயாயின் அவை துக்கப் பிராப்திக்குச் சாதனமாய்ப் பாபவாஸனையை அதிகப்படுத்தி ஸ்வாத்மரூப பரதேவதையை அறிதற்குக் கூடாமற் செய்யும்.

லப்தபாபமனோதூராயை நம: (265)

266. **लब्धाहंकारदुर्गमा**—அஹங்காரமென்பது அபிமானமாகும். தானல்லாத அநாத்மாவைத் தான் என்று உணர்வது அபிமானமாகும். இது அத்தியாஸம்; இது அக்ஞானத்தினாலுண்டாவது; அஹங்காரம் என்பதனோடு

உபலக்ஷணமாய் எல்லா அஸுர ஸம்பத்துகளேயும் அதாவது, காமக் குரோதாதிகளேயும் கொள்ளல் வேண்டும். இத்தகைய ராஜஸ தாமஸ குணங்களேப் பிரதானமாய்க் கொண்டுள்ள அஹங்கார முற்றவர்களுக்கு, எத்தகைய கஷ்டமான ஸாதனங்களே யப்பியஸிப்பினும், அடைய முடியாதவள்.

அஹங்காரிகளுக்கு ஸத்துவகுணமின்மையால் தேஹம், இந்திரியம், மனம் முதலியவற்றிற்குச் சுகம், விவேகம், தைர்யம் முதலியன இல்லவே இல்லே.

அன்றியும் விக்ஷேப சக்திப் பிரதானமான ரஜோகுணமும், ஆவரண சக்திப் பிரதானமான தமோ குணமும் அவர்களிடத்தில் மேம்பட்டு விளங்குதலால், விவேகஞானத் தடைகளான நித்திரை, ஆலஸ்யம், குரு வேதம் முதலியவற்றில் சிரத்தையின்மை, விருப்பு வெறுப்புக் களாலடையும் ஸுகதுக்காநுபவம், முதலிய ஆஸுரஸம்பத்திகள் அஹங்கார முடையவர்களிடத்தில் காணப்படும். இத்தகைய சித்தவ்ருத்தியில் பரதேவதை விளங்கமாட்டாள்; மற்ருே ஜனன மரணப் பிரவாஹரூப ஸம்ஸாரமே விளங்கும். "**तानहं द्विषतः क्रूरान्**" என்பது பகவான் வாக்கியம். ஆதலின், அபிமான மற்ற உத்தமபுருஷர்களால் ஆத்மலாபத்தின் பொருட்டு சுத்த ஸத்துவப் பிரதான சித்தத்தில் ஸதா பாவிக்கப்படுபவள் என்பது திரண்டபொருளாம். "**यतयः शुद्धसत्त्वाः**" என்னும் ஶ்ருதி இங்கு அறியத்தக்கது.

லப்தாஹங்காரதுர்க்கமாயை நம : (266)

267. **लब्धशक्तिः**—ஸகல ஸாமர்த்தியங்களே யுடையதும் ஸம்பவிக்கக் கூடாதவற்றையும் ஸம்பவிக்கச் செய்யக் கூடியதுமான (**अघटनघटनापटीयसी**) மாயாசக்தியை யுடைய

வள். "**ते ध्यानयोगानुगता अपश्यन्, देवात्मशक्तिं स्वगुणैर्निगूढाम्**" என்பது ஶ்ருதி.

லப்தஶக்த்யை நம: (267)

268. **लब्धदेहा**—தனது இச்சையினாலேயே பெற்ற ஒரு சரீரத்தை யடைந்தவள். இந்த சரீரமானது, கர்மம் காரணமாக ஜீவர்களால் அடையப்படும் சரீரம் போல்வது அன்று; "**निजलीलाङ्गीकृतललितवपुषं**" என்னும் பிரமாணப்படி தானேலீலையாகக் கொண்ட சரீரமாகும். ஆயினும் தன்னிடத்தினின்றும் தோற்றுவித்த மாயாசக்தியினால் "**पतिश्च पत्नी चाभवताम्**" என்னும் ஶ்ருதிப்படி தம்பதிகளின் சரீரத்தை யடைந்ததாகக் கற்பிக்கப்படுகின்றது.

லப்ததேஹாயை நம: (268)

269. **लब्धैश्वर्यसमुन्नतिः**—ஐஶ்வர்யங்களின் ஆதிக்கியத்தை அதாவது முடிவை யடைந்தவள். "**तमीश्वराणां परमं महेश्वरम्**" என்பது ஶ்ருதி. **नान्तोऽस्ति मम दिव्यानां विभूतीनां परंतप**" என்பது ஸ்ம்ருதி. "**सर्वेश्वर एष सर्वज्ञ एषोऽन्तर्याम्येष योनिः सर्वस्य**" என்னும் ஶ்ருதிப்படி உபாதியற்ற ஐஶ்வர்யமே மகத்தானது. இத்தகைய மஹைதைஶ்வர்யம் வித்யோபாஸகர்களான துர்வாஸர், ஹயக்ரீவர், அகஸ்தியர் முதலிய மஹர்ஷிகளிடத்திலுங் காணப்படுதலால் பரதேவதையின் ஐஶ்வர்ய ஆதிக்கத்தைச் சொல்லமுடியுமா?

லப்தைஶ்வர்யஸமுந்நத்யை நம: (269)

270. **लब्धवृद्धिः**—வ்ருத்தி (**वृद्धि**) என்பது வியாபகமான பரிபூர்ண பாவமாகும். கர்ம ஜன்யமான அவயவங்களின் வளர்ச்சிக்கு நாசமுண்டு; வியாபகம் அத்தகைய

தன்று; பரிபூர்ண பூமாஸ்வரூபமாய் விளங்குபவள் என்பது கருத்து. "स वा एष महानज आत्मा न वर्धते कर्मणा" என்பது ஶ்ருதிப் பிரமாணம். "निष्क्रियं निष्कलं" என்னும் ஶ்ருதி பரதேவதைக்கு அவயவங்களை நிஷேதிக்கின்றது. ஆதலின் நாச ரஹித பூமாஸ்வரூபிணி யென்பது பொருள். இத்தகைய வியாபக ஸ்வரூபமானது, ஜன்யமாயும், தன்னை யாஶ்ரயித்தனவாயு முள்ள உபாதிகளால் ஸ்வஸ்வரூபமாகவே அறியப்படுகின்றது.

.லப்தவ்ருத்தயே நம: (270)

271. **लब्धलीला**— இதரர்களின் பிரயோஜனத்தின் பொருட்டோ அல்லது, தன் ஸந்தோஷத்தின் பொருட்டோ ஸமயோசிதமாய்ச் செய்யப்படும்விளையாட்டுக்கு லீலை யென்று பெயர். ஶ்ருங்காராதி நவரஸங்களோடு கூடிய லீலைகளை யுடையவள்.

லப்தலீலாயை நம: (271)

272. **लब्धयौवनशालिनी**— பிரஹ்மாபின்ன பரதேவதைக்குச் சரீரமின்மையால் பிறத்தல், வளர்தல், தேய்தல், நசித்தல் முதலிய விகாரங்களுமில்லை. என்றும் ஒரு தன்மையாயுள்ள நித்திய யௌவனத்துடன் விளங்குபவள். "**अजरोऽमृतोऽभयो ब्रह्म**" என்பது ஶ்ருதி.

லப்தயௌவனஶாலின்யை நம: (272)

273. **लब्धातिशयसर्वाङ्गसौन्दर्या**—ஸுந்தரம் என்பது அழகு. ஸுந்தரத்தின் பாவம் ஸௌந்தர்யம். ஸாமுத்ரிகா சாஸ்திர லக்ஷணப்படி பரதேவதையின் எல்லா அங்கங்களும் அமையப் பெற்றிருப்பதனுல் மிக்க அழகோடு கூடியவள்.

"न तस्य प्रतिमास्ति" என்னும் ஶ்ருதிப்படி ஒப்புவமை யற்ற மனோஹரமான அழகுடம்போடு கூடியவள்.

லப்தாதிஶயஸர்வாங்கஸௌந்தர்யாயை நம: (273)

274. **लब्धविभ्रमा**—ஸர்வாத்மிகையாய் இருப்பதால் பரதேவதையின் ஸர்வ கர்த்ருத்வம் பாலக்கிரீடை போல் இருக்கின்றது. என்றால், குழந்தைகள் விளையாடுவது போல் சிருஷ்டி முதலிய பஞ்ச கிருத்தியங்களையும் பரதேவதை செய்கின்றாள் என்பது கருத்து.

லப்தவிப்ரமாயை நம: (274)

275. **लब्धरागा**—ஸஜாதீய அதாவது ஸமஸத்தை யான வஸ்துக்களின் ஆசைக்கு ராகம் என்று பெயர். "**सोऽकामयत**" என்னும் ஶ்ருதிப்படி ஜகத் ஸ்ருஷ்டி ராகத்தின் பூர்வகமாகவே ஏற்பட்டிருக்கின்றது. இத்தகைய ராகம் யாரால் அடையப் பட்டுள்ளதோ அவள்.

லப்தராகாயை நம: (275)

276. **लब्धपतिः**—தன் இஷ்டப்படி ஸ்வேச்சையாய் ஸ்வயம்வரத்தில் ஸ்ரீகாமேஶ்வரரைப் பதியாக அடைந்தவள். "**तस्मात्स्वातन्त्र्य नाशस्ते न भवेत्प्रियसंगमात्। भजस्व पुरुषं कंचिल्लोकानुग्रहकाम्यया**" என்னும் லலிதோபாக்யான வசனம் இங்கு அறியத்தக்கது.

லப்தபதயே நம: (276)

277. **लब्धनानागमस्थितिः**—கர்மம், உபாஸனை, ஞானம் இம்மூன்று காண்டங்களையும் இவற்றிற்குச் சம்பந்தப் பட்ட அங்கங்களையும் நன்றாய், பலவிதமாக, ஸாக்ஷாத் தாகவோ பரம்பரையாகவோ, ஆத்மஸ்வரூப ஸாதனங்

களாக நிரூபிக்கும் தன்மையுடையவை ஆகமங்கள் அல்லது வேதங்களாகும். இவற்றை ஸம்ரக்ஷிக்கும் தன்மையைப் பெற்றவள்.

அல்லது, கர்மம், பக்தி, ஞானமென்னும் மூன்று காண்டங்களையும் (ஸாதனங்களாக) கூறும் ருக், யஜுஸ், ஸாம, அதர்வண மென்னும் நான்கு வேதங்களிலும் பிரதிபாதிக்கப்படும் பூஜ்யதையைப் பெற்றவள். "**सर्वे वेदा यत्रैकं भवन्ति**" என்னும் பிரமாணப்படி, ஸ்வத: பிரமாண (அதாவது தமக்குத்தாமே பிரமாணங்களாகவுடைய) வேதங்களைப் பிரளய காலத்தில் ரக்ஷித்துச் சிருஷ்டியின் ஆரம்பத்தில் ஹிரண்ய கர்ப்பனுக்கு அவ்வேதங்களை யேற்றத் தாழ்வுகளின்றிப் பிரகாசிப்பிக்கின்றனள். இதுவுமன்றி அவ்வேதங்களில் கூறப்பட்ட தர்மங்களைத் தானே அநுஷ்டித்து ஒரு பதியை வரித்துத் தம்பதி பாவத்தை யடைந்து மற்ற ஜீவர்களையும் அநுஷ்டிக்கும்படி செய்கின்றனள். "**वेदशास्त्रे ममैवाज्ञे वर्त एव च कर्मणि।**" "**यदि ह्यहं न वर्तेयं जातु कर्मण्यतन्द्रितः। उत्सीदेयुरिमे लोका न कुर्यां कर्म चेदहम्॥**" என்னும் பகவத் வசனங்கள் இங்கு பிரமாணங்களாம்.

குறிப்பு :—**लब्धानंगागमस्थितिः॥** என்றொரு பாடாந்தரமுண்டு. அநங்கன் மன்மதனுவன்; அவனது ஆகமம் காம சாஸ்திரம்; சிருங்காரரஸப் பிரதானமானது. இந்த சாஸ்திரப் பிரதிபாத்யையாயுள்ளவள். "**आदिमरसावलंबाम्**" "**शृङ्गाररस प्रभाव चिल्लहरीं**" என்பவை இதற்குப் பிரமாணங்களாகும்.

லப்தநாநாகமஸ்தித்யை நம: (277)

278. **लब्धभोगा**—போக மென்பது ஸுகமாத்திர அநுபவமாகும். துக்கத்திற்குப் பின் ஏற்படும் ஸுகாநுபவம்

ஜீவர்களுக்குண்டு. பரதேவதை, உபாதியற்றுள்ள தன்மை யால், ஸ்வரூபாநந்தாநுபவ முடையவளாவள். இந்த ஆநந்த போகம் நித்திய ஸித்தமானது. ஜீவர்களது ஸுகம், இஷ்ட பதார்த்தத்தைப் பெற்ற போது அந்தர்முகப்பட்ட நிச்சல வ்ருத்தியால் ஏற்படுகின்றது. இது க்ஷணிகம்.

லப்தபோகாயை நம: (278)

279. **लब्धसुखा**—ஸ்வஸ்வரூப ஆநந்தமும் அவ்வாநந்தத்தை யடைதற்கான ஸாதனங்களும் யாரால் அடையப்பட்டனவோ அவள்.

லப்தஸுகாயை நம: (279)

280. **लब्धहर्षाभिपूरिता**—முகப் பிரஸன்னம், சரீர புஷ்டி முதலியவற்றால் ஊகித்தறியக்கூடியதும், திருப்தி நிமித்தமாய் ஏற்படக்கூடியதுமான சித்த உல்லாஸ விசேஷம் ஹர்ஷமென்று கூறப்படும். இதையே இஷ்ட பதார்த்த அநுபவத்தில் ஏற்படக்கூடிய ஸந்தோஷ மென்றும் கூறலாம். இத்தகைய ஸந்தோஷத்தால் யாதொரு மாறுபாடு மின்றி என்றும் நிறைந்திருக்கும் தன்மையைப் பெற்றவள். இந்த ஹர்ஷம், கால தேச வஸ்து பரிச்சேதமின்றி நிரங்குசமா யிருத்தலின் இதற்கு ஹாநியில்லை. ஆதலின் நித்தியப் பிரஸன்ன முகத்தோடு கூடியவள் பரதேவதை யென்பது இரண்டா பொருளாகும். **पूजिता**-என்றொரு பாடாந்தரமுண்டு. இதன் படி, ஸ்வதஸ்ஸித்த நித்தியாநந்த துரீய அகண்டாகார வ்ருத்தியால் பூஜிக்கப்படுபவள். அபேதாநுஸந்தானமே பூஜை யாகுமென்றறிதல் அவஶ்யம்.

லப்தஹர்ஷாபிபூரிதாயை நம: (280)

281. ह्रींकारमूर्तिः— வாச்சிய வாசகங்களுக்குள்ள அபேத ஸம்பந்தத்தினுல் ஹ்ரீம் சப்தத்திற்கு அர்த்த ரூப மூர்த்தியாய் விளங்குபவள்.

ஹ்ரீங்காரமூர்த்யை நம: (281)

282. ह्रींकारसौधशृङ्गकपोतिका—ஸௌதம் என்பது மாளிகை. ஹ்ரீங்காரமாகின்ற திருமாளிகையின் சிகரத்தில் வஸிக்கும் பெண்புருவாய் விளங்குபவள். நிருபாதிகமாயுள்ள உபசாந்தியில் வெளிப்படும் ஆநந்தாநுபவத்திற்குக் காரணமாயிருத்தலின் ஹ்ரீங்காரத்தை மாளிகைக்குச் சமானமாய்க் கூறப்பட்டது. மாளிகை வெண்மையாயிருப்பது போல் ஹகாரமும் வெண்மை. மாளிகையின் அடிச்சுவற்றின் செங்கல் சிவப்பாயிருப்பது போல் ரேபம் சிவப்பு. ஹகாரத்தின் மேலுள்ள ஈகாரத்திற்குச் சிகரம் உவமை. அதற்கு மேலுள்ள பிந்து ஸர்வப்ரக்ருதிபூத சப்தார்த்தங்களின் ஸ்வரூபமாய் இருப்பதால் சந்திரசாலை. அதாவது சிகரத்தின் மேலுள்ள கூண்டில் விசித்திர ரூபமாய் ஏகாக்கிரத்தோடு ஆண் புருவைப் பார்த்துக் கொண்டிருக்கும் பெண் புருவாக அம்பிகையைக் கூறப்பட்டது.

ஹ்ரீங்காரஸௌதஶ்ருங்ககபோதிகாயை நம: (282)

283. ह्रींकारदुग्धाब्धिसुधा—ஹ்ரீங்காரமாகின்ற திருப்பாற்கடலுக்கு அம்ருதம் போன்றவள். பாற்கடலானது வெண்மை நிறமாகவும் அம்ருதத்திற்கு ஆஶ்ரயமாகவும் இருப்பது போல ஹ்ரீங்காரமும், தனக்குள்ளடங்கியுள்ள ஹகாரத்தால் வெண்மையாகவும் ஸ்வஸ்வரூப ஆத்மாவையறிந்து அம்ருத (நித்திய) மாய் இருப்பதற்குக் காரணமாயிருக்கின்றது. பாற்கடலுக்குள் மறைந்துள்ள அம்ருத

மானது கடைந்த காலத்தில் வெளிப்படுவது போல, ஹ்ரீங் காரமாகின்ற பாற்கடலில் அம்ருதமாகிய பரதேவதை மறைந்திருந்து அநுஸந்தானமாகின்ற மத்தால் கடைந்த போது அபேதஞானமாக வெளிப்படுகின்ருள் என்பது திரண்ட பொருளாகும்.

ஹ்ரீங்காரதுக்தாப்திஸுதாயை நம: (283)

284. **ह्रींकारकमलेन्दिरा**—ஹ்ரீங்காரமாகின்ற தாம ரைப்பூவில் வஸிக்கும் லக்ஷ்மியைப் போன்றவள். ஹ்ரீங் காரம் பலவர்ணங்களோடு கூடி ஸகல புருஷார்த்தங்களை யும் கொடுப்பதாலும் பரமப் பிரீதிக்கு விஷயமாயிருப்ப தாலும் தாமரைப் புஷ்பத்தோடு உவமிக்கப்பட்டது. பர தேவதை ஹ்ரீம் பீஜத்தின் வாச்சியார்த்தமாய் இருப்பதால் கமலத்தின் மேல் விளங்கும் லக்ஷ்மியோடு உவமிக்கப்பட் டது. ஹ்ரீங்காரமாகும் கமலத்திற்கு வாச்சியமாய் விளங்கி, லக்ஷ்யார்த்தத்தில் சிவஜீவைக்கிய பிரஹ்ம வித்யா ரூபிணியாய்ப் பரதேவதை விளங்குகின்ருளென்பது தாத் பர்யார்த்தமாம். ஹ்ரீங்காரகமலேந்திராயை நம: (284)

285. **ह्रींकारमणिदीपार्चिः**— ஹ்ரீங்காரமாகும் மணி விளக்கின் ஒளிபோன்றவள். மணிவிளக்கு என்பது பிரகா சம் பொருந்திய இரத்தினமேயாகும். விளக்கிற்குக் காற் றடிப்பது, எண்ணெ இல்லாமற் போவது முதலிய தடைகள் இருப்பது போல் இம்மணி விளக்குக்கு யாதொரு தடையு மில்லை; நித்தியமாய் இருக்கும். ஆதலின் இவ்விளக்கோடு ஹ்ரீங்காரத்தை ஒத்திட்டுக்கூறப்பட்டது. ஹ்ரீங்காரமா கின்ற விளக்கின் பிரகாசமே பரதேவதை. மணிவிளக்காகும் ஹ்ரீங்காரத்தை உபாஸனை செய்பவர்களுக்கு, அக்ஞான

மாகின்ற பேரிருள் நீங்கித் தமக்குப் பரமப் பிரீதியான ஆத்மஸ்வரூபத்தின் அடைவால் அவர்கள் நித்திய ஸுகத்தை யடைகின்றனர்.

ஹ்ரீங்காரமணிதீபார்ச்சிஷே நம: (285)

286. ह्रींकारतरुशारिका— ஹ்ரீங்காரமாகும் தருவில் வஸிக்கும் பெட்டைக் கிளி போன்றவள். தன்னிடத்திலுள்ள பழங்களையடைய வேண்டி மேலேறியவர்களைக் கீழே விழாமல் காப்பாற்றுந் தன்மையுடையது தரு (விருக்ஷம்). புருஷார்த்தங்களை வேண்டித் தன்னை யுபாஸிப்பவர்களைக் காப்பாற்றுந் தன்மையுடையது ஹ்ரீங்காரம். ஆதலின் ஹ்ரீங்காரத்திற்கும் தருவிற்கும் உவமை. எங்ஙனம் கிளி பழக்க மேலிட்டால் மனிதர்களைப்போல் பேசுமோ அங்ஙனமே பரதேவதையும், லோக யாத்திரையின் பூத பவிஷ்யத் வர்த்தமான மென்னும் மூன்று காலங்களின் ஞானத்தையும் அறிந்து கொண்டு ஜீவர்களது சுபாசுபங்களின் அடைவை, வாச்யார்த்தமாய்க் கர்மோபாஸனா காண்டங்களில் கூறி ஜீவர்களை மகிழ்விக்கின்றனள். ஆதலின் பரதேவதையைக் கிளியோடு ஒப்புவமை கூறப்பட்டது.

ஹ்ரீங்காரதருஶாரிகாயை நம: (286)

287. ह्रींकारपेटकमणिः—ஹ்ரீங்காரமாகின்ற பெட்டிக்குள் விளங்கும் இரத்தினம் போன்றவள். இரத்தினத்தைப் பெட்டியானது ரஹஸ்யமாய் மறைத்து வைப்பது போல் பரதேவதையை ஹ்ரீங்காரம் மிகவும் ரஹஸ்யமாய் வைத்துக் கொண்டிருக்கின்றது. பெட்டிக்குள் வைக்கப்பட்டுள்ள வைடூர்யம் முதலிய மணிகள் தமது பேரொளியால்,

பெட்டியின் உள்பாகத்தையும் வெளிப்பாகத்தையும் பிரகாசிப்பிக்கச் செய்வதுமன்றி இதரமான வஸ்துக்களினின்றும் அப்பெட்டியை வேறுகப் பிரித்து அறிவிக்கின்றன. இங்ஙனமே, பரதேவதையாகும் ஸ்வப்பிரகாசமணியும் தனது வாசகமான ஹ்ரீம் பீஜத்தைப் பிரகாசிக்கச் செய்து விமர்சப் பிரணவமாகும் அப்பீஜத்தை இதர பீஜங்களினின்றும் வேறுபிரித்து அறிவிக்கின்றது.

ஹ்ரீங்காரபேடகமணயே நம: (287)

288. **ह्रींकारादर्शबिम्बिता**—ஹ்ரீங்காரமாகும் நிலைக் கண்ணுடியில் பிரதிபிம்பிக்கப்பட்டவள். ஹ்ரீம் பீஜமானது, மற்றொரு பிரமாணத்தை யபேக்ஷிக்காத வேதத்தில் அந்தர்க்கதமாயிருத்தலிஞலும், தோஷரஹிதமாய் இருத்தலிஞலும் கண்ணுடிக்கு உவமையாய்க் கூறப்பட்டது. இதில் பிரதி பிம்பித்தவள் பரதேவதையாகும்; மாயா பிரதிபிம்ப சைதன்யமே ஜகத்காரணமாம். "तत्सृष्ट्वा। तदेवानुप्राविशत्" என்னும் பிரமாணப்படி சிருஷ்டிக்கப்பட்ட ஜகத்திற்குள் அந்தர்யாமியா யிருந்துகொண்டு கண்ணுடியில் தோன்றும் முகம்போல் பிரகாசிக்கின்றவள் பரதேவதையே யாகும்.

ஹ்ரீங்காராதர்ஶபிம்பிதாயை நம: (288)

289. **ह्रींकारकोशासिलता**—ஹ்ரீங்காரமாகும் உறைக்குள் இருக்கும் நீண்ட வாளைப்போன்றவள். ஹ்ரீங்காரமே கத்தியுறை. பரதேவதையை மின்னல் கொடிபோல் ஒளிரும் நீண்ட வாளுக்கு உவமை கூறப்பட்டது. சத்துருக்களால் எற்படும் துன்பத்தை யொழிக்குந் தன்மை கூரிய வாளுக்குண்டு. ஞானவாள்வடிவ பரவேதையோவெனின், காமக் குரோதாதி ஆந்தர சத்துருக்களால் நேரிடும் துன்

பத்தை யொழித்து அபயரூப ஆநந்த நிலையை அருள்பவள். பட்டாக்கத்தியை எப்போதும் பஹிரங்கமாய் வைத்திருப்பதில்லை. அவஶ்ய மானபோது உறையிலிருந்து வெளியே யெடுப்பதும் மற்ற காலத்தில் உறையுள் வைத்திருப்பதும் வழக்கம். இங்ஙனமே பரதேவதையும், ஹ்ரீம் பீஜத்தில் வாச்சிய வாசக ஸம்பந்தமாய்க் கூடமாய் விளங்குகின்றாள். லக்ஷ்யார்த்தத்தினால் நன்கு பிரகாசிக்கின்றனள். அப்போது அக்ஞானமாகும் சத்ரு நாசமாவான்.

ஹ்ரீங்காரகோஶாஸிலதாயை நம: (289)

290. ह्रींकारास्थाननर्तकी—ஹ்ரீங்காரமாகும் ஸபாமண்டபத்தில் நடியாய் விளங்குபவள். ஹ்ரீங்காரம் எல்லோராலும் ஆஶ்ரயிக்கப்படுவதால் ஸபாமண்டபத்திற்கு ஒப்புவமை கூறப்பட்டது. நடன மென்பது பாவ (भाव) தாளங்களுக்கு ஒத்துப் பூமி ஸம்பந்தமான சரண வின்னியாஸத்தோடும், அபிநயங்களோடு கூடிய அங்க சேஷ்டைகளோடும் செய்யப்படுங் கூத்து. இங்ஙனம் நடிப்பவளுக்கு நர்த்தகி யென்று பெயர். சித்சக்தி ஹ்ரீங்காரவாச்சியார்த்தத்தினால், மாயை முதலியவற்றோடு, ஸம்பந்தப்பட்டும் ஸம்பந்தப் படாமலுமுள்ள நிமித்தத்தினால், மிகவும் விசித்திரமான கார்ய (பிரபஞ்ச)த்தை உத்பாதனஞ் செய்து அதில் அநுப்பிரவேசித்து நிர்விகாரியாயிருப்பினும் விகாரப்பட்டது போல் காணப்படுகின்றது. ஜீவர்களின் புண்ணிய பரிபாகத்தின் தாரதம்மியத்தினால் அவரவர்களின் மனோவ்ருத்திக்குத் தக்கபடியும், பக்திக்குத் தக்கபடியும், சித்த சுத்திக்குத் தக்கபடியும் அபீஷ்டங்களை யருளுகின்றனள். ஆதலின் நர்த்தகியோடு உவமை.

ஹ்ரீங்காராஸ்தானநர்த்தக்யை நம: (290)

291. **ह्रींकारशुक्तिकामुक्तामणिः**—ஹ்ரீங்காரமாகும் முத்துச் சிப்பியின் நல்ல முத்துமணியாய் விளங்குபவள். சிப்பியென்பது நீலநிறத்தோடு கூடிய ப்ருஷ்டபாகத்தோடு முக்கோண வடிவாயுள்ள ஒன்றாகும். ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் பெய்யும் மழைத் துளியானது, ஸமுத்திரத்திலுள்ள முத்துச் சிப்பிக்குள் விழ, அத்துளி முத்துவடிவமாய்ப் பரிணமிக்கின்றது. இங்ஙனமே, ஸத்துவ ரஜஸ் தமோகுணாத்மக ஹ்ரீங்காரத்தில் அதிஷ்டித்துள்ள சித்சக்தி, வியாபகமாயிருப்பினும், அதிமனோஹரமாயும், வாக்கினாலும் மனத்தினாலும் சொல்லவும் நினைக்கவும் முடியாத அவ்வளவு அழகு வாய்ந்த மூர்த்தியாயும் விளங்குகின்றது. எங்ஙனம், முத்தை வேண்டுபவர்க்கு முத்துச்சிப்பி எவ்வளவு அவஶ்யமோ அங்ஙனமே பரதேவதா ஸாக்ஷாத்காரத்தை வேண்டுபவர்க்கு ஹ்ரீங்கார (உபாஸன)ம் அத்தியாவஶ்யமானதாகும்.

ஹ்ரீங்காரஶுக்திகாமுக்தாமணயே நம: (291)

292. **ह्रींकारबोधिता**—ஹ்ரீம் என்னும் மூலமந்த்ரத்தின் லக்ஷணையினால் அறிவிக்கப்படுபவள். (போக்கிய) விஷயங்களுக்கும் இந்திரியங்களுக்கும் ஸம்பந்தம் இருந்த போதிலும், விஷயஞானமானது விதியை யபேக்ஷிக்காமலே தானேயுண்டாகின்றது. ஆதலின் இது வஸ்துதந்த்ரம். கர்த்ரு தந்த்ரமான கர்மாதிகளுக்குத்தான் விதியின் அபேக்ஷையுண்டு. ஞானத்திற்குக் கிரியாபலத்தன்மையில்லை. ஆயினும், நித்தியாபரோக்ஷமாகும் தர்மாதிகளின் ஞானத்தைப் போல், சுத்தப் பிரஹ்மாபேதமானது வேதத்தின் ஏக தேசியாயுள்ள ஹ்ரீங்காரத்தினால் அறியப்படுகின்றது. மறந்த விஷயத்தை ஞாபகப்படுத்துந் தன்மையால் வேதத்திற்கு ஸ்வத:

ப்ராமாண்யமுண்டு. பரம புருஷார்த்த வடிவ பரமாநந்த ஸ்வ ரூபமாயுள்ள தன்மையால் பரசைதன்யமே, ஞாபகப்படுத்தப் படுவதாகும். ஆதலின் பிரஹ்மாபேத பரதேவதையான வள் ஹ்ரீங்காரமாகும் மூலமந்த்ரத்தினுலேயே அறியப்படு கின்றனள். ஹகார, ரேப, ஈகாரங்களுக்குத் தனித் தனியாய் வெவ்வேறு அர்த்தங்களிருந்தாலும் அவைகள் ஒன்ருய்ச் சேர்ந்து ஹ்ரீங்காரரூபமாய்ப் பரிணமித்த ஸம ஷ்டி தசையில், ஸச்சிதாநந்த வடிவ த்ரிபுரஸுந்தரியான வள், அந்த ஹ்ரீங்காரத்தின் பொருளாய் அத்வைத ரூபமாய் விளங்குகின்ருள். "नान्योऽतोऽस्ति द्रष्टा"; "इदं सर्वं यदयमात्मा"; "एक एव तु भूतात्मा भूते भूते व्यवस्थितः । एकधा बहुधा चैव दृश्यते जलचन्द्रवत्" என்னும் ஶ்ருதிகள் இங்கு அறியத்தக்கனவா கும். "आत्मा वा अरे द्रष्टव्यः"; "तद्विजिज्ञासस्व"; आत्मानं पश्येत्"; என்னும் ஶ்ருதிகளின்படி ஆத்மாபின்ன பரதேவதையினிடத் தில் விதி ஸம்பவிப்பதில்லை என்பது ஸித்தாந்தமாம்.

ஹ்ரீங்காரபோதிதாயை நம: (292)

293. **ह्रींकारमयसौवर्णस्तम्भविद्रुमपुत्रिका**— ஹ்ரீங்கார மாகும் தங்கத்தூணிற்குப் பவழப்பாவை (பொம்மை) போன் றவள். தங்கத்தூணனது நவரத்தினங்களாலிழைக்கப்பட்ட ஸபாமண்டபத்தைத் தாங்கித் தரிப்பது போல் ஹ்ரீங்கார மும் பிரபஞ்சத்தைத் தரிக்கின்றது. பவழத்தினுற் செய்த பொம்மையானது ஸ்தம்பத்தில் விளங்கித் தனக்கு இருப்பிட மாயுள்ள அத்தூணையும், அத்தூணினுல் தாங்கித் தரிக்கப் பட்ட மண்டபத்தையும், அவ்விடத்தையும், அச்சபாமண்ட பத்திற்கு யஜமானனையும் அலங்கரித்துச் சிறப்பிப்பது போல், பரதேவதையும் ஹ்ரீங்காரமாகும் தூணில் விமர்ச

சைதன்யமாய் விளங்கிப் பிரபஞ்சத்தையும், பிரபஞ்ச போக்தாவாகும் ஜீவனையும், பிரபஞ்சகாரணமாகும் பரமேஸ்வரனையும் சிறப்புறச் செய்கின்றனள்.

ஹ்ரீங்காரமயஸௌவர்ண ஸ்தம்ப
வித்ரும புத்ரிகாயை நம: } (293)

294. ह्रींकारवेदोपनिषत्—ஹ்ரீங்காரமாகும் வேதத்திற்கு உபநிஷத்தைப் போன்றவள்.

எல்லாவற்றையும் அறிவிப்பது வேதமாகும். வேதத்தைப்போலவே ஹ்ரீங்காரமும் எல்லாவற்றையும் அறிவிப்பதால் அது வேதமே. ஹ்ரீங்காரத்திற்கு லக்ஷ்யார்த்தம் பரதேவதையாகும். பிரஹ்மஸ்வரூபம் உபநிஷத்துக்களால் அறியப்படுமென்று ஶ்ருதி கூறுகின்றது. ருக், யஜுஸ், ஸாம, அதர்வண மென்னும் நான்கு வேதங்களும், கர்மகாண்டம், உபாஸனகாண்டம், ஞானகாண்டமென்னும் மூன்று பிரிவுகளையுடையனவாய் இருக்கின்றன. "तमेतं वेदानुवचनेन ब्रह्मणा विविदषन्ति" என்னும் ஶ்ருதிப்படி கர்மோபாஸனைகள் ஞானத்திற்குச் சாதனங்கள். "अन्धंतमः प्रविशन्ति येऽविद्यामुपासते । ततो भूय इव ते तमो य उ विद्यायां रताः" என்னும் ஶ்ருதிப்படி, அவித்யாஸ்வரூப கர்மம், உபாஸனை இவைகளால் ஆத்மஞான முண்டாகாமல், ஜனன மரண ரூப ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கித் தவித்தலே எற்படுகின்றது. ஆதலின் கர்மோபாஸனைகள் நிந்திக்கப்படுகின்றன. ஜீவன், "தான் பிரஹ்மமே" யென்று ஸந்தேக விபரீதங்களற அறியின் எதையும் கோரமாட்டான். "आत्मानं चेद्विजानीयादयमस्मीति पूरुषः । किमिच्छन् कस्य कामाय शरीरमनुसंज्वरेत्" "आत्मकाम आप्तकामः"; என்பவை ஶ்ருதிப் பிரமாணங்களாகும்.

அத்வைத ஞானோத்பாதகமாகும் வேதபாகம் உபநிஷத்து. இதற்கு மோக்ஷமே முக்கியப் பிரயோஜனமாயிருக்கின்றது. ஆதலின் கர்மோபாஸனைகளைப் பிரதிபாதிக்கும் மற்றபாகங்களைக் காட்டிலும் உபநிஷத்தே சிரேஷ்டமானது. உலகத்தில் ஸாதனத்தைவிட பலன் சிரேஷ்டமாயிருப்பது போல, ஸாதன வடிவ கர்மோபாஸனைகளைவிட மோக்ஷரூப பலத்தைப் பிரதிபாதிக்கும் உபநிஷத்து சிரேஷ்டமா மென்பதில் என்ன ஆக்ஷேபம்? இங்ஙனமே பரதேவதையைப் பிரதிபாதிக்கும் ஹ்ரீங்காரத்தைவிட பரதேவதை (பிரதான) சிரேஷ்டமானது. பிரஹ்மாபின்ன சித்சக்திபோதகமாகும் "உபநிஷத்" என்னும் பதம் பிரஹ்ம வித்யையேயாகும். உப என்னும் பதம் ஸமீபம் என்னும் அர்த்த முடையதாம். பிரஹ்மத்தில் அத்தியஸ்தமாயுள்ள மாயைக்கு ஸமீபத்திலுள்ள தத்பத ஈஸ்வரனுடைய பிரதிபிம்பம் ஜீவனாகும். "நி" என்பது "ஷத்" என்னும் பதத்தின் விசேஷணமாம். உப என்னும் பதத்தின் வாச்சியமான ஜீவன், தனது உபாதியாகும் அவித்யையை நீக்கிப் பிரஹ்ம ஸ்வரூபமாகவே விளங்குகின்றான் என்பது ஒருவிதமான பொருளாகும்; ஜீவன் தன்னைப் பிரஹ்மஸ்வரூபமாகவே அறிகின்றான் என்பது மற்றொரு பொருளாகும்; ஜீவன் பிரஹ்மஸ்வரூபத்தையடைகின்றானென்பது மூன்றாவது வகையான அர்த்தமாம். இங்ஙனம் உபநிஷத்தென்னும் பதம் பிரஸித்தமாய்ப் பிரஹ்ம வித்யா வாசகமாயிருப்பதால் வாச்சிய வாசக அபேதத்தினால் பிரஹ்மஸ்வரூபமே உபநிஷத்துக்கள் என்றேற்படுகின்றது; ஆதலின் ஹ்ரீங்காரமே வேதம்; வேதங்களின் பிரதானத் தன்மையால், பிரஹ்ம வித்யாரூப உபநிஷத்தே பரதேவதை. ஹ்ரீங்காரவேதோபநிஷதே நம: (294)

295. **ह्रींकाराध्वरदक्षिणा**—ஹ்ரீங்காரமாகும் யாகத்திற்கு (அதன் முடிவைக்குறிக்கும்) தக்ஷிணையாய் இருப்பவள். **अध्वरः** மோக்ஷமார்க்கத்தில் செலுத்துவது ஹ்ரீங்கார ஜபமாதலின் ஹ்ரீங்காரமே யாகமாகும். ஹ்ரீங்காரமாகும் ஜப யக்ஞத்தின் பலமானது பரம புருஷார்த்தரூப மோக்ஷமேயாகும். இங்ஙனம் விளங்குபவள் பரதேவதை. அல்லது, "**मखस्य दक्षिणा पत्नी**" என்னும் வசனப்படி தக்ஷிணே, யாகத்தின் பத்னியாகும். ஹ்ரீங்காரரூப யாகத்திற்குப் பத்னியாயிருப்பவள். "**ज्ञानयज्ञेन तेनाहमिष्टः स्यामिति मे मतिः**" என்பது பகவத்கீதாவசனம். ஹ்ரீங்காரத்தின் லக்ஷ்யார்த்த ஞானமே ஹ்ரீங்கார (ஞான) யாகமாகும். "**प्रधानं दक्षिणा मखे**" என்னும் வசனத்தின்படி தக்ஷிணையைப் போலப் பிரயோஜன வடிவமாகவும் பிரதானமாகவும் இருப்பது பரதேவதையேயாவள். தேவதைகளை யுத்தேசித்துச் செய்யும் திரவியத்தியாகம் யாகமெனப்படும்; திரவியத்தை அக்னியிலிடுதல் ஹோமமெனப்படும். ரித்விக்குகளை யுத்தேசித்து யக்ஞசாலையில் பிரித்துவைக்கும் பணம் தக்ஷிணையாகும். வேதிக்கு வெளியில் திரவ்யார்த்திகளுக்குக் கொடுப்பது தானமாகும்.

ஹ்ரீங்காராத்வரதக்ஷிண்யை நம: (295)

296. **ह्रींकारनन्दनाराममवकल्पकवल्लरी**—ஹ்ரீங்காரமாகும் உத்தியான வனத்திற்குப் புதிய கற்பகக் கொடிபோன்றவள். ஹ்ரீங்காரமே நந்தவனம். தேவலோகத்தின் உத்தியானவனத்திலுள்ள விருக்ஷம், புதர், கொடி, புல், முதலியவற்றிற்குப் பூலோகத்து விருக்ஷம், புதர் முதலியவற்றை விட அதிக கௌரவம் இருந்தபோதிலும், ஸர்வோத்தமத்

தன்மை அவற்றிற்குக் கிடையாது; கல்பவல்லிக்கோவெனின், தன்னைச் சரணமாயடைந்த உபாஸகர்களின் கர்மாவை யநுஸரித்தும், உபாஸனையை யநுஸரித்தும் அவரவர்களின் வாஞ்சையைப் பூர்த்திசெய்து வைக்கும் ஸாமர்த்தியமிருப்பதால், அதற்கு எல்லாவற்றையும் விட உத்க்ருஷ்டத் தன்மையுண்டு. இங்ஙனமே ஹ்ரீங்காரமானது, பிரஹ்ம விஷ்ணு ருத்திரர்களின் வாசகங்களைத் தன்னிடத்தில் ஒருங்கே அமைத்துக்கொண்டு விளங்குவதாலும், சிர ஜீவியாய் இருக்கும் பயனையருள்வதாலும், ஆநந்த ஸ்வபாவத்தால் ஸம்ஸார தாபத்தைப் போக்கடிப்பதனாலும் உத்தியானத்தோடு உவமிக்கப்பட்டது. அவ்வுத்தியான வனத்தில் ஸர்வ காமனைகளையும் பரிபூர்த்தி செய்விக்குங் காரணத்தாலும் காமேஶ்வரரால் ஆலிங்கனம் செய்யப்பட்ட, ம்ருதுவும் பேரழகும் கூடிய சரீரத்தாலும், சதுர்வித புருஷார்த்தங்களையும் அருளும் காரணத்தாலும், ஸகுணோபாஸகர்களுக்கும் நிர்க்குணோபாஸகர்களுக்கும் அந்தந்த தேவதா ரூபமாகவும் ஸமஷ்டி ரூபிணியாகவும் விளங்குவதனாலும் பரதேவதையை நவகல்பகவல்லரியோடு உவமிக்கப்பட்டதென்பது கருத்தாம்.

ஹ்ரீங்காரநந்தனராம நவகல்பகவல்லர்யை நம: (296)

297. **ह्रींकारहिमवद्गङ्गा**—குளிர்ந்த பனிமலைக்கு ஹிமாசலமென்று பெயர். ஹிமாசலம் பர்வதங்களுக்கெல்லாம் அரசன். ஹ்ரீங்காரமே ஹிமாசலம். அம்ருதத்வாதி ஸாதகத் தன்மையால் ஹ்ரீங்காரம் அதிக குளிர்ச்சியாயிருக்கின்றது. எங்ஙனம் ஹிமயமலையிலிருந்து பரம பாவனமாயுள்ள கங்கைநதி பிரவஹிக்கின்றதோ அங்ஙனமே ஹ்ரீங்காரத்தினின்றும், மிகவும் தூய்மையானதும் எல்லாப் புருஷார்த்

ங்களேயுமருளக்கூடியதுமான அம்மந்த்ரத்தின் தேவதா ஸ்வரூபம் விளங்குகின்றது. இங்ஙனம் விளங்குபவள்தான் பரதேவதை.

ஹ்ரீங்காரஹிமவத்கங்காயை நம: (297)

298. **ह्रींकारार्णवकौस्तुभा**—ஹ்ரீங்காரமாகின்ற திருப்பாற் கடலுக்குக் கௌஸ்துப மணியைப்போன்றவள். பாற்கடலிலிருந்து உண்டான பதினுன்கு இரத்தினங்களேக் காட்டிலும் கௌஸ்துப மணியானது அதிகமான குணமும் பிரகாசமு முடைய தன்மையால் சிறப்பாய் விளங்குவது போல, பரதேவதையும் எல்லேயற்ற மஹிமையோடு கூடிய ஹ்ரீங்கார மந்த்ரத்திலிருந்து ஸ்வயம் பிரகாசத்தோடு விளங்குகின்றனள். "**अत्रायं पुरुषः स्वयं ज्योतिः**" என்பது ஶ்ருதி.

கௌஸ்துபமணியை ஹ்ருதயத்தில் தரித்திருப்பதனுல் மஹாவிஷ்ணுவுக்கு, லக்ஷ்மீபதியா யிருக்குந்தன்மை, எல்லாத் தேவர்களேவிட சிரேஷ்டமாந்தன்மை, ஸகல தேவதைகளேக் காட்டிலும் அதிக அழகாயிருக்குந் தன்மை முதலிய குணங்கள் இருக்கின்றன. இங்ஙனமே ஹ்ரீங்காரமாகும் திருப்பாற்கடலிலிருந்து உற்பத்தியான (ஹ்ரீம் மந்த்ரதேவதையாகும்) பரதேவதையைத் தமது ஹ்ருதயத்தில் தியானித்து உபாஸனே செய்யும் ஸாதகர்களுக்கு ஸ்ரீமந் நாராயண அபேதமும் (மோக்ஷ) ஸ்ரீபதித்துவமும் இத்தகைய இதர தர்மங்களும் தமக்குத் தாமே உண்டாகின்றன; என்ருல், ஆத்மஞானமும் மோக்ஷமும் ஸித்திக்கின்றன வென்பது கருத்து. ஆதலின் பரதேவதையைக் கௌஸ்துப மணியோடு ஒத்திட்டுக் கூறப்பட்டது.

ஹ்ரீங்காரார்ணவ கௌஸ்துபாயை நம: (298)

299. ह्रींकारमन्त्रसर्वस्वा—ஹ்ரீங்காரமாகும் மந்த்ரத்தின் ஸர்வைஶ்வர்யமா யிருப்பவள். ஸ்வம் என்ருல் உடைமை அல்லது ஸொத்து. இந்த ஸம்பத்து அணிமாதி அஷ்ட ஐஶ்வர்யங்களாகும். ஹ்ரீங்காரத்தோடு சேர்ந்த ஸ்ரீவித்யா மந்த்ரத்தையாவது அல்லது தனி ஹ்ரீங்காரத்தையாவது எவன் உபாஸிக்கின்ருனே அவனுக்கு எல்லாவிதமான ஐஶ்வர்யங்களையும் அருளும் அம்மந்த்ரஶக்தியாய் விளங்குபவள் பரதேவதை.

ஹ்ரீகாரமந்த்ர ஸர்வஸ்வாயை நம: (299)

300. ह्रींकारपरसौख्यदा— ஹ்ரீங்காரஜபபரர்களுக்கு ஸௌக்கியத்தைத் தருபவள். தனி ஹ்ரீங்காரத்தையோ அல்லது வித்தையோடு சேர்ந்த ஹ்ருல்லேகையையோ அர்த்தாநுஸந்தானத்தோடு ஜபம் (மனனம்) செய்யும் ஸாதகர்களுக்குத் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்னும் நான்குவித புருஷார்த்தங்களையும் ஒருங்கே யடைவதாலுண்டாகும் பரமாநந்தத்தை யருள்பவள். அல்லது, ஹ்ரீங்காரத்தின் வியஷ்டி வாச்சியர்களான பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன் இவர்களுடைய ஸௌக்கியத்தை விட மேலான ஸமஷ்டி ஆநந்தத்தைத் தருபவள். இதற்கு ஸாமரஸ்ய அல்லது ஏகீபாவ ஆநந்தமென்று பெயர். "यत्र नान्यत्पश्यति नान्यच्छृणोति नान्यद्विजानाति स भूमा । यत्रान्यत्पश्यति अन्यच्छृणोति अन्यद्विजानाति तदल्पम्"; "नाल्पे सुखमस्ति"; "आनन्दं ब्रह्मणो विद्वान् न बिभेति कुतश्चन"; "यदा ह्येवैष एतस्मिन्नदृश्येऽनात्म्येऽनिरुक्तेऽनिलयनेऽभयं प्रतिष्ठां विन्दते । अथ सोऽभयं गतो भवति"; "विज्ञानमानन्दं ब्रह्म। रातिर्दातुः परायणम्" என்னும் பற்பலஶ்ருதி ஸ்ம்ருதிகளாலும், அகண்ட ஸச்சிதாநந்த ஸ்வரூபத்திஞல் அதுவாகவே உள்ள

நிலையாகும் பலன் ஏற்படுகின்றது. ஒன்றன் ஞானத்தினல் மற்றொன்றின் அடைவு ஏற்படாதல்லவா? "ब्रह्मवेद ब्रह्मैव भवति" "तरति शोकमात्मवित्" "येन मामुपयान्ति ते। तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात्" "ब्रह्मैव सन् ब्रह्माप्येति" என்னும் ஸித்தாந்த ஶ்ருதி வாக்கியங்களால் ஸ்வஸ்வரூபாவபோதமே பரமபுருஷார்த்த வடிவ மோக்ஷமாமென்று ஸித்திக்கின்றது. இத்தகைய ஆநந்த நிலையை யருள்பவள் பரதேவதையேயாம்.

ஹ்ரீங்காரபரஸௌக்யதாயை நம: (300)

इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यस्य श्रीगोविन्दभगवत्पूज्यपाद

शिष्यस्य श्रीमच्छंकरभगवतः कृतौ

श्रीललितात्रिशतीभाष्यं

संपूर्णम् ॥

# फलश्रुतिः ।

इत्येवं ते मयाख्यातं देव्या नामशतत्रयम् ।
रहस्यातिरहस्यत्वाद्गोपनीयं त्वया मुने ॥ १ ॥

இங்ஙனம் என்னால் உனக்குப் பரதேவதையின் த்ரிஶதீஸ்தோத்திரம் உபதேசிக்கப்பட்டது. இது அதிக ரஹஸ்யமா யுள்ளதாதலால், ஹே அகஸ்திய முனியே! இதை மிகவும் கோப்யமாய் வைத்துக்கொள்ளவேண்டும். (1)

शिववर्णानि नामानि श्रीदेव्या कथितानि हि ।
शक्त्यक्षराणि नामानि कामेशकथितानि च ॥ २ ॥

அதில் சிவ வர்ணங்களை யுடைய நாமாக்கள் ஸ்ரீ தேவியினால் அருளப்பட்டவை; ஶக்தியக்ஷரங்களை யுடைய நாமாக்கள் ஸ்ரீ காமேஶ்வரரால் அருளப்பட்டவையாகும். (2)

उभयाक्षरनामानि ह्युभाभ्यां कथितानि वै ।
तदन्यैर्ग्रथितं स्तोत्रमेतस्य सदृशं किमु ॥ ३ ॥

சிவஶக்தி ஸாமரஸ்ய (உபய) அக்ஷரங்களையுடைய நாமாக்கள் அவ்விருவராலும் சேர்ந்து கூறப்பட்டவை. ஆதலின், இதரர்களாலியற்றப்பட்ட ஸ்தோத்திரங்கள் இந்த ஸ்தோத்திரத்திற்குச் சமானமாகுமா? (3)

नानेन सदृशं स्तोत्रं श्रीदेवीप्रीतिदायकम् ।
लोकत्रयेऽपि कल्याणं संभवेन्नात्र संशयः ॥ ४ ॥

மங்களமானதும், ஸ்ரீ தேவிக்குச் சந்தோஷத்தை யுண்டாக்கக் கூடியதுமான ஸ்தோத்திரம் இதற்குச் சமானமாக மூன்று லோகங்களிலும் கிடையாது. இதில் ஸந்தேஹமில்லை. (4)

इति हयमुखगीतं स्तोत्रराजं निशम्य
प्रगलितकलुषोऽभूच्चित्तपर्याप्तिमेत्य ।
निजगुरुमथ नत्वा कुम्भजन्मा तदुक्तं
पुनरधिकरहस्यं ज्ञातुमेवं जगाद ॥ ५ ॥

இங்ஙனம் ஸ்ரீ ஹயக்ரீவர் அருளிச்செய்த இந்த ஸ்தோத்திர ராஜத்தைக் கேட்டு, ஸர்வ பாபங்களுமற்றவராய்ச் சித்த சாந்தியை யடைந்து, தன் குருவைப் பணிந்து உபதேசிக்கப்பட்ட இந்த ஸ்தோத்திரத்தை விட இன்னும் அதிக ரஹஸ்யமாயுள்ள விஷயங்களை யறிய அகஸ்தியர் இங்ஙனம் கூறுகின்றார். (5)

अगस्त्य उवाच—

अश्वानन महाभाग रहस्यमपि मे वद ।
शिववर्णानि कान्यत्र शक्तिवर्णानि कानि हि ॥ ६ ॥
उभयोरपि वर्णानि कानि वा वद देशिक ।
इति पृष्टः कुम्भजेन हयग्रीवोऽवदत्पुनः ॥ ७ ॥

அகஸ்தியர் கூறுகின்றார்:—

"ஹே பகவானே! இன்னும் பரம ரஹஸ்யமான விஷயங்களையும் கூறவேண்டுகின்றேன். ஹே ஸத்குருவே! சிவாக்ஷரங்கள் எவை? ஶக்தியக்ஷரங்கள் எவை? இரண்

டும் சேர்ந்த (உபய) அக்ஷரங்கள் எவை?" என்று கும்ப முனியால் வினவப் பட்டவராய் ஸ்ரீ ஹயக்ரீவர் மறுபடியும் கூறுகின்றார். (6-7)

तव गोप्यं किमस्तीह साक्षादम्बानुशासनात् ।
इदं त्वतिरहस्यं ते वक्ष्यामि शृणु कुम्भज ॥ ८ ॥

ஹே கும்பமுனே! ஸாக்ஷாத்தாகவே அம்பாள் உத்தரவிட்டிருப்பதனால், உன்னிடம் மறைத்து வைக்க வேண்டிய ரஹஸ்யங்கள் யாதொன்றுமில்லை. பரம ரஹஸ்யமாயுள்ள இதையுமுனக்குக் கூறுகின்றேன். கேட்பாயாக. (8)

एतद्विज्ञानमात्रेण श्रीविद्या सिद्धिदा भवेत् ।
कत्रयं हद्वयं चैव शैवो भागः प्रकीर्तितः ॥ ९ ॥
शक्त्यक्षराणि शेषाणि ह्रींकार उभयात्मकः ।
एवं विभागमज्ञात्वा ये विद्याजपशालिनः ॥ १० ॥
न तेषां सिद्धिदा विद्या कल्पकोटिशतैरपि ।

இதையறிந்த மாத்திரத்தினாலேயே ஸ்ரீ வித்யையின் ஸித்தி ஏற்படுகின்றது. (பஞ்சதசீமஹாவித்யையில்) மூன்று ககாரங்களும் இரண்டு ஹகாரங்களும் சிவாக்ஷரங்களென்று கூறப்படும். மீதி அக்ஷரங்கள் (மூன்று லகாரங்களும், இரண்டு ஸகாரங்களும், ஈகாரமும், ஏகாரமும்) ஶக்தியக்ஷரங்களென்றும், ஹ்ரீங்காரங்கள் மூன்றும் சிவஶக்தி ஸாமரஸ்ய வடிவ உபயாக்ஷரங்களென்றும் கூறப்படும்.

இந்தப் பாகுபாட்டை யறியாமல் எவர்கள் ஸ்ரீ வித்யா மந்திரத்தை ஜபம் செய்கின்றார்களோ அவர்கள் கற்ப கோடிகாலம் வரை மஹாவித்யையை ஜபம் செய்தாலும் அவர்களுக்கு அதன் ஸித்தி ஏற்படுவதில்லை. (9-10½)

चतुर्भिः शिवचक्रैश्च शक्तिचक्रैश्च पञ्चभिः ॥ ११ ॥
नवचक्रैश्च संसिद्धं श्रीचक्रं शिवयोर्वपुः ।

நான்கு சிவ சக்கிரங்கள், ஐந்து ஶக்தி சக்கிரங்கள் ஆக ஒன்பது சக்கிரங்களாலும் ஏற்பட்டதான ஸ்ரீ சக்கிரமானது சிவ ஶக்திகளின் சரீரமாகும். (11—11½)

त्रिकोणमष्टकोणं च दशकोणद्वयं तथा ॥ १२ ॥
चतुर्दशारं चैतानि शक्तिचक्राणि पञ्च च ।
बिन्दुश्चाष्टदलं पद्मं पद्मं षोडशपत्रकम् ॥ १३ ॥
चतुरश्रं च चत्वारि शिवचक्राण्यनुक्रमात् ।

த்ரிகோணம், அஷ்டகோணம், இரண்டு தஶகோணங்கள், சதுர்த்தசாரம் என்னும் ஐந்து சக்கிரங்களும் ஶக்தி சக்கிரங்களென்றும், பிந்து, அஷ்டதளபத்மம், ஷோடஶதளபத்மம், சதுரஶ்ரம் என்னும் நான்கும் சிவ சக்கிரங்களென்றும் கூறப்படும். (12—13½)

त्रिकोणे बैन्दवं श्लिष्टं अष्टारेऽष्टदलाम्बुजम् ॥ १४ ॥
दशारयोः षोडशारं भूगृहं भुवनाश्रके ।
शैवानामपि शाक्तानां चक्राणां च परस्परम् ॥ १५ ॥
अविनाभावसंबन्धं यो जानाति स चक्रवित् ।

த்ரிகோணத்தில் பிந்துவும், அஷ்டகோணத்தில் அஷ்ட தளபத்மமும், உள்-வெளி என்னும் இரண்டு தச கோணங்களில் ஷோடஶதள கமலமும், பதினான்கு கோணங்களுடைய மன்வஶ்ரத்தில் பூக்ருஹம் அதாவது சதுரஶ்ரமும் ஐக்கியப்படுகின்றன. சிவ சக்கிரங்களுக்கும் ஶக்தி சக்கிரங்களுக்கும் பரஸ்பரம் ஏற்பட்டுள்ள அவிநாபாவ ஸம்பந்தத்தை எவன் அறிகின்றானோ அவனே சக்கிர(ரஹஸ்ய)த்தை யறிந்தவனாவன். (14—15½)

त्रिकोणरूपिणी शक्तिर्बिन्दुरूपपरः शिवः ॥ १६ ॥
अविनाभावसंबन्धं तस्माद्बिन्दुत्रिकोणयोः ।
एवं विभागमज्ञात्वा श्रीचक्रं यः समर्चयेत् ॥ १७ ॥
न तत्फलमवाप्नोति ललिताम्बा न तुष्यति ।
ये च जानन्ति लोकेऽस्मिन्श्रीविद्याचक्रवेदिनः ॥ १८ ॥
सामान्यवेदिनः सर्वे विशेषज्ञोऽतिदुर्लभः ।
स्वयंविद्याविशेषज्ञो विशेषज्ञं समर्चयेत् ॥ १९ ॥
तस्मै देयं ततो ग्राह्यमशक्तस्तस्य दापयेत् ।

பராஶக்தி த்ரிகோணவடிவினள்; பரசிவன் பிந்து வடிவினன். ஆதலின் பிந்து த்ரிகோணங்களுக்கு இன்றியமையாத அதாவது ஒன்றை விட்டு ஒன்றைப் பிரிக்க முடியாத ஸம்பந்தமுண்டு. இங்ஙனம் அறியாமல் எவன் ஸ்ரீ சக்கிரத்தைப் பூஜை செய்கின்றானோ அவன் அப்பூஜையின் பலனை யடைவதில்லை; பரதேவதையும் ஸந்தோஷமடைவதில்லை. இவ்வுலகில், யார் மேற்கூறிய (சிவஶக்திகளின்) ஐக்கியத்தை யறிந்தவர்களோ அவர்களே ஸ்ரீ வித்யையையும் ஸ்ரீ சக்கிரத்தையும் நன்கு அறிந்தவர்களாவார்கள்.

வித்தையையும் சக்கிரத்தையும் பெரும்பாலார் ஸாமான்னியமாக அறிந்தவர்களே; விசேஷமாய் நன்கு அறிந்தவர்கள் மிகவும் துர்லபம். வித்யையை விசேஷமாய் அறிந்தவன் விசேஷமாய் அறிந்த வித்வானைப் பூஜித்தல் வேண்டும். அத்தகைய வித்வானுக்குத்தான் தானம் செய்ய வேண்டும்; அவர்களிடமிருந்தேதான் தானம் பெறவும் வேண்டும். தானம் செய்வதற்குத் தனக்குச் சக்தியில்லா

மற்போனுல் சக்தியுள்ளவர்களிடமிருந்து அவர்களுக்குக் கொடுப்பித்தல் வேண்டும். (16-19½)

अन्धंतमः प्रविशन्ति येऽविद्यां समुपासते ॥ २० ॥
इति श्रुतिरपाहैतानविद्योपासकान्पुनः ।
विद्यान्योपासकानेव निन्दत्यारुणिकी श्रुतिः ॥ २१ ॥

"அவித்யையை உபாஸிப்பவர்கள் அக்ஞானமாகும் அந்ததமஸ்ஸை (பேரிருளை) யடைகின்ருர்கள்" என்று ஶ்ருதியும் நிந்திக்கின்றது. ஆருண ஶ்ருதியும் அவித்யோபாஸகர்களை திக்கரிக்கின்றது. (20-21½)

अश्रुता सश्रुतासश्च यज्वानो येऽप्ययज्वनः ।
स्वर्यन्तो नापेक्षन्ते इन्द्रमग्निं च ये विदुः ॥ २२ ॥
सिकता इव संयन्ति रश्मिभिः समुदीरिताः ।
अस्माल्लोकादमुष्माच्चेत्याह चारण्यकश्रुतिः ॥ २३ ॥

பாப எண்ணங்களோடு கூடிய கல்மஷ சித்தத்தை யுடையவர்களும், பரிசுத்தமான சித்தத்தையுடையவர்களும், யாகம் செய்தற்குரிய அதிகாரம், செல்வம், வித்வத்தன்மை, ஸாமர்த்தியம் முதலியவற்றைப் பெற்று யாகம் செய்பவர்களும், யாகத்தில் முற்றும் அதிகாரமில்லாதவர்களும் ஶ்ரீ சக்ரவித்யோபாஸ்தியில் அதிகாரமுடையவராவார்கள்; என்ருல் யாவருக்கும் ஶ்ரீ வித்யோபாஸ்தியில் அதிகாரமுண்டு என்றேற்படுகின்றது. வித்யோபாஸகர்கள் தங்களது அபேதோபாஸ்தியின் வலிமையால், ஸ்வர்க்க போகத்தையும் விரும்புவதில்லை. யார் பரதேவதையை விட இந்திராதி திக்பாலர்களையும், இதர தேவதைகளையும், பிரிதிவி முதல் ஸதாசிவம் ஈருகவுள்ள தத்துவங்களையும் பின்னமா

யுள்ளதாக நினைத்து அவற்றை உபாஸிக்கின்றார்களோ அவர்கள் நுண்ணிய மணலைப்போல் பிரஷ்டர்களாவதோடு யமபாசத்தினால் நன்கு கட்டப்பட்டவருமாகின்றனர்; இஹத்திலும் பரத்திலும் துன்புறுகின்றனர். என்று ஆருணஶ்ருதி கூறுகின்றது. (22-23)

यस्य नो पश्चिमं जन्म यदि वा शंकरः स्वयम् ।
तेनैव लभ्यते विद्या श्रीमत्पञ्चदशाक्षरी ॥२४॥

யாருக்குப் புனர் ஜென்மம் இல்லையோ அல்லது, யார் ஸ்வயமாகவே ஶங்கரஸ்வரூபமாக விருக்கின்றார்களோ அவரால் தான் பிரஹ்ம வித்யையாகும் ஸ்ரீமத் பஞ்சதஶாக்ஷரி அடையப்படுவதாகும். (24)

इति मन्त्रेषु बहुधा विद्याया महिमोच्यते ।
मोक्षैकहेतुविद्या तु श्रीविद्या नात्र संशयः ॥ २५ ॥

இங்ஙனம், மந்த்ரசாஸ்திரங்களில் ஸ்ரீவித்யையின் மஹிமை பலவிதமாகக் கூறப்பட்டிருக்கின்றது. மோக்ஷத்தை யடைவதற்குச் சிறந்த ஸாதனமானது ஸ்ரீவித்யையேயாகும்; இதில் ஸந்தேஹம் இல்லை. (25)

न शिल्पादिज्ञानयुक्ते विद्वच्छब्दः प्रयुज्यते ।
मोक्षैकहेतुविद्या सा श्रीविद्यैव न संशयः ॥ २६ ॥

சில்பம், ஸங்கீதம் முதலியவற்றின் ஞானத்தையுடையவன் வித்வான் என்று கருதப்படுவதில்லை. ஆத்மப் பிரஹ்மைக்கிய ஞானியே வித்வானாவான். ஆதலின் ஸர்வாநர்த்த நிவ்ருத்தி பரமானந்தப் பிராப்திரூப மோக்ஷத்திற்கு ஸாக்ஷாத்காரணம் ஸ்ரீவித்யைதான். இதில் ஸந்தேகமே இல்லை. (26)

तस्माद्विद्याविदेवात्र विद्वान्विद्वानितीर्यते ।
स्वयं विध्याविदे दध्यात्ख्यापयेत्तद्गुणान्सुधीः ॥ २७ ॥

ஆதலால் ஸ்ரீ வித்யையாகும் பிரஹ்ம வித்யையை யறிந்தவன்தான் "வித்வான், வித்வான்" என்று கூறப் படுவன். புத்திசாலியானவன் ஸ்ரீ வித்யையை யறிந்தவனுக் குத் தான் தானம் முதலியன செய்து அவனது மஹிமை யைப் பரவச் செய்ய வேண்டும். (27)

स्वयंविद्यारहस्यज्ञो विद्यामाहात्म्यवेध्यपि ।
विध्याविदं नार्चयेच्चेत्को वा तं पूजयेज्जनः ॥२८ ॥

வித்யையின் ரஹஸ்யத்தையும் மஹிமையையும், தான் அறிந்தவனுயிருந்தும் மற்ருெரு வித்யோபாஸகனைப் பஹு மானித்து ஆதரிக்காவிடின், எவன்தான் அவ் வித்யோபாஸ கனை மதிப்பான்? (28)

प्रसङ्गादिदमुक्तं ते प्रकृतं शृणु कुम्भज ।
यः कीर्तयेत्सकृद्भक्त्या दिव्यनामशतत्रयम् ॥ २९ ॥
तस्य पुण्यमहं वक्ष्ये शृणु त्वं कुम्भसंभव ।
रहस्यनामसाहस्रपाठे यत्फलमीरीतम् ॥ ३० ॥
तत्फलं कोटिगुणितमेकनामजपाद्भवेत् ।

ஏதோ கூறிக்கொண்டு வரும்போது இடையே அவாந்தர மாக இவ்விஷயங்கள் கூறப்பட்டன. பிரக்ருதத்தில் பேசிக் கொண்டு வந்த விஷயத்தைக் கேட்பாயாக. ஹே கும்பமுனி யே! எவனொருவன் இந்த திவ்யமான த்ரிஶதி ஸ்தோத்தி ரத்தை ஒரு தரம் ஜபிக்கின்ருனே அவனது புண்யம் இவ் வளவவ்வளவல்ல; ரஹஸ்யநாமஸாஹஸ்ரமென்னும் ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தைப் பாராயணஞ் செய்கிறதினல் எவ்வளவு

பலன் கூறப்பட்டதோ, அதைவிட கோடி கோடி மடங்கு அதிக பலம் த்ரிஶதீநாமங்களில் ஒரு நாமத்தின் பாராயணத்தால் ஏற்படும். (29-30½)

**कामेश्वरीकामेशाभ्यां कृतं नामशतत्रयम् ॥ ३१ ॥**
**नान्येन तुलयेदेतत्स्तोत्रेणान्यकृतेन च ।**

காமேஶ்வரீ காமேஶ்வரர்களால் திருவாய் மலர்ந்தருளப்பட்ட இத் திரிஶதீநாம ஸ்தோத்திரத்திற்கு இதரர்களால் செய்யப்பட்ட எந்த ஸ்தோத்திரமும் ஈடாகாது. (31½)

**श्रियः परम्परा यस्य भावि वा चोत्तरोत्तरम् ॥ ३२ ॥**
**तेनैव लभ्यते चैतत्पश्चाच्छ्रेयः परीक्षयेत् ।**

எவனுக்கு மேலும் மேலும் ஶ்ரேயஸ் உண்டாகப் போகின்றதோ அவனால்தான் மஹாவித்யையானது அடையப்படும்; ஶ்ரீ வித்யையின் அடைவிற்குப் பின் ஶ்ரேயஸ் உண்டாகின்றதா இல்லையா வென்பதைப் பரீக்ஷிப்பாயாக. (32½)

**अस्या नाम्नां त्रिशत्यास्तु महिमा केन वर्ण्यते ॥ ३३ ॥**
**या स्वयं शिवयोर्वक्त्रपद्माभ्यां परिनिःसृता ।**

சிவதம்பதிகளின் முக கமலங்களினின்றும் பெருகிய இந்த த்ரிஶதீ ஸ்தோத்திராம்ருதத்தின் மஹிமையை வர்ணிக்க யாரால் முடியும். (33½)

**नित्यं षोडशसंख्याकान्विप्रानादौ तु भोजयेत् ॥ ३४ ॥**
**अभ्यक्तांस्तिलतैलेन स्नातानुष्णेन वारिणा ।**
**अभ्यर्च्य गन्धपुष्पाद्यैः कामेश्वर्यादिनामभिः ॥ ३५ ॥**

सूपापूपैः शर्कराद्यैः पायसैः फलसंयुतैः ।
विद्याविदो विशेषेण भोजयेत्षोडश द्विजान् ॥ ३६ ॥

एवं नित्यार्चनं कुर्यादादौ ब्राह्मणभोजनम् ।
त्रिशतीनामभिः पश्चाद्ब्राह्मणान्क्रमशोऽर्चयेत् ॥ ३७ ॥

तैलाभ्यङ्गादिकं दत्वा विभवे सति भक्तितः ।
शुक्लप्रतिपदारभ्य पौर्णमास्यवधि क्रमात् ॥ ३८ ॥

दिवसे दिवसे विप्रा भोज्या विंशतिसंख्यया ।
दशभिः पञ्चभिर्वापि त्रिभिरेकेन वा दिनैः ॥ ३९ ॥

त्रिंशत्षष्टिःशतं विप्राः संभोज्यास्त्रिशतं क्रमात् ।
एवं यः कुरुते भक्त्या जन्ममध्ये सकृन्नरः ॥ ४० ॥

तस्यैव सफलं जन्म मुक्तिस्तस्य करे स्थिरा ।

## த்ரிசதீ பிராஹ்மண போஜன விதி.

முதலில், பதினாறு பிராஹ்மணர்களை வரித்து, அவர்களை எண்ணை தேய்த்துக் கொள்ளும்படி செய்து, வெந்நீரில் ஸ்நானம் செய்வித்து, ஒரு பங்க்தியாய் உட்காரவைத்து, காமேஶ்வரீ முதல் மஹாநித்யை வரையிலுள்ள பதினாறு நித்யா தேவிகளை ஆவாஹனம் செய்து, சந்தனம் புஷ்பம் முதலிய வற்றால் அர்ச்சித்து அவர்களுக்கு, ஷட்ரஸங்களும் அமைந்த போஜனமிட்டுத் திருப்தி செய்வித்தல் வேண்டும். இந்த பிராஹ்மணர்கள் வித்யோபாஸகர்களாய் இருத்தல் சிரேஷ்டம். பின்னர், ஶுக்லபக்ஷப் பிரதமையாகும் மறு நாள் ஆரம்பித்து இத் திரிஶதீநாமாக்கள் முந்நூறும், கிரமமாக நாள் ஒன்றுக்கு, இருபது இருபது நாமாக்கள் வீதம் பௌர்ணமி வரையில், தினம் இருபதுபேரை வரித்து

மேற் கூறியபடி ஆராதித்தல் வேண்டும். அல்லது, பத்து தினங்களிலாகிலும், ஐந்து நாட்களிலாகிலும், மூன்று தினங்களிலாகிலும் அல்லது, ஒரே தினத்திலாகிலும், கிரமமாய், முப்பது, அறுபது, நூறு அல்லது, முந்நூறு பிராஹ்மணர்களை வரித்து த்ரிஶதீ நாமாக்களைச் சொல்லி ஆவாஹனம் செய்து அர்ச்சித்துப் போஜனம் செய்வித்தல் வேண்டும். இங்ஙனம் எவன் ஒருவன் தனது வாழ்நாளில் பக்தியோடு செய்கின்றானோ, அவனுடைய ஜன்மம் ஸபல மாகின்றது. அவனுக்கு மோக்ஷம் அவன் கையில் இருக்கின்றது. ($40\frac{1}{2}$)

रहस्यनामसाहस्रभोजनेऽप्येवमेव हि ॥ ४१ ॥

லலிதாஸஹஸ்ரநாமாக்களால் செய்யும் பிராஹ்மண போஜனமும் இவ்விதமேதான் என்றறியத்தக்கது (41)

आदौ नित्यबलिं कुर्यात्पश्चाद्ब्राह्मणभोजनम् ।
रहस्यनामसाहस्रमहिमा यो मयोदितः ॥ ४२ ॥
सशीकराणुरत्रैकनाम्नो महिमवारिधेः ।

முதலில் நித்யாபலியைச் செய்யவேண்டும். என்றால் பதினாறு பிராஹ்மணர்களை வரித்து அப்யங்கஸ்நானம் செய்து வைத்து ஷோடஶ நித்யைகளை ஆவாஹனம் செய்து அர்ச்சித்துப் போஜனமளிக்கவேண்டும். பிறகு, ஸஹஸ்ரப்பிராஹ்மணபோஜனம் செய்வித்தல் வேண்டும். என்னால் முன் கூறப்பட்ட ஸஹஸ்ரநாம மஹிமையானது இந்த த்ரிஶதீ நாமங்களில் ஒரு நாமாவின் மஹிமையென்னும் பெருங் கடலில் ஒருதிவலையே யாகும். ($42\frac{1}{2}$)

वाग्देवीरचिते नामसाहस्रे यद्यदीरितम् ॥ ४३ ॥
तत्फलं कोटिगुणितं नाम्नोऽप्येकस्य कीर्तनात् ।

ஸ்ரீ வாக்தேவிகளால் செய்யப்பட்ட ஸஹஸ்ரநாமா விற்கு என்ன என்ன பலன் கூறப்பட்டுள்ளதோ அந்த அந்த பலத்தைவிட கோடி மடங்கு பலன், த்ரிஶதியின் ஒரு நாமாவின் கீர்த்தனத்தால் ஏற்படும். (43½)

एतदन्यैर्जपैः स्तोत्रैरर्चनैर्यत्फलं भवेत् ॥ ४४ ॥
तत्फलं कोटिगुणितं भवेन्नामशतत्रयात् ।

இதைவிட அந்நியமான ஸ்தோத்திரங்களினாலும் ஜபங் களினாலும் பூஜைகளினாலும் என்ன பயன் ஏற்படுமோ அந்தப் பயனைவிட கோடிமடங்கு அதிகமான பயன் இந்த த்ரிஶதீ ஸ்தோத்திரத்தினால் உண்டாகின்றது. (44½)

वाग्देवीरचितास्तोत्रे तादृशो महिमा यदि ॥ ४५ ॥
साक्षात्कामेशकामेशीकृतेऽस्मिन्गृह्यतामिति ।

வாக்தேவிகளால் அருளப்பட்ட ஸஹஸ்ர நாமத்திற்கே அவ்வளவு மஹிமை யுண்டெனின், ஸாக்ஷாத் காமேஶ்வர காமேஶ்வரிகளால் அருளப்பட்ட இந்த த்ரிஶதியின் மஹி மையை நாவினால் கூறமுடியுமோ? (45½)

सकृत्संकीर्तनादेव नाम्नामस्मिन्शतत्रये ॥ ४६ ॥
भवेच्चित्तस्य पर्याप्तिर्न्यूनमन्यानपेक्षिणी ।

இந்த த்ரிஶதீநாமங்களை யொருதரம் பாராயணம் செய்தால், அப்பாராயணமே மற்றொன்றை யபேக்ஷிக்கா மல் சித்த சாந்தியை யுண்டாக்குகின்றது. (46½)

न ज्ञातव्यमितोऽप्यन्य न्न जप्तव्यं च कुम्भज ॥ ४७ ॥

ஹே கும்பஸம்பவ! இதைவிட மற்றொன்று அறியத் தக்கதாயும் ஜபிக்கத்தக்கதாயும் இல்லை. (47)

यद्यत्साध्यतमं कार्यं तत्तदर्थमिदं जपेत् ।
तत्तत्फलमवाप्नोति पश्चात्कार्यं परीक्षयेत् ॥ ४८ ॥

அடைதற்கரியனவற்றை அடைய இச்சிக்கின், இந்த த்ரிஶதியைப் பக்தியுடன் ஜபித்தால் அதைத் தடையின்றி அடையலாம். (சொன்னபடி செய்து) பின் கார்யத்தைப் பரீக்ஷிக்கலாம். (48)

ये ये प्रयोगास्तन्त्रेषु तैस्तैर्यत्साध्यते फलम् ।
तत्सर्वं सिध्यति क्षिप्रं नामत्रिशतकीर्तनात् ॥ ४९ ॥

தந்திரங்களில் விஸ்தாரமாகக் கூறப்பட்டுள்ள பிரயோகங்களால் என்னென்ன பயன் உண்டாகுமோ அந்தந்த பயன் அதிக ஸுலபமாய் வெகு சீக்கிரத்தில் இந்த த்ரிஶதீ பாராயணத்தால் கிடைக்கின்றது. (49)

आयुष्करं पुष्टिकरं पुत्रदं वश्यकारकम् ।
विद्याप्रदं कीर्तिकरं सुकवित्वप्रदायकम् ॥ ५० ॥

सर्वसंपत्प्रदं सर्वभोगदं सर्वसौख्यदम् ।
सर्वाभीष्टप्रदं चैव देव्या नामशतत्रयम् ॥ ५१ ॥

இதைப் பக்தி சிரத்தைகளுடன் பாராயணம் செய்தால் ஆயுள், தேகபலம், புத்திரர்கள், ஜனவஶ்யம், வித்யை,

கீர்த்தி, கவித்துவம், ஸர்வவித ஸம்பத்துகள், ஸர்வ விதமான போகங்கள், ஸர்வவிதமான ஸௌக்கியங்கள் முதலிய ஸர்வாபீஷ்டங்களும் வெகு ஸுலபமாய் அடைய லாம். (50-51)

एतज्जपपरो भूयान्नान्यदिच्छेत्कदाचन ।
एतत्कीर्तनसंतुष्टा श्रीदेवी ललिताम्बिका ॥ ५२ ॥

भक्तस्य यद्यदिष्टं स्यात्तत्तत्पूरयते ध्रुवम् ।
तस्मात्कुम्भोद्भव मुने कीर्तय त्वमिदं सदा ॥ ५३ ॥

ஒன்றையும் இச்சியாமல் இந்த த்ரிஶதியைப் பாரா யணம் செய்தால், பரதேவதையாகும் லலிதாம்பாள் பரம ஸந் தோஷமடைந்து பக்தனுக்கு வேண்டியவற்றை யெல்லாம் அடைவித்துத் திருப்தனுக்குகின்றாள். ஆதலின் ஹே கும்ப ஜனே! நீ இந்த த்ரிஶதீஸ்தோத்திரத்தை ஸதா கீர்த்தனம் (பாராயணம்) செய்யக்கடவாயாக. (52-53)

नापरं किंचिदपि ते बोद्धव्यं नावशिष्यते ।
इति ते कथितं स्तोत्रं ललिताप्रीतिदायकम् ॥ ५४ ॥

இதைத் தவிற வேறொன்றும் உனக்குக் கூறுதற்குரியது இல்லை. இங்ஙனம், பரதேவதைக்கு மிகவும் பிரியமான இந்த ஸ்தோத்திரம் உனக்குக் கூறப்பட்டது. (54)

नाविद्यावेदिने ब्रूयान्नाभक्ताय कदाचन ।
न शठाय न दुष्टाय नाविश्वासाय कर्हिचित् ॥ ५५ ॥

“ இதை, ஸ்ரீவித்யா ஞானமின்றியவனுக்கும், பக்தி யற்றவனுக்கும், துஷ்டனுக்கும், கோபிக்கும், நம்பிக்கை

யற்றவனுக்கும் கூறக்கூடாது". (55)

यो ब्रूयात्त्रिशतीं नाम्नां तस्यानर्थो महान्भवेत् ।
इत्याज्ञा शांकरी प्रोक्ता तस्माद्गोप्यमिदं त्वया ॥ ५६ ॥

"இதற்கு மாறாக மேற்கூறியவர்களுக்கு எவன் கூறு கின்றானோ அவனுக்கு மஹத்தான அநர்த்தங்கள் ஏற்படும்" என்னும் இந்த ஆக்ஞை பரமேஶ்வரரால் ஏற்பட்டதாகும். ஆதலால் இதை நீ மிகவும் ரஹஸ்யமாய் வைத்துக் காப் பாற்ற வேண்டும். (56)

ललिताप्रेरितेनैव मयोक्तं स्तोत्रमुत्तमम् ।
रहस्यनामसाहस्रादपि गोप्यमिदं मुने ॥ ५७ ॥

இந்த உத்தமமான ஸ்தோத்திரமானது, பரதேவதை யின் பிரேரணையாலேயே என்னால் கூறப்பட்டது. ரஹஸ்ய நாம ஸாஹஸ்ரத்தைவிட இதை, ஓ அகஸ்திய முனியே! மிகவும் கோப்பியமாய் வைத்துக்கொள்ளல் வேண்டும். (57)

एवमुक्त्वा हयग्रीवः कुम्भजं तापसोत्तमम् ।
स्तोत्रेणानेन ललितां स्तुत्वा त्रिपुरसुन्दरीम् ॥
आनन्दलहरीमग्नमानसः समवर्तत ॥ ५८ ॥

இங்ஙனம், ஸ்ரீ ஹயக்ரீவ மஹர்ஷியானவர் தவஶ்ரேஷ்ட ரான கும்பமுனிக்கு த்ரிஶதியை உபதேசித்து, இந்த ஸ்தோ த்திரத்தினாலேயே ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரஸுந்தரீ தேவியை ஸ்துதித்துப் பேரானந்தக்கடலில் மூழ்கிய மனத்தோடு

(அதாவது அமனஸ்கநிலையில்) அகண்டைக ரஸ ஸ்வரூபராய் இருந்தார்.

॥ इति श्रीललितात्रिशतीस्तोत्रं संपूर्णम् ॥

இங்ஙனம், ஸ்ரீ பதரிகாஸ்ரமம், பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
வர்ய, ஸ்ரீமத் குஹாநந்த நாதாவதூதஸ்வாமிகளின் பாத
சேகரரும், ஸ்ரீ சிதாநந்தநாதரென்னும் தீக்ஷா
நாமம் பெற்றவருமான சுப்ரமணிய
அய்யரவர்களாலியற்றப்பட்ட
"சந்திரிகை"
யென்னும் தமிழுரை
முற்றிற்று.

---

॥ इति शिवम् ॥
श्री गुरुचरणारविन्दार्पणमस्तु ॥

भारती विजयम् प्रेस्, मैलापूर्.

# ॥ श्रीललितात्रिशतीनामावलिः ॥



अतिमधुरचापहस्तामपरिमितामोदबाणसौभाग्याम् ।
अरुणामतिशयकरुणामभिनवकुलसुन्दरीं वन्दे ॥

ओं—ऐं—ह्रीं—श्रीं

४ ककाररूपायै नमः ओं
कल्याण्यै
कल्याणगुणशालिन्यै
कल्याणशैलनिलयायै
कमनीयायै
कलावत्यै
कमलाक्ष्यै
कल्मषघ्न्यै
करुणामृतसगारायै
कदम्बकाननावासायै 10
कदम्बकुसुमप्रियायै
कन्दर्पविद्यायै
कन्दर्पजनकापाङ्गवीक्षणायै

४ कर्पूरवीटीसौरभ्यकल्लोलित-
—ककुप्तटायै नमः ओं
कलिदोषहरायै
कञ्जलोचनायै
कम्रविग्रहायै
कर्मादिसाक्षिण्यै
कारयित्र्यै
कर्मफलप्रदायै 20
एकाररूपायै
एकाक्षर्यै
एकानेकाक्षराकृत्यै
एतत्तदित्यनिर्देश्यायै
एकानन्दचिदाकृत्यै

४ एवमित्यागमाबोध्यायै नमः
एकभक्तिमदर्चितायै [ओं
एकाग्रचित्तनिर्ध्यातायै
एषणारहिताद्दतायै
एलासुगन्धिचिकुरायै 30
एनःकूटविनाशिन्यै
एकभोगायै
एकरसायै
एकैश्वर्यप्रदायिन्यै
एकातपत्रसाम्राज्यप्रदायै
एकान्तपूजितायै
एधमानप्रभायै
एजदनेकजगदीश्वर्यै
एकवीरादिसंसेव्यायै
एकप्राभवशालिन्यै 40
ईकाररूपायै
ईशित्र्यै
ईप्सितार्थप्रदायिन्यै
ईदृगित्यविनिर्देश्यायै
ईश्वरत्वविधायिन्यै
ईशानादिब्रह्ममय्यै

४ ईशत्वाद्यष्टसिद्धिदायै नमः
ईक्षित्र्यै [ओं
ईक्षणसृष्टाण्डकोट्यै
ईश्वरवल्लभायै 50
ईडितायै
ईश्वरार्धाङ्गशरीरायै
ईशाधिदेवतायै
ईश्वरप्रेरणकर्यै
ईशताण्डवसाक्षिण्यै
ईश्वरोत्सङ्गनिलयायै
ईतिबाधाविनाशिन्यै
ईहाविरहितायै
ईशशक्त्यै
ईषत्स्मिताननायै 60
लकाररूपायै
ललितायै
लक्ष्मीवाणीनिषेवितायै
लाकिन्यै
ललनारूपायै
लसद्दाडिमपाटलायै
ललन्तिकालसत्फालायै

४ ललाटनयनार्चितायै न०
लक्षणोज्ज्वलदिव्याङ्ग्यै
लक्षकोट्यण्डनायिकायै 70
लक्ष्यार्थायै
लक्षणागम्यायै
लब्धकामायै
लतातनवे
ललामराजदलिकायै
लम्बिमुक्तालताञ्चितायै
लम्बोदरप्रसुवे
लभ्यायै
लज्जाढ्यायै
लयवर्जितायै 80
ह्रींकाररूपायै
ह्रींकारनिलयायै
ह्रींपदप्रियायै
ह्रींकारबीजायै
ह्रींकारमन्त्रायै
ह्रींकारलक्षणायै
ह्रींकारजपसुप्रीतायै
ह्रींमत्यै

४ ह्रींविभूषणायै नमः ओं
ह्रींशीलायै 90
ह्रींपदाराध्यायै
ह्रींगर्भायै
ह्रींपदाभिधायै
ह्रींकारवाच्यायै
ह्रींकारपूज्यायै
ह्रींकारपीठिकायै
ह्रींकारवेद्यायै
ह्रींकारचिन्त्यायै
ह्रीं
ह्रींशरीरिण्यै 100
हकाररूपायै
हलधृत्पूजितायै
हरिणेक्षणायै
हरप्रियायै
हराराध्यायै
हरिब्रह्मेन्द्रवन्दितायै
हयारूढासेवितांघ्र्यै
हयमेधसमर्चितायै
हर्यक्षवाहनायै

४ हंसवाहनायै नमः ओं 110
हतदानवायै
हत्यादिपापशमन्यै
हरिदश्वादिसेवितायै
हस्तिकुम्भोत्तुङ्गकुचायै
हस्तिकृत्तिप्रियाङ्गनायै
हरिद्राकुङ्कुमादिग्धायै
हर्यश्वाद्यमरार्चितायै
हरिकेशसख्यै
हादिविद्यायै
हालामदालसायै 120
सकाररूपायै
सर्वज्ञायै
सर्वेश्यै
सर्वमङ्गळायै
सर्वकर्त्र्यै
सर्वभर्त्र्यै
सर्वहर्त्र्यै
सनातन्यै
सर्वानवद्यायै
सर्वाङ्गसुन्दर्यै 130

४ सर्वसाक्षिण्यै नमः ओं
सर्वात्मिकायै
सर्वसौख्यदात्र्यै
सर्वविमोहिन्यै
सर्वाधारायै
सर्वगतायै
सर्वावगुणवर्जितायै
सर्वारुणायै
सर्वमात्रे
सर्वभूषणभूषितायै 140
ककारार्थायै
कालहन्त्र्यै
कामेश्यै
कामितार्थदायै
कामसंजीविन्यै
कल्यायै
कठिनस्तनमण्डलायै
करभोरवे
कलानाथमुख्यै
कचजितार्म्बुदायै 150
कटाक्षस्यन्दिकरुणायै

४ कपालिप्राणनयिकायै नमः
कारुण्यविग्रहायै [ओं
कान्तायै
कान्तिधूतजपावल्यै
कलालापायै
कम्बुकण्ठ्यै
करनिर्जितपल्लवायै
कल्पवल्लीसमभुजायै
कस्तूरीतिलकाञ्चितायै 160
हकारार्थायै
हंसगत्यै
हाटकाभरणोज्ज्वलायै
हारहारिकुचाभोगायै
हाकिन्यै
हल्यवर्जितायै
हरित्पतिसमाराध्यायै
हठात्कारहतासुरायै
हर्षप्रदायै
हविर्भोक्त्र्यै 170
हार्दसंतमसापहायै
हल्लीसलास्यसंतुष्टायै

४ हंसमन्त्रार्थरूपिण्यै नमः
हानोपादाननिर्मुक्तायै [ओं
हर्षिण्यै
हरिसोदर्यै
हाहाहूहूमुखस्तुत्यायै
हानिवृद्धिविवर्जितायै
हय्यंगवीनहृदयायै
हरिगोपारुणांशुकायै 180
लकाराख्यायै
लतापूज्यायै
लयस्थित्युद्भवेश्वर्यै
लास्यदर्शनसंतुष्टायै
लाभालाभविवर्जितायै
लङ्घ्येतराज्ञायै
लावण्यशालिन्यै
लघुसिद्धिदायै
लाक्षारससवर्णाभायै
लक्ष्मणाग्रजपूजितायै 190
लभ्येतरायै
लब्धभक्तिसुलभायै
लाङ्गलायुधायै

४ लग्नचामरहस्तश्रीशारदा-
—परिवीजितायै न०
लज्जापदसमाराध्यायै
लम्पटायै
लकुळेश्वर्यै
लब्धमानायै
लब्धरसायै
लब्धसंपत्समुन्नत्यै 200
ह्रींकारिण्यै
ह्रींकाराद्यायै
ह्रींमध्यायै
ह्रींशिखामणये
ह्रींकारकुण्डाग्निशिखायै
ह्रींकारशशिचन्द्रिकायै
ह्रींकारभास्कररुच्यै
ह्रींकाराम्भोदचञ्चलायै
ह्रींकारकन्दाङ्कुरिकायै
ह्रींकारैकपरायणायै 210
ह्रींकारदीर्घिकाहंस्यै
ह्रींकारोद्यानकेकिन्यै
ह्रींकारारण्यहरिण्यै

४ ह्रींकारावालवल्लयै नमः ओं
ह्रींकारपञ्जरशुक्यै
ह्रींकाराङ्गणदीपिकायै
ह्रींकारकन्दरासिंह्यै
ह्रींकाराम्भोजभृङ्गिकायै
ह्रींकारसुमनोमाध्व्यै
ह्रींकारतरुमञ्जर्यै 220
सकाराख्यायै
समरसायै
सकलागमसंस्तुतायै
सर्ववेदान्ततात्पर्यभूम्यै
सदसदाश्रयायै
सकलायै
सच्चिदानन्दायै
साध्यायै
सद्गतिदायिन्यै
सनकादिमुनिध्येयायै 230
सदाशिवकुटुम्बिन्यै
सकलाधिष्ठानरूपायै
सत्यरूपायै
समाकृत्यै

४ सर्वप्रपञ्चनिर्मात्र्यै नमः ओं
समानाधिकवर्जितायै
सर्वोत्तुङ्गायै
सङ्गहीनायै
सगुणायै
सकलेष्टदायै 240
ककारिण्यै
काव्यलोलायै
कामेश्वरमनोहरायै
कामेश्वरप्राणनाड्यै
कामेशोत्सङ्गवासिन्यै
कामेश्वरालिङ्गिताङ्ग्यै
कामेश्वरसुखप्रदायै
कामेश्वरप्रणयिन्यै
कामेश्वरविलासिन्यै
कामेश्वरतपःसिद्ध्यै 250
कामेश्वरमनःप्रियायै
कामेश्वरप्राणनाथायै
कामेश्वरविमोहिन्यै
कामेश्वरब्रह्मविद्यायै
कामेश्वरगृहेश्वर्यै

४ कामेश्वराह्लादकर्यै नमः ओं
कामेश्वरमहेश्वर्यै
कामेश्वर्यै
कामकोटिनिलयायै
काङ्क्षितार्थदायै 260
लकारिण्यै
लब्धरूपायै
लब्धधियै
लब्धवाञ्छितायै
लब्धपापमनोदूरायै
लब्धाहंकारदुर्गमायै
लब्धशक्त्यै
लब्धदेहायै
लब्धैश्वर्यसमुन्नत्यै
लब्धवृद्ध्यै 270
लब्धलीलायै
लब्धयौवनशालिन्यै
लब्धातिशयसर्वाङ्गसौन्द-
—र्यायै
लब्धविभ्रमायै
लब्धरागायै

४ लब्धपत्यै नमः ओं
लब्धनानागमास्थित्यै
लब्धभोगायै
लब्धसुखायै
लब्धहर्षाभिपूरितायै 280
ह्रींकारमूर्तये
ह्रींकारसौधशृङ्गकपोतिकायै
ह्रींकारदुग्धाब्धिसुधायै
ह्रींकारकमलेन्दिरायै
ह्रींकारमणिदीपार्चिषे
ह्रींकारतरुशारिकायै
ह्रींकारपेटकमणये
ह्रींकारादर्शबिम्बितायै
ह्रींकारकोशासिलतायै

४ ह्रींकारास्थाननर्तक्यै न०
ह्रींकारशुक्तिकामुक्तामणये
ह्रींकारबोधितायै
ह्रींकारमयसौवर्णस्तम्भ-
—विद्रुमपुत्रिकायै
ह्रींकारवेदोपनिषदे
ह्रींकाराध्वरदक्षिणायै
ह्रींकारनन्दनारामनव-
—कल्पकवल्ल्यै
ह्रींकारहिमवद्गङ्गायै
ह्रींकारार्णवकौस्तुभायै
ह्रींकारमन्त्रसर्वस्वायै
ह्रींकारपरसौख्यदायै
नमः ओं 300

४ श्रीमद्राजराजेश्वर्यै नमः ओं ॥

॥ श्रीललितात्रिशतीनामावलिः संपूर्णा ॥

# ஸ்ரீ பிரஹ்ம வித்யா விமர்சினீ சபை வெளியீடுகள்.

ஆசிரியர்—பிரஹ்மஸ்ரீ ந. சுப்ரமணிய அய்யர்.

---

1. ஸ்ரீ நகர விமர்சம். (மூலமும் தமிழுரையும்.)

ஸ்ரீ துர்வாஸ மஹரிஷியா லியற்றப்பட்ட ஸ்ரீ லலிதா ஸ்தவரத்னம். ஸ்ரீ சக்ரத்தின் ஸ்வரூபமும் ஸ்ரீ சக்ரத்தில் உள்ள ஆவரண தேவதை களின் விவரமும். அத்யாத்ம தத்துவமும், சாக்தாத்வைத ஸ்வரூபமும் நன்கு விளக்கப் பட்டிருக்கின்றன. படங்களோடு கூடியது. ... 0 12 0

2. ஸ்ரீ குரு தத்வ விமர்சம். (தமிழ்)

இச்சிறுநூல் குருதத்துவம் எல்லாதத்துவங்களை விடச் சிறந்தது என்பதையும், பாரமார்த்திக (தத்துவாதீத) குருவின் ஸ்வரூபத்தையும், முமுக்ஷுக்களுக்கு குருவின் பரம்பரையின் ஞானம் அத்தியாவசியம் என்பதையும், குருவை எங்ஙனம் தியானிக்க வேண்டும் என்பதையும், நன்கு விளக்குகின்றது. ... 0 5 0

3. ஸ்ரீவரிவஸ்யாரஹஸ்யம். (மூலமும் தமிழ்விரிவுரையும்)

ஸ்ரீபாஸ்கரராயர் இயற்றிய ஓர் ஒப்பற்றநூல். இது உபாஸனையின் ரஹஸ்யத்தையும் ஸ்ரீவித்யாமந்திரத்தின் 15 விதமான அர்த்தங்களையும் விரிவாகக் கூறும் நூல். 1 0 0

4. श्रीविद्यासपर्यापद्धतिः

ஸ்ரீவித்யா பூஜாவிதானம், ஹோமம், நாமாவளி, ஸூக்தங்கள், உபநிஷத்துக்கள் முதலியவைகளுடன் உயர்ந்த கிளேஸ் பேபரில் அச்சிடப்பட்டுள்ளது.

| | | | | |
|---|---|---|---|---|
| சாதா பைண்டு | ... | 2 | 0 | 0 |
| காலிகோ ,, | ... | 3 | 0 | 0 |

5. மனீஷாபஞ்சகம் (மூலமும் தமிழ் விருத்தியுரையும்.) ... 0 5 0

67CB 2

கீழ்க்கண்ட நூல்கள் கூடிய சீக்கிரத்தில் வெளிவரும்.

6. பராபூஜா வாஸனு விமர்சம் (தமிழ்) அச்சில்
7. பிரத்யபிக்ஞா ஸூத்திரம் (மூலமும் உரையும்)
8. காமகலா விலாஸம் ,, ,,
9. ஸ்ரீஸுப்ரஹ்மண்ய தத்துவம் (தமிழில்) ,,
10. ஸ்ரீ காமாக்ஷி படம் Tri-colour big size ... 0-4 0

G. V. கணேச அய்யர் அவர்களால் எழுதப்பட்ட நூல்கள்.

1. ஸௌந்தர்ய லஹரி (மூலமும் தமிழ் உரையும்) ... 1 8 0
2. மூகபஞ்சசதி ஆர்யாசதகம் ... 0 8 0
3. ,, கடாக்ஷ சதகம் ... 0 8 0
4. ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமம் (ஸ்ரீ பாஸ்கரராயரது பாஷ்யத்திற்குத் தமிழுரை) 4-

கிடைக்குமிடங்கள் :—

மானேஜர்

**ஸ்ரீ பிரஹ்ம வித்யா விமர்சினீ சபை.**
178. லாயிட்ஸ் ரோட், ராயப்பேட்டை, சென்னை.

**ஸ்ரீ ஜனார்த்தன பிரிண்டிங் ஒர்க்ஸ் Ltd.,**
டவுன் ஹைஸ்கூல் ரோட்,
கும்பகோணம்.

**N. ராஜம் & கோ,**
புத்தக வியாபாரிகள், 43. புரசைவாக்கம் ஹைரோட்,
வேப்பேரி, சென்னை.